# ஒருசொற்பல்பொருட்டொகுதி

# உரைபாடம்.

இஃது
கையெழுத்துப்புத்தகங்களிலெழுத்துஞ்சொல்லுமாறுபடுகின்றனவற்றைவிலக்கிச்சுத்தபாடமாகவழங்குவிக்கும்பொருட்டுத்திவாகரம் - பிங்கலம் - உரிச்சொன்னிகண்டு - அரும்பொருள்விளக்கத்தீபிகை - ஆசிரியநிகண்டு - கயர்கரம் - பொதியநிகண்டு - சூத்திரவகராதி - இவைமுதலிய நூல்களானும் - ஆரியமொழியானும்.

சென்னைக்கல்விச்சங்கத்துத்
தமிழ்ப்புலவராகிய

## புதுவை - நயநப்ப முதலியாராற்

பரிசோதித்து - அதற்குரைசெய்து - அவ்வுரைக்கு
மேற்கோளுடன்மேற்படிச்சங்கத்துத்
தமிழ்ப்புலவர் -

## திரு - வேங்கடாசலமுதலியாரது

சரஸவதி - அச்சுக்கூடத்திற்
சாலிவாகனசகஞூ - ௲ளருஅல் - நிகழாநின்றமன்மதஞூ
ஆவணிமீ பதிப்பிக்கப்பட்டது.

இதன்விலை - ரூ. ௩ ௨.

# உரைப்பாயிரம்.

## நேரிசையாசிரியப்பா.

வளமலிகடல்சூழ்மாநிலமத - - - னி
னுளநூலெவற்றினுமுறுபயன்யாவையு - - ங்
கற்றுணர்ந்தவருங்கல்லாதவரு - - - ஞ்
சற்றுமுளனிற்றளர்வெய்தாம - - - ல்
வேங்கடங்குமரிமேற்கடல்கீழ்க்க - - - ட
லாங்கவ்வெல்லையுளருந்தமிழ்ப்பௌவ - - த்
திலகுமமிழ்தெனவியைந்திடுமொருசொ - - ற்
பல்பொருட்டொகுதிபகர்பொருளனைத்தையு - ம்
வெளிப்படையாகவிதந்ததற்கோரு - - ரை
யெளிதினுணரவியற்றுதியென் - - - று
மருமலர்ப்பொழிலுமணிதிகழ்மாடமு - - ம்
பெருகுநல்வளங்கள்பிறங்குமாவணமு - - ஞ்
சேலூர்கயமுஞ்செறிந்தெழில்விளங்கு - - ம்
வேலூர்க்கதிபன்வென்றிசேர்மகிப - - ன்
திருமால்பதத்தைச்சிந்தையிலிருத்து - - ம்
பெருமான்றமிழ்மறைபெரிதுணர்பெற்றிய - - ன்
கருணைச்சாகரங்கல்விக்காகர - - - ம்
பொருணனியளிக்கும்புலவர்பொன்மே - - ரு
மேதகுசந்தியப்பன்மெய்த்தவத்தா - - ற்
காதலனாகக்கவினுறத்தோன்றி - - - க்
கோதறுமேழிக்கொடியிணையுயர்த் - - த
நாதமுனிமன்னவின்றனனாக - - - த்
திவாகரமரும்பொருள்விளக்கத்தீபி - - கை

# உரைப்பாயிரம்.

யவாவறவுணர்த்துமாசிரியநிகண் - - - டோ
டலாப்பிங்கலமமர்ந்திடுமுரிச்சொ - - ன்
ணிகண்டுகயாகரநிகழ்த்துமிரேவண - - ர்
சூத்திரம்பொதியநிகண்டெனுந்தொன்னூ - - ன்
மாத்திரமன்றியுமருவுதொல்காப்பி - - - ய
முதனூல்விதிகளைமுழுதுணரறி - - - வா
லிதமுளசொல்வழுப்பொருள்வழுவிலாவ - - கை
யாராய்ந்ததனையமைதிபெறவிரி - - - த்
தோராரிலக்கியமேற்கும்படியு - - - ணா
மேற்கோள்காட்டிமேம்படச்செய்தன - - ன்
பாற்படவிசைத்தபல்கலைப்புலமை - - யு
நாற்றிசையெங்கணுநண்ணியசிறப்பு - - ந்
தோற்றமுமாற்றலுஞ்சோர்விலாநடையு - - ங்
கிளர்பெருஞ்செல்வமுங்கீர்த்தியுமோங் - - இ
வளரவெஞ்ஞான்றும்வயம்பெறுநிபுண - - ன்
கங்கைகுலாதிபன்கடிகமழ்குவ - - - ளை
தங்குபுயாசலன்றருமகுணால - - - ய
னுயர்சீர்ப்புதுவையி[illegible] - - - - ற
நயநப்பனெனுமிய[illegible]பெயர்கொணுவல - - னே.

இஃது

புதுவை - பொன்னுச்சாமிமுதலியாராற்

செய்யப்பட்டது.



# காப்பு.

முடிவிலின்பத்துமூவாமுதல்வனைப்போற்றிசெய் - - தே
யடிதொறுமிரண்டுமொன்றுமாதியிற்பொருளடக் - - - கி
நடைபெறுககரமாதினகரவீற்றெதுகையாக - - - - ப்
படியிலோர்சொற்பொருட்பல்விதத்தொகைபகரலுற்று - ம்.

## இதன்பொருள்

| | |
|---|---|
| முடிவில் - - | அளவில்லாத |
| இன்பத்து - - | இன்பத்தையுடைய |
| மூவா - - - | கெடாத |
| முதல்வனை - - | அருகக்கடவுளை |
| போற்றிசெய்து - | துதிசெய்து |
| அடிதொறும் - | அடிகடோறும் |
| இரண்டும் - - | இரண்டுசொல்லினும் |
| ஒன்றும் - - | ஒருசொல்லினும் |
| ஆதியில் - - - | முதலில். |
| பொருள் - - | பொருள்களை |
| அடக்கி - - - | அமைத்து |
| நடைபெறு - - | நடைபெற்றுவரும் |
| ககரமாதி - - | ககரவெதுகைமுதல் |
| னகரவீற்றெதுகை யாக | னகரவெதுகையிறுதியாக |
| படியில் - - - | இவ்வ[illegible]கண் |
| ஓர்சொற்பொருட் பல்விதத்தொகை | ஒரு[illegible]வகைப்பொருட் [டொகுதியை |
| பகரலுற்றும் - - | சொல்லலுற்றுமென்றவாறு. |



❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁❁

வாணிநமோஸ்து.

# ககரவெதுகை.

விருத்தம்

பகவனேயீசன்மாயோன்பங்கயன்சினனேபுத்த - - - ன்
பகலேநாளொருமுகுர்த்தம்பகலவனடுவேதே - - - - சு
மகரமேசுறுப்பூந்தாதாம்வசிகூர்மைவசியம்வா - - - ளே
யகமனமனேயேபாவமகலிடமுள்ளுமா - - - - - மே.

இதன்பொருள்

(பகவனென்பது) சிவனுக்கும்-திருமாலுக்கும்-பிரமனுக்கும்-அருகனுக்கும் - புத்தனுக்கும்பெயர். (பகலென்பது) நாள் - ஒருமுகுர்த்தகாலம் - சூரியன் - நடு - பிரகாசத்துக்கும்பெயர். (மகரமென்பது) சுறு - பூந்தாதுக்கும்பெயர். (வசியென்பது) கூர்மை - கைவசம் - வாளுக்கும்பெயர். (அகமென்பது) மனம் - வீடு - பாவம் - இடம் - உள்ளுக்கும்பெயரொன்றவாறு.

இச்செய்யுட்குமேற்கோள்

(இரேவணசித்தர்சூத்திரம்) பகவனேசிவன்மாயனுன்முக னருகன்புத்தனுகவைம்பெயரோ) பகலேநாளுநுகத்திலாணியும் பாகுபாடுமிரவியுமொளியு மொருமுகுர்த்தமுநடுச்செயலுமென்றேழ்பெயர்) மகரமேயோரிராசியுங்காதலுஞ் சுறுவும்பூந்தாதுஞ் சொல்லுநாற்பெயரோ) வசியென்பதுவேபோழ்ந்துவடுப்படுத்தலுங் கூர்மையும்வசியமும்வாளுந்திரட்சியும் வருட்டலுங்குற்றமுமருவுமேழ்பெயரோ) அகமேயுள்ளுமகப்பொருடானு மிடமுமனையுமனமும்பாவமு மான்மாவுடனல்லனவுமெண்பெயராம்.

சிகரிகோபுரமேவெற்புச்சீறெலிநாரைநாற்பே - - - - ர்
சிகழிகைமயிர்முடிப்பேர்சிறந்தவாசிகைதேமா - - - லை
சிகரமேமலையினுச்சிதிரைசென்னிதிவலைவெற் - - - - பா
மகம்யாகமோர்நாளென்பமாய்வென்பமறைவுஞ்சாவு - ம்.

இதன்பொருள்

(சிகரியென்பது) கோபுரம் - மலை - எலி - நாரைக்கும்பெயர். (சிகழிகையென்பது) மயிர்முடி - கோத்தமாலை - பூமாலைக்கும் பெயர். (சிகரமென்பது) மலையினுச்சி - அலை - தலை - துளி - மலைக்கும்பெயர். (மகமென்பது) யாகம் - ஓர்நக்ஷத்திரத்துக்கும் பெயர். (மாய்வென்பது) மறைவு - சாவுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

சிகரியேகோபுரமுமெலியு நாரையும்வெற்புநவிற்றுநாற்பெயரோ) (பிங்கலம்) மயிர்முடிவாசிகைகோவைசிகழிகை) சிகரமென்பதுமலையுந்திவலையுந் திரையுஞ்சென்னியுமலையினுச்சியுங் கவரிமாவுங்காக்கையுமேழ்பெயர்) மகமேயாகமோர்நாளிருபெயர்) மாய்வேமறைவுஞ்சாவுமிருபெயர். *உ*

இகல்பகைவலிபோர்முப்பேரிகுளையேதோழிநட்பா - - ம்
புகரொன்பமழைக்கோள்குற்றம்புற்கெனுநிறமுமுப்பே - ர்
நகமலையுகிர்மரப்பேர்நகைமகிழ்வொளிசிரிப்பா - - - ங்
ககனம்விண்படைகாடென்பகடவுடேமுனிநன்மைப்பே - ர்.

இதன்பொருள்

(இகலென்பது) பகை - வலிமை - யுத்தத்துக்கும்பெயர். (இகுளையென்பது) தோழி - சிநேகத்துக்கும்பெயர். (புகரொன்பது) சுக்கிரன் - குற்றம் - கபிலநிறத்துக்கும்பெயர். (நகமென்பது) மலை - நகம் - மரத்துக்கும்பெயர். (நகையென்பது) மகிழ்ச்சி - பிரகாசம் - சிரிப்புக்கும்பெயர். (ககனமென்பது) ஆகாயம் - சேனை - காட்டுக்கும்பெயர். (கடவுளென்பது) தெய்வம் - முனிவன் - நன்மைக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

இகலேபகைவலியோரெனமூன்றே) இகுளையென்பதுதோழியு

நட்பும்) புகரோபுன்மைநிறமுங்குற்றமுஞ் சுக்கிரனெனவுஞ்சொ
ல்லுமுப்பெயரோ) நகமேமலையுகிர்மரமுமுப்பெயரோ) நகையே
மகிழ்வுமொளியுஞ்சிரிப்பு மிகழ்ச்சியுமலர்ச்சியும்பல் லுமென்று
றே) ககனமென்பதுவிண்ணும்படையுங் காடும்பலபுள்ளொடு
நாற்பெயரோ) கடவுளேமுனியுந்தெய்வமுநன்மையும். *௫*

சாகஞ்சாகினிவெள்ளாடுதேக்கெனுந்தருவேதே - - - னீ
பாகமேலகாரவல்லிபலாவென்றும்பகரலா - - - - மே
பூகமேகருங்குரங்கோடுட்பொருளுணர்தறர்க் - - - க
நாகம்விண்குரங்குபுன்னைநற்றாசுமலைபாம்பியா - - னை.

இதன்பொருள்

(சாகமென்பது) சிறுகீரை - வெள்ளாடு - தேக்கமரம் - தேனீக்கும்பெயர். (பாகலென்பது) பாகல் - பலாமரத்துக்கும்பெயர். (பூகமென்பது) கருங்குரங்கு - அகப்பொருளறிதல் - தருக்கத்துக்கும்பெயர். (நாகமென்பது) ஆகாயம் - குரங்கு - புன்னைமரம் - நல்லாடை - மலை - பாம்பு - யானைக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

சாகமேவெள்ளாடுந்தேக்குங் கீரையுந்தாழையுந்தேனீயுமைம்பெயர்) பாகலென்பதுகாரவல்லியும் பலாவுமெனவேபகருமிருபெயர்) பூகமுட்பொருளுணர்தலுந்தர்க்கமு முடற்குறையுங்கருங்குரங்குமோர்புல்லும் பூகமுங்கோட்டானுமுரைத்தனரோ) நாகமேகாரீயமுஞாழலும் விண்ணொடுநற்றாசுமோசையும் வெற்புமுரகமுமிபமும்புன்னையும் விண்ணுங்குரங்குமெனப்பதினொருபெயர். *௪*

திகிரியேமூங்கில்வட்டந்தேருருளாழிவெற்பா - - - ஞ்
சிகியென்பமஞ்ஞைதீயாந்தீதுறுகேதுவும்பே - - - ர்
ஞெகிழியேசிலம்பினுமநெருப்புறுகொள்ளிக்கும் - - பே
ரகினமேபுளிமாஞாளிகவரிமாநீர்நாயன்ன - - - - ம்.

இதன்பொருள்

(திகிரியென்பது) மூங்கில் - வட்டவடிவு - தேர் - தேருருளை - சக்கராயுதம் - மலைக்கும்பெயர். (சிகியென்பது) மயில - நெருப்பு -

கேதுவெனுமோர்கோளுக்கும்பெயர். (ஞெகிழியென்பது) சிலம்பு - நெருப்புறுவிறகுக்கும்பெயர். (எகினமென்பது) புளிமாமரம் - நாய் - கவரிமான் - நீர்நாய் - அன்னப்புள்ளுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

திகிரிமலைதேருருளையாழி வட்டமுங்கிற்றேறொனவாறே) சிகியே
மயிலுந்தீயுங்கேதுவும் பரிபுரமெனவும்பகருநாற்பெயரே) ஞெ
கிழிதானேசிலம்புந்தீயுங் கொள்ளிவிறகுங்கூறுமுப்பெயரே) எகி
னமென்பதுபுளிமாமரமு மன்னப்புள்ளுங்கவரிமாவும் புள்ளிமா
னுநீரினாயு முடுவலுமெனவேமொழியுமறுபெயர். *௫*

ஆகுவேயெலியினுமமாம்பெருச்சாளிக்கும்பே - - - ர்
யோகமேதியானங்கூட்டமுபாயமாமுயர்ச்சிக்கும்பே - - ர்
போகியிந்திரன்பாம்பென்பபோகில்புட்பொதுப்பூமொட்டாங்
கோகிலங்குயில்பல்லிப்பேர்குடங்கரோகுடிசைகும்ப - - ம்.

இதன்பொருள்

(ஆகுவென்பது) எலி - பெருச்சாளிக்கும்பெயர். (யோகமென்பது) தியானம் - கூட்டம் - உபாயம் - உயர்ச்சிக்கும்பெயர். (போகியென்பது) தேவேந்திரன் - பாம்புக்கும்பெயர். (போகிலென்பது) பறவைப்பொது - பூவரும்புக்கும்பெயர். (கோகிலமென்பது) குயில் - பல்லிக்கும்பெயர். (குடங்கரென்பது) குடிசை - குடத்துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

ஆகுவேபெருச்சாளியுமெலியுங் கொப்பூழெனவுங்கூறுமுப்பெ
யரே) யோகமென்பதுயர்ச்சியுமுபாயமுந் தியானமுங்கூட்ட
முங்கூடலுமைம்பெயர்) போகியிந்திரன்பாம்பிருபெயரே)
போகிலென்பதுபுட்பொதுவுங்கொப்பூழும் பூமொட்டெனவும்
போற்றுமுப்பெயரே) கோகிலமென்பதுகுயிலும்பல்லியுந் து
ளையுமந்தியுஞ்சொல்லுநாற்பெயரே) குடங்கர்தானேகுடிசையுங்
கும்பமும். *௬*

[சொப்பு
பொருட்டுச்தாமரைப்பூங்கொட்டைபொருட்புச்சேற்றெழுந்த
ளிருத்தலேசெருத்தல்ீந்தலிரித்தலோடமைத்தலித - ல்
புகைகிடுநாமந்தூமம்போற்றும்யோசனைக்கும்பே - ரே
யகைத்தல்வேதனையொடித்தலறுத்திடலுயர்த்தலா - - மே.

இதன்பொருள்

(பொருட்டென்பது) தாமரைக்கொட்டை - மலை - சேற்றிலெழு ங்குமிழிக்கும்பெயர். (இருத்தலென்பது) கொல்லுதல் - தள்ளு தல - சாய்த்தல் - அழைத்தல் - கொடுத்தலுக்கும்பெயர். (புகை யென்பது) புகை - யோசனைதூரத்துக்கும்பெயர். (அகைத்தலெ ன்பது) வருத்தம் - முறித்தல் - அறுத்தல் - உயர்த்தலுக்கும்பெ யரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

பொருட்டென்பதுதாமரைப்பூங்கொட்டையுஞ் சேற்றிற்குமிழி யும்வெற்புமுப்பெயரோ) இருத்தலென்பதுசெருத்தலும்ீந்த் தலு மீதலுமழைத்தலுமிரித்தலுந்துடைத்தலும் வருந்துவித்த லுந்தாழ்த்தலுமெண்பெயர்) புகையேயோசனைதூமமிருபெ யர்) அகைத்தலேவேதனையுமொடித்தலு மறுத்தலுமுயர்த்தலு மாகுநாற்பெயரே.

*எ*

சிக்கமேகுடுமிநாமஞ்சீப்புடனுறியுமேற்கு - - - - ங்
கொக்குமாமரமேசெந்நாய்குரண்டமேமூலநாளா - - ம்
வக்கிரங்கொடுமைமீளன்மடங்குதலுடனேவட்ட - - ஞ்
சக்கிரிகுயவன்செக்கான்றராபதிநெடுமால்பாம் - - - பு.

இதன்பொருள்

(சிக்கமென்பது) குடுமி - சீப்பு - உறிக்கும்பெயர். (கொக்கென் பது) மாமரம் - செந்நாய் - கொக்கு - மூலநக்ஷத்திரத்துக்கும் பெயர். (வக்கிரமென்பது) கொடுமை - மீளுதல் - மடங்குதல் - வட்டத்துக்கும்பெயர். (சக்கிரியென்பது) குசவன் - செக்கான் - அரசன் - திருமால - பாம்புக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

சிக்கமேயுறியுஞ்சிறையுமெலிவுங் குடுமியுஞ்சீப்புடனுச்சியுமறு பெயர்) கொககேகுதிரையுமூலநாளு மாமரமுடனேவருசெந்நா

யு மோர்புள்ளெனவுமோதுமைம்பெயரே) (அரும்பொருள்விளக்கத்தீபிகை) வக்கிரங்கொடுமைமீளன்மடங்கல்பொய்நிமிர்தல்வட்டம்) சக்கிரிதானேசெக்கானரசன் மாயனுரகங்குயவனென்றைம்பெயர்.
*௮*

தூக்கென்பபாட்டுங்கூத்துந்துலாமுமாராய்தலும்பே - ர்
பாக்கென்பதெதிர்காலத்தைப்பகரிடைச்சொற்றுவர்க்கா - ய்
மேக்குமேற்றிசைமேலும்பேர்மெய்யுண்மையுடலுமா - மே
யூக்கமேவலியுற்சாகமுள்ளத்திண்மிகுதிக்கும்பே - - - ர்.

இதன்பொருள்

(தூக்கென்பது) செய்யுள் - கூத்து - நாறுபலம் - ஆராய்தலுக்கும் பெயர். (பாக்கென்பது) எதிர்காலவிடைச்சொல் - பாக்குகதகும் பெயர். (மேக்கென்பது) மேற்றிசை - மேலுக்கும்பெயர். (மெய்யென்பது) நிசம் - சரீரத்துக்கும்பெயர். (ஊக்கமென்பது) வலிமை - உற்சாகம் - உள்ளக்கிளர்ச்சிக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

தூக்கென்பதுவேதூக்கணங்குருவியு நிறுத்தலுமாசாரியனுங்களமுந் தொங்கலுங்கவியுங்கூத்துந்துலாமு மாராய்தலுமெனவாகுமொன்பான்பெயர்) பாக்கெதிர்காலத்திடைச்சொலும்பாக்கும்) மேக்கேமேலுமேற்குமிருபெயர்) மெய்யேயுடலுமுண்மையுமொற்றுஞ் சொற்பொருளெனவுஞ்சொல்லுநாற்பெயரே) ஊக்கமென்பதுவேயுயர்ச்சியும்வலியு முள்ளமிகுதியுமுற்சாகத்திறே னுண்மையுமென்றேயுரைக்குமைம்பெயரே. *௯*

பகடிபம்பெருமையேறுபஃறியாண்மேதியைம்பே - - ர்
தகடிலையம்மையென்பதபனனேயிரவிதீ - - - - யா
மகடென்பநடுவேகுக்கியருளென்பகருணைசத் - - - தி
மகரந்தங்கள்ளூற்தேனுமலர்த்தாதும்வழங்குமுப்பே - ர்.

இதன்பொருள்

(பகடென்பது) யானை - பெருமை - எருது - ஓடம் - எருமைக்கடாவுக்கும்பெயர். (தகடென்பது) இலை - அச்சவடிவுக்கும்பெயர். (தபனனென்பது) சூரியன் - நெருப்புக்கும்பெயர். (அகடென்

பது) நடு - வயிற்றுக்கும்பெயர். (அருளென்பது) கிருபை - சிவசத்திக்கும்பெயர். (மகரந்தமென்பது) கள் - தேன் - பூந்தாதுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

பகடேயானையுங்கடாவுமெருது மோடமும்பெருமையுமோதுமைம்பெயரோ) நகடேயைம்மையுமிலையுமிருபெயர்) நயனனேநியிரவியிருபெயர்) அகடென்பதுவேநடுவும்வயிறும் பொல்லாங்கெனவும்புகலுமுப்பெயரோ) அருளேகிருபையுஞ்சிவசத்தியுமாம்) மகரந்தமேபூந்தேனுங்கள்ளு மலர்த்தாதெனவும்வழங்குமுப்பேயரோ. *ம*

சகுந்தம்புட்பொதுநீள்பூகஞ்சடையென்பவேணிவெரா - ஞ்
சிகண்டியேபாலையாழின்றிறத்திசைமயிலலிப்பே - - - ர்
சகுனிபுண்ணிமித்தம்பார்ப்போன்சமமென்பதமொப்பாகு ஞ்
சகுனமேகிழங்குபுள்ளின்சாதியுநிமித்தமும்பே - - - ர்.

இதன்பொருள்

(சகுந்தமென்பது) பறவைப்பொது - கழுகுக்கும்பெயர். (சடையென்பது) சடை - வேருக்கும்பெயர். (சிகண்டியென்பது) பாலையாழின்றிறத்தோரிசை - மயில் - பேடிக்கும்பெயர். (சகுனியென்பது) பறவை - சகுனம்பார்ப்பவனுக்கும்பெயர். (சமமென்பது) யுத்தம் - உவமைக்கும்பெயர். (சகுனமென்பது) கிழங்கு பறவைச்சாதி - சகுனத்துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

சகுந்தமேபறவைப்பொதுப்பேரும் பூகமுமென்றேபோற்றுமிருபெயர்) சடையேவேருஞ்சடையுமிருபெயர்) சிகண்டிபாலையாழிறனிசையு மஞ்ஞையுமலியும்வழங்கலாகும்) சகுனியேநிமித்தம்பார்ப்போனும் பறவையெனவும்பகருமிருபெயர்) சமமேயொப்புஞ்சங்கிராமமுமாம்) சகுனமென்பதுநிமித்தமுங்கிழங்கும் புள்ளுமெனவேபோற்றுமுப்பெயரோ. *மக*

சக்கரம்பெருமையோர்புட்டரணியேபிறப்புவட் - - - ட்
மிக்கதேருருளேயாழிவரையெனவிளம்புமெண்பே - - ர்

பக்கம்புட்சிறகுநட்புப்பகர்திதியருகுமா - - - - கு
நக்கனேயருகன்சம்புதிருவாணிநாட்டுமுப்பே - - - ர்.

இதன்பொருள்

(சக்கரமென்பது) பெருமை - ஓர்பறவை - பூமி - பிறப்பு - வட்ட வடிவு - தேருருளை - கடல் - மலைக்கும்பெயர். (பக்கமென்பது) பறவையினிறகு - சிநேகம் - பிரதமைமுதலியதிதி - பக்கத்துக்கு ம்பெயர். (நக்கனென்பது) அருகன் - சிவன் - திகம்பரனுக்கும் பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

சக்கரந்தானேமலையுமாழியும் பூமியும்வட்டமும்பிறப்புமோர்பு ள்ளுந் தேரினுருளும்பெருமையுமெண்பெயர்) பக்கமென்பது பறவையினிறகு நட்புந்திதியுமருகுநாற்பெயரோ) நக்கனென்ப துமேவசிவனுமருகனு திருவாணியுமெனநிகழ்த்தமுப்பெயரோ.

*டுஉ*

பூகமேதிரளைபூகப்புன்கணென்பதுநோய்துன்ப - - - ம்
வாகுவேயழகுந்தோளாமாசியேமகமோர்மாத - - - ம்
யாகமேபிச்சைபங்காம்பயோதரம்புயலேகொங் - - கை
வாகைபண்பொழுககம்வெற்றிதவந்தொழில்வழங்கன்மிக்கா - ம்.

இதன்பொருள்

(பூகமென்பது) திரண்டவடிவு - கமுகமரத்துக்கும்பெயர். (புன் கணென்பது) வியாதி - துன்பத்துக்கும்பெயர். (வாகுவென்ப து) அழகு - புயத்துக்கும்பெயர். (மாசியென்பது) மகநக்ஷத் திரம் - ஓர்மாதத்துக்கும்பெயர். (யாகமென்பது) பிச்சை - பங்குக்கும்பெயர். (பயோதரமென்பது) மேகம் - முலைக்கும் பெயர். (வாகையென்பது) குணம் - ஒழுக்கம் - விசயம் - தவம் - வேலை - கொடுத்தல் - மிகுதிக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

பூகமென்பதுகூந்தற்கமுகுந் திரளையுங்கமுகுஞ்செப்புமுப்பெ யரோ) புன்கணென்பதுமெலிவுநோயுந் துன்பமுமெனவேசொ ல்லுமுப்பெயரோ) வாகுவேயழகுந்தோளுமிருபெயர்) மாசியே மகநாளுமோர்மாதமும்) (அ - கை) யாகமேபாதியின்பேர்பல

கூமூர்கணிதம்பிச்சை) பயோதரமென்பதுமுலைபுயவிருபெயர்) வாகையென்பதுவேயறத்தின்றுறையு மோர்மரமுடனேமிகுதிபெறுதலுங் கைவலமுதலாங்கல்வியுமுண்மையு மாள்வினைமுதலாஞ்செய்கையுநலனு மொருவரினொருவர்வென்றியுமொழுக்கமுந் தவமுஞ்சால்புமுதலாம்பண்பு மீகையுமெனப்பன்னிருபெயராமே. *௰௩*

நோக்கென்பதழகுபார்வைநுதலென்பபுருவநெற் - - றி
சேக்கையேமிருகந்துஞ்சுமிடமுலைசிறந்தபாய - - - ல்
பூக்கமேகமுகூறொன்பபுலிங்கந்தீப்பொறியூர்ப்புள் - - ளா
மாக்கம்பூமகள்செல்வப்பேரறல்கருமணனீரா - - - மே.

இதன்பொருள்

(நோக்கென்பது) அழகு - கண்ணுக்கும்பெயர். (நுதலென்பது) புருவம் - நெற்றிக்கும்பெயர். (சேக்கையென்பது) விலங்கின்படுக்கையிடம் - முலை - பாயலுக்கும்பெயர். (பூக்கமென்பது) கமுகமரம் - ஊர்க்கும்பெயர். (புலிங்கமென்பது) நெருப்புப்பொறி - ஊர்க்குருவிக்கும்பெயர். (ஆக்கமென்பது) இலக்குமி - செல்வத்துக்கும்பெயர். (அறலென்பது) கருமணல் - நீருக்கும்பெயரென்றவாறு.

இதற்குமேற்கோள்

நோக்கேயழகும்விழியுமிருபெயர்) நுதலேநெற்றியும்புருவமுமிருபெயர்) சேக்கைமிருகந்துஞ்சிடமுமுலையுந் தழும்பும்பாயலுஞ்சாற்றலாகும்)(பி-ம்) பூகமுமதுவுமூரும்பூக்கம்)(பி-ம்)பொறியுமூர்க்குருவியும்புலிங்கமாகும்) ஆக்கஞ்செல்வமுந்திருமகளுமாகும்) (திவாகரம்) அறலேலவிழவுநீருநீர்த்திரையுந் திரையலைத்தாறுநுண்கருமணலுமாகும். *௰௪*

சிகரங்கரகம்விசுங்கவரியுந்திவலையும்பே - - - - - ர்
சாகரந்துயிலொழித்தல்சமுத்திரமிருபேர்சாற்று - - - ங்
காகுளிதவிசுகண்டத்தெழுமொலியிசையுங்காட் - - - டு
மீகைபொன்கொடையிண்டைப்பேரிரவிமேயமலையாதித்த - ன்.

இதன்பொருள்

(சீகரமென்பது) கரகம் - சாமரம் - துளிக்கும்பெயர். (சாகரமென்பது) நித்திரையொழிப்பு - கடலுக்கும்பெயர். (காகுளியென்பது) ஆச்சனம் - மிடற்றெழுமோசை - இசைக்கும்பெயர். (ஈகையென்பது) பொன் - கொடுத்தல் - இண்டங்கொடிக்கும்பெயர். (இரவியென்பது) மலை - சூரியனுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

சீகரமென்பதுதிவலையுங்கரகமுங் கவரியுமெனவேகாட்டுமுப்பெயரோ) சாகரமென்பதுதுயிலொழிந்திடலுங் கடலுமெனவேகாட்டுமிருபெயர்) காகுளியேமிடற்றெழுதருமொலியு மிசையுந்தவிசுமென்றிசைக்குமுப்பெயரோ) (அந்தத்திற்பொருள்) கொடையிண்டுபொன்னிம்முப்பேர்கூறுங்காலீகையென்ப) இரவியேமலைசூரியனிருபெயர்.

*௰௫*

நகையென்பதழகுபண்புதயையொடுபெருமைநாற் - பே
ரகியென்பதரவிரும்பாமரிட்டமேகள்ளுக்காக் - - - கை
ககமென்பதம்புபுள்ளாங்கடுத்தலொப்பையம்வே - - க
மகவல்பாமயிற்குரல்கூத்தந்தமேயழகீறென் - - - ப.

இதன்பொருள்

(நகையென்பது) அழகு - குணம் - அன்பு - பெருமைக்கும்பெயர் - (அகியென்பது) பாம்பு - இரும்புக்கும்பெயர். (அரிட்டமென்பது) கள் - காக்கைக்கும்பெயர். (ககமென்பது) அம்பு - பறவைக்கும்பெயர். (கடுத்தலென்பது) உவமை - சந்தேகம் - சீக்கிரத்துக்கும்பெயர். (அகவலென்பது) ஓர்பா - மயிலொலி - ஆடலுக்கும்பெயர். (அந்தமென்பது) அழகு - முடிவுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

நகையேயழகுமன்பும்பண்பும் பெருமையுமிளப்பும்பேசிடுமைம்பெயர்) அகியேயுரகமுமிரும்புமாகும்) அரிட்டமென்பது கள்ளுங்காக்கையும்வேம்புமெனவேவிதிக்குமுப்பெயரோ) ககமேகணையும்புள்ளுமாகும்) கடுத்தலென்பதையமும்வேகமு முவமையுமெனவேயோதுமுப்பெயரோ) அகவருநேர்பாவுமாடலு மயிற்குரலெனவுமருவுமுப்பெயரோ) (தி-ம்) அந்தமீறுமழகுமாகும்.

*௰௬*

அக்கென்பவிடைமுரிப்புமணிசங்குமணியுமா - - - கு
நக்கலேநகையுண்டற்பேர்ஞாட்பமர்பாரங்கூட் - - - ட
மிக்கென்பகரும்புகள்ளாமீரமேகுளிர்ச்சியன் - - - பு
மக்கண்மானுடர்சிறார்பேர்வனாதலேகொள்ளனீக்க - - ல்.

இதன்பொருள்

(அக்கென்பது) இடபத்தின்முரிப்பு - சங்குமணிக்கும்பெயர். (நக்கலென்பது) சிரிப்பு-புசித்தலுக்கும்பெயர். (ஞாட்பென்பது) யுத்தம் - கனம் - கூட்டத்துக்கும்பெயர். (இக்கென்பது) கரும்பு - கள்ளுக்கும்பெயர். (ஈரமென்பது) குளிர்ச்சி - அன்புக்கும்பெயர். (மக்களென்பது) மனிதர் - பிள்ளைகட்கும்பெயர். (வனாதலென்பது) கொள்ளுதல் - தள்ளுதலுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

அக்கென்பதுவேவிடையின்முரிப்புஞ் சங்குமணியுஞ்சாற்றுமிருபெயர்) (அ-கை)நக்கலேயொளியேசொன்றிநகைத்திடலுடன்றின்றற்பேர்) ஞாட்பென்பதுவேபூசலுங்கூட்டமும் பாரமுமெனவேபகருமுப்பெயரோ) இக்கேகரும்பொடுகள்ளெனவிருபெயர்) ஈரமென்பதுகுளிர்ச்சியுமன்பும் வனப்பும்பகுதியுமறிவுமென்றைம்பெயர்) மக்கண்மானுடருஞ்சிறாருமாகும்) வனாதலென்பதுகொள்ளலுநீக்கலு மெழுதலுமெனவேயிசைக்குமுப்பெயரோ. *மஎ*

கேகயமஞ்ஞையோர்பண்ணசுணமாக்கிளத்துமுப்பே - ர்
தோகையேமயில்வான்மஞ்ஞைவிலங்கின்வால்சொல்லுமுப்பேர்
போகமேபாம்பின்மெய்யும்போகத்தின்விகற்புமாகு - ம்
போகுதனெடுமைநேர்மைபோகுதலெனுமுப்பே - - ரே.

இதன்பொருள்

(கேகயமென்பது) மயில் - ஓர்பண் -அசுணப்புள்ளுக்கும்பெயர். (தோகையென்பது) மயில்வால் - மயில் - மிருகத்தின்வாலுக்கும்பெயர். (போகமென்பது) பாம்பினுடல் - போகத்தின்வேறுபாட்டுக்கும்பெயர். (போகுதலென்பது) நீளம் - நேர்மை - போதலுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

(அ-கை) சேகயமசுணமஞ்ஞைஞிளந்தபாட்டோர்தேயம்வில்)
(அ-கை) தோகையேவான்றன்றூனைசுர்ருராறாவிமஞ்ஞை வாகைசேறொழிற்பதாகைமயிற்பீலியுடனேயேற்பேர்) போகமென்பதுபாம்பின்மெய்யம் போகத்தின்விகற்பமென்னவும்புகலும்) போகுதலென்பதுநெடுமையுநேர்மையும் போகுதலுடனேபுகலுமுப்பெயரே. *௰அ*

கைக்கிளையிசைவிகற்பமொருதலைக்காமமும்பே - - - ர்
சுக்கைதாரகைமாலைப்பேர்சூத்திரம்பொறிநூனூற் - - பா
வெக்கமோசொரிதலோடுகுவிதலுமிருபேரொன் - - - ப
மொக்குளேகுமிழிபூவின்முகுளமொழியலா - - மே.

இதன்பொருள்

(கைக்கிளையென்பது) இராகத்தின்வேறுபாடு - ஒருதலைக்காமத்திற்கும்பெயர். (சுக்கையென்பது) நக்ஷத்திரம் - பூமாலைக்கும்பெயர். (சூத்திரமென்பது) இயந்திரம் - பஞ்சிநூல் - இலக்கணச்சூத்திரத்திற்கும்பெயர். (எக்கமென்பது) சொரிதல் - குவிதலுக்கும்பெயர். (மொக்குளென்பது) நீர்க்குமிழி - பூவரும்புக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

கைக்கிளைதானேயாழினரம்பு மொருதலைக்காமமுமோதுமிருபெயர்) சுக்கையேவான்மீனுமாலையும்) சூத்திரமென்பதுபொறியுநூலு நூற்பாவெனவுநுவலுமுப்பெயரே) (பி-ம்) குவிதலுஞ்சொரிதலுமெக்கமொன்ப) (பி-ம்) பூவின்மொட்டுங்குமிழியுமொக்குள். *௰சு* ககரவெதுகை * முற்றிற்று. *

ஙகரவெதுகை.

புங்கமேயுயர்ச்சியம்புபொருமட்டற்குறைமுட்பே - - ரோ
திங்களர்புலிமாதப்பேர்சித்திரனேவன்றச்ச - - - - ன்
சங்கென்பவரம்பின்பக்கங்கருந்தினைபருந்துமா - - - மே
தொங்கலேபீலிகுஞ்சந்தூக்கொடுதொடுத்தமா - - லை.

இதன்பொருள்

(புங்கமென்பது) உயரம் - அம்பு - அம்புக்குதைக்கும்பெயர். (திங்களென்பது) சந்திரன் - மாதத்திற்கும்பெயர். (சித்திரனென்

பது) சித்திரகாரன் - தச்சனுக்கும்பெயர். (கங்கென்பது) வரம்பின்பக்கம் - கருந்தினை - பருந்துக்கும்பெயர். (தொங்கலென்பது) பீலிக்குஞ்சம் - தூக்கு - தொடுத்தமாலைக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

புங்கமேநற்றாசுங்கணையு மம்பின்குதையுமுயாமுநாற்பேர்) திங்களேமதிமாதமிருபெயர்) சித்திரனேயோவியனுந்தச்சனும்) (அ - கை) கங்கென்பவரம்பின்பக்கங்கருந்தினைகழுகேபாரும்) தொங்கல்பீலியும்பீலிக்குடையு மாலையுங்குஞ்சமுந் தூக்கும்வெண்குடையும் பங்கியுந் துக்கமும்பகரலாகும். ௧

சங்கமேகணைக்காலோரொண்சவைசங்குபுலவர்நெற் - - றி
பங்கென்பமுடமேயாகும்பாதியுஞ்சனியுமேற்கு - - - ம்
வங்கமேவெள்ளிநாவாய்வழுதலையீயமா - - - - மே
யங்கணஞ்சேறுமுற்றமாஞ்சலதாரைக்கும் - - - பேர்.

இதன்பொருள்

(சங்கமென்பது) கணைக்கால் - ஓரிலககம் - கூட்டம் - சங்கு - புலவர் - நெற்றிக்கும்பெயர். (பங்கென்பது) முடம் - பாதி - சனிக்கும்பெயர். (வங்கமென்பது) வெள்ளி - மரக்கலம் - வழுதலை - ஈயத்துக்கும்பெயர். (அங்கணமென்பது) சேறு - முன்றில - சலதாரைக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

சங்கமெனும்பெயர்சவையும்புணர்ச்சியுங் கணைக்காலுஞ்சங்கும் வளையுநெற்றியும் புலவருமன்புமோரொண்ணுமாகும்) (பி - ம்) பாதியுஞ்சனியுமுடமும்பங்கெனல் கூறுமதற்குக்கொள்ளலுமாகும்) வங்கமென்பதுவழுதலையீயம் வெள்ளிநாவாய்கருத்தெனவைந்தே) அங்கணம்மேசலதாரையுஞ்சேறு முற்றமுமெனவேமுப்பெயராகும். ௨

ஞாங்கர்வேல்பக்கமுன்புமேலெனநான்குமாகு - - - ந்
தூங்கலேநிருத்தம்யானைதுயில்சோம்புதராசுதாழ்த - - ல்
ஷாங்கலேவளைத்தல்கொள்ளல்வையென்பகூர்மைவைக்கோ - ல்

வேங்கைபொன்புலிமரப்பேர்வீநீக்கம்பூப்புட்சாவா - - ம்.

இதன்பொருள்

(ஞாங்கரென்பது) வேலாயுதம் - பக்கம் - முன்பு - மேலுக்கும் பெயர். (தூங்கலென்பது) கூத்து - யானை - நித்திரை - சோம்பல் - தராசு - தாழ்தலுக்கும்பெயர். (வாங்கலென்பது) வளைத்தல் - கொள்ளுதலுக்கும்பெயர். (வையென்பது) கூர்மை - வைக்கோலுக்கும்பெயர். (வேங்கையென்பது) பொன் - புலி - ஓர்மரத்துக்கும்பெயர். (வீயென்பது) நீக்கம் - மலர் - பறவை - சாவுக்கும் பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

ஞாங்கர்தானேவேலுமிடமும் பக்கமுமுன்புமேலுமென்றைம் பெயர்) தூங்கலென்பரியானையுங்கூத்துமோ ரோசையுந்தராசுந் துயிலுந்தாழ்வுஞ் சோம்புமெனவேசொல்லுமேழ்பெயரோ) வாங்கருமேனகொள்ளலும்வளைத்தலும்) (தி - ம்) நெல்லின்றாளும் புல்லுங்கூர்மையுஞ் சொல்லின்மூன்றும்வையென்றாகும்) வேங்கையென்பதோர்மரமும்புலியும் பொன்னுமெனவேபோற்று முப்பெயரோ) வீயென்பதுவேநீக்கமுஞ்சாவும் பூவும்புள்ளும் போற்றுநாற்பெயரோ. *௩*

மங்குல்காரிருள்விண்முப்பேர்மருந்தமுதொடுமருந்தா - ம்
பங்கியேபிறமயிர்க்கும்பகருமாண்மயிர்க்கும்பே - - ரா
மங்கதம்பன்னகந்தோளணியுடன்வசைச்சொல்லாகு - - ம்
பங்கமேசேறுதூசுபழுதொடுபின்னமா - - - - மே.

இதன்பொருள்

(மங்குலென்பது) மேகம் - இருள் - ஆகாயத்துக்கும்பெயர். (மருந்தென்பது) அமுதம் - மருந்துக்கும்பெயர். (பங்கியென்பது) பிறமயிர் - குடுமிகளும்பெயர். (அங்கதமென்பது) பாம்பு - வாகுவலயம் - வசைச்சொல்லுக்கும்பெயர். (பங்கமென்பது) சேறு - வஸ்திரம் - குற்றம் - வேறுபாட்டுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

மங்குலென்பதுமேகமுமிருளும் விண்ணுமெனவேவிரிக்குமுப் பெயரோ) மருந்தென்பதுவேயமுதமுமருந்தும் புதற்புல்லெல்லா

வும்போற்றும்பெயரே) பங்கியேபிறமயிருமாண்மயிரும்)
அங்கதமேதோளணியொடுபொய்யு மார்புமுரகமும்வசைச்சொ
லுமைந்தே) பங்கமென்பதுமுடமும்பின்னமுஞ் சேறுந்தாக
ந்தோமுமைம்பெயரே. *௪*

அங்கமேயுடலுறுப்பென்பாறங்கங்கட்டிலேம்பே - - - ர்
பிங்கலம்பொன்னும்பொன்னிறத்தையும்பேசலாகு - - ம்
பொங்கரோமரத்தின்கோடுபொருப்புபரிலவுமுப்பே - - ர்
பொங்கலேகொதித்தன்மிக்காம்பொச்சாப்புமறவிதீதா - ம்.

இதன்பொருள்

(அங்கமென்பது) உடல் - அவயவம் - எலும்பு - வேதாங்கம் - கட்டிலுக்கும்பெயர். (பிங்கலமென்பது) பொன் - பொன்னிறத்துக்கும்பெயர். (பொங்கரென்பது) மரக்கொம்பு - மலை - இலவமரத்துக்கும்பெயர். (பொங்கலென்பது) பொங்குதல் - மிகுதிக்கும் பெயர். (பொச்சாப்பென்பது) மறதி - பொல்லாங்குக்கும்பெயரென்றவாறு.

இதற்குமேற்கோள்

அங்கமேயாறங்கமுமென்பு முறுப்புங்கட்டிலுமுடலுமைம்பெயரே) பிங்கலம்பொன்னும்பொன்னிறமும்) பொங்கரோமலையுஞ்சோலையுமிலவமு மரக்கொம்புடனேமருவுநாற்பெயரே) பொங்கலென்பதுதான் பொங்குதலுடனே மிகுதியுமெனவேவிளம்புமிருபெயர்) பொச்சாப்பேபொல்லாங்குமறவியும். *௫*

ஙகரவெதுகைமுற்றிற்று.

சகரவெதுகை.

பாசனமென்பசுற்றம்பாண்டமுண்கலமும்பன்னு - - - ம்
வாசமேயிருப்பிடம்பூமணம்புள்ளின்சிறகுதூசா - - - ம்
கோசமேமதிலுறுப்பாண்குறிமுட்டைமுறைபண்டார - ந்
தேசிகன்வணிகன்றேசாந்தரியொடுகுருவுமா - - - மே.

இதன்பொருள்

(பாசனமென்பது) உறவு - பாத்திரம் - உண்கலத்துக்கும்பெயர். (வாசமென்பது) இருப்பிடம் - பூமணம் - பறவையினிறகு - வஸ்திரத்துக்கும்பெயர். (கோசமென்பது) மதிலுறுப்பு - ஆண்குறி - முட்டை - புத்தகம் - பொக்கசத்துக்கும்பெயர். (தேசிகனென்

பது) செட்டி - தேசாந்தரி - குருவுக்கும்பெயரென்றவாறு.

இதற்குமேற்கோள்

பாசனமென்பதுபாண்டமுஞ்சுற்றமு முண்கலமெனவுமோதுமுப்பெயரே) வாசமேயிருப்பிடமும்புடைவையும் புள்ளிறகுடன்பூமணமுநாற்பெயரே) கோசமேமதிலுறுப்புமாண்குறியு முட்டையும்பண்டாரமுங்கருகூலமு முறையும்விதியுமொழியுமேழ்பெயரே) தேசிகன்றேசாந்தரியுங்குருவும் வணிகனுமிறைவனும்வழங்கலாகும்.

*௧*

மூசன்மொய்த்திடல்சாவென்பமுடலையேதிரட்சியுண் - டை
கீசகங்குரங்குவேயாங்கேழ்நிறமொளியொப்பாகு - - ம்
வீசலேயெறிதலீவாம்வெம்மையுட்டினம்விருப்ப - - ங்
கேசரமகிழ்பூந்தாதாங்கிருட்டியோரீற்றுப்பன் - - - றி.

இதன்பொருள்

(மூசலென்பது) மொய்த்தல் - சாவுக்கும்பெயர். (முடலையென்பது) திரண்டவடிவு - உருண்டவடிவுக்கும்பெயர். (கீசகமென்பது) குரங்கு - மூங்கிலுக்கும்பெயர். (கேழென்பது) நிறம் - பிரகாசம் - ஒப்புக்கும்பெயர். (வீசலென்பது) எறிதல் - கொடுத்தலுக்கும்பெயர். (வெம்மையென்பது) வெப்பம் - ஆசைக்கும்பெயர். (கேசரமென்பது) மகிழமரம் - பூந்தாதுக்கும்பெயர். (கிருட்டியென்பது) தலையீற்றுப்பசு - பன்றிக்கும்பெயரென்றவாறு.

இதற்குமேற்கோள்

மூசலேமொய்த்திடல்சாவிருபெயர்) முடலைதானேயுண்டையுந் திரட்சியு முருடுங்கழலையும்பெருங்குறடெனவும் பெருமையுமுடைநாற்றமுமேழ்பெயரே) கீசகமென்பதுகுரங்குமூங்கிலும்) கேழென்பதுவேயொளியுமொப்பு நிறமுமென்றேநிகழ்த்துமுப்பெயரே) (தி-ம்) வீசலேகொடுத்தலுமெறிதலுமாகும்) வெம்மையேயுட்டினமும்விருப்பமுங் கடுமையுமெனவேகருதுமுப்பெயரே) கேசரமேமகிழ்பூந்தாதிருபெயர்) கிருட்டியென்பதுபிரண்டையும்பன்றியு மோரீற்றுவுமுனாக்குமுப்பெயரே. *௨*

அசிபடைக்கலமேவாளேயவமதிச்சிரிப்புமுப்பே - - - ர்
நிசியிராமஞ்சள்பொன்னுநீர்புனல்குணம்பூராட - - - ம்
பிசியென்பபொய்யுஞ்சோறும்பேசரும்பொருளுமுப்பே - ர்
சுசிகோடைசுத்தந்தீயாஞ்சுடர்விளக்கிரவியங் - - - ஷ்.

இதன்பொருள்

(அசியென்பது) ஆயுதம் - வாள் - அவமதிச்சிரிப்புக்கும்பெயர். (நிசியென்பது) இரவு - மஞ்சள் - பொன்னுக்கும்பெயர். (நீரென்பது) சலம் - பண்பு - பூராடநக்ஷத்திரத்துக்கும்பெயர். (பிசியென்பது) பொய் - சோறு - அரும்பொருளுக்கும்பெயர். (சுசியென்பது) கோடைகாலம் - சுத்தம் - நெருப்புக்கும்பெயர். (சுடரென்பது) விளக்கு - சூரியன் - நெருப்புக்கும்பெயரென்றவாறு.

இதற்குமேற்கோள்

அசியென்பதுவேயவமதிச்சிரிப்பும் வாளொடாயுதமும்வழங்குமுப்பெயரே) நிசியென்பதுவேயிராவுமஞ்சளும் பொன்னுமெனவேப்கலுமுப்பெயரே) நீரென்பதுபூராடமுங்கடலுங் குணமுநீருங்கூறுநாற்பெயரே) பிசியரும்பொருளும்பொய்யுஞ்சோறும்) சுசியென்பதுவேகோடையுஞ்சுத்தமுந் தீயுமெனம்வசெப்புமுப்பெயரே) சுடரோயொளியுந்தளிரும்விளக்கு முச்சுடரெனவுமொழியநாற்பெயரே. ※௩※

ஆசென்பவிரைவுகுற்றமற்பமெய்க்கவசநாற்பே - - - ர்
காசென்பகோழைகுற்றங்கதிர்விடுமணிமுப்பே - - ர்
யாசினிபலாவிசேடமரவுரிமரக்காழ்விண்ணு - - - - ந்
தேசிகமழகுகாந்திதிசைச்சொல்லோர்கூத்துச்செம்பொ - ன்.

இதன்பொருள்

(ஆசென்பது) சீக்கிரம் - குற்றம் - சிறுமை - மெய்க்கவசத்துக்கும்பெயர். (காசென்பது) கோழை - குற்றம் - இரத்தினத்துக்கும்பெயர். (ஆசினியென்பது) ஈரப்பலா - மரவுரி - மரவயிரம் - ஆகாயத்துக்கும்பெயர். (தேசிகமென்பது) அழகு - ஒளி - அவ்வவநாட்டுச்சொல் - ஓர்கூத்து - செம்பொன்னுக்கும்பெயரென்றவாறு.

இதற்குமேற்கோள்

ஆசென்பதுவேசடுதியுங்கவசமு மற்பமுங்குற்றமுமோர்கவியுட

னே கைக்கருவியுமெனக்கருதுமறுபெயர்) காசேகோமையுமா ணிக்கத்தொடு குற்றமுமெனவேகூறுமுப்பெயரோ) ஆசின்யேம ரவயிரமாகாயம் பலாவின்விசேடமரவுரிநான்கே) தேசிகந்தா னேயழகுங்காந்தியும் பொன்னுமோர்கூத்துந்திசைச்சொலுமை ம்பெயர்.

*௭*

பச்சையேமரகதந்தோல்பரிமளப்புதன்மால்புந் - - - தி
கச்சையென்பதுதழும்புகயிறுடுகவசமுப்பே - - - ர்
செச்சைமைவெட்சிதேய்வைதிகையென்றிசைசுணங் - கா
மிச்சையேபொய்த்தலாகுமிடித்தலஞ்ஞானமும்பே - - ர்.

இதன்பொருள்

(பச்சையென்பது) மரகதம் - தோல் - ஓர்வாசனைப்புதல் - திருமால் - புதனுக்கும்பெயர். (கச்சையென்பது) உடற்றழும்பு - கயிறு - கவசத்துக்கும்பெயர். (செச்சையென்பது) ஆடு - வெட்சி - சாந்தின்குழம்புக்கும்பெயர். (திகையென்பது) திசை - தேமலுக்கும்பெயர். (மிச்சையென்பது) பொய் - தரித்திரம் - அறிவில்லாமைக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

பச்சையேமரகதமுமாலும் புதனுந்தோலும்புந்தியுந்திறமும் பச்சையுமிலாபமும்பகரலாகும்) கச்சையென்பதுகயிறுந்தழும்புங் கவசமுமெனவேகாட்டுமுப்பெயரோ) செச்சையென்பதுவே யாடும்வெட்சியுஞ் சாந்தின்குழம்புநீறுஞ்சேரும் காடுமென வேகருதுமறுபெயர்) திகையேதிசையுஞ்சுணங்குமிருபெயர்) மிச்சையென்பதுவேபொய்யும்வறுமையு மறிவின்மையுமெனவறு யுமுப்பெயரோ.

*௫*

பிச்சமாண்மயிரும்பீலிக்குடையும்வெண்குடையுமாகு - ங்
கச்சம்யானைக்கழுத்திற்கயிறளவொடுமரக் - - - - கா
லெச்சமேருறைம்சயாகமியமென்பமரக்கோடியா - - லை
யச்சமேயகத்திமைம்மையஞ்சலிம்முப்பேரா - - - மே.

இதன்பொருள்

(பிச்சமென்பது) குடுமி - பீலிக்குடை - வெள்ளைக்குடைக்கும் பெயர். (கச்சமென்பது) யானைக்கழுத்திடுகயிறு - அளவு - மரக்

காலுக்கும்பெயர். (எச்சமென்பது) குறைவு-புத்திரன்-யாகத்துக்கும்பெயர். (இபமென்பது) மரக்கொம்பு-யானைக்கும்பெயர். (அச்சமென்பது) அகத்திமரம் - அச்சவடிவு - பயத்துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

பிச்சமேவெண்குடையுமாண்மயிரும் பீலிக்குடையும்பேசுமுப்பெயரோ) கச்சமென்பதுதுணிவுமளவும் யானைக்கழுத்திடுகயிறும்வாரு மரக்காலெனவுமருவுமைம்பெயரோ) எச்சமென்பதுவேகுறைவும்வேள்வியும் புத்திரனெனவும்புகலுமுப்பெயரோ) இபமேமரத்தின்கோடும்யானையும்) அச்சமென்பதுவேயஞ்சலுமகத்தியு மைம்மையுமெனவேயறையுமுப்பெயரோ. *௬*

ஆசையேதிசைபொன்னன்பாமாகுலம்வருத்தமோசை - - ல்
காசையேகாயாநாணல்காமர்தானழகுகாத - - - - ல்
பாசமேகயிறுகூளிபசருசித்தொளையன்பாகு - - - ந்
தூசென்பதாடையானைப்புரசைதூசிப்படைப்பே - - ர்.

இதன்பொருள்

(ஆசையென்பது) திக்கு - பொன் - இஷ்டத்துக்கும்பெயர். (ஆகுலமென்பது) வருத்தம்-சத்தத்துக்கும்பெயர். (காசையென்பது)காசாஞ்செடி -நாணற்புல்லுக்கும்பெயர். (காமரென்பது) அழகு - ஆசைக்கும்பெயர். (பாசமென்பது)கயிறு - பிசாசம் - ஊசித்தொளை-அன்புக்கும்பெயர் (தூசென்பது) புடைவை - யானைப்புரசை - படைமுன்னணிக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

ஆசையென்பதுதிசையும்பரிவும் பொன்னுமென்றேபுகலுமுப்பெயரோ) (பி - ம்) வருத்தமுஞ்சத்தவொலியுமாகுலம்) காசையேகாயாவுநாணலும்) காமரென்பதழகுங்காதலும்) பாசமேநூல்பேய்கயிறன்புடனேயூசித்தொளையெனவோதுமைம்பெயரோ) தூசேபகட்டிற்புரசையுந்தூசும் படைவகுப்பெனவும்பகருமுப்பெயரோ. *எ*

நாசியேபாணிகுளைதளியென்பதுளியேகோயி - - - ல்

வேசரிகழுதையேகோவேறுவேசரியுமா - - - - - கு
மாசுகம்பகழிகாற்றுமந்தரியுமையேதுர்க் - - - - கை
கோசிகந்சாமவேதங்கூறுபட்டாடைக்கும்பே - - - ர்.

இதன்பொருள்

(தாசியென்பது) பரணிநக்ஷத்திரம் - அடியாளுக்கும்பெயர். (தளியென்பது) தளி - கோயிலுக்கும்பெயர். (வேசரியென்பது) கழுதை - கோவேறுகழுதைக்கும்பெயர். (ஆசுகமென்பது) அம்பு - காற்றுக்கும்பெயர். (அந்தரியென்பது) பார்வதி - துர்க்கைக்கும்பெயர். (கோசிகமென்பது) சாமவேதம் - பட்டுவஸ்திரத்துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

தாசியென்பதுபரணிநாளு மடிமையுமென்றேயறையுமிருபெயர்) தளியேதாவலுங்கோயிலுமிருபெயர்) வேசரியேகோவேறு கழுதையுங் கழுதையுமெனவேகாட்டுமிருபெயர்) ஆசுகமேகணை காற்றெனவிரண்டே) அந்தரியேயுமைதுர்க்கையென்றிருபெயர்) கோசிகமென்பதுசாமவேதமும் பட்டாடையுமெனப்பகருமிரு பெயர்.

*அ*

பசுவேறுசிவனுவாய்ப்பாரதிவாணிதோ - - - - - ணி
வசுவேயான்கன்றும்பொன்னும்வசுக்களுந்தீயநாற் - - யே
ரசமூவாண்டுநெல்லாடாமணையென்பகளாயேமெத் - தை
சசியென்பகர்ப்பூரஞ்சந்திரனயிராணிமுப்பே - - - . ர்.

இதன்பொருள்

(பசுவென்பது) இடபம் - உயிர் - பசுவுக்கும்பெயர். (பாரதியென்பது) சரஸ்வதி - தோணிக்கும்பெயர். (வசுவென்பது) பசுவின் கன்று - பொன் - தேவர்களிலோர்பிறிவாகியஅஷ்டவசுக்கள் - நெருப்புக்கும்பெயர். (அசமென்பது) மூன்றுவருடத்துநெல் - ஆட்டுக்கும்பெயர். (அணையென்பது) களை - மெத்தைக்கும்பெயர். (சசியென்பது) கர்ப்பூரம் - சந்திரன் - இந்திராணிக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

பசுவேயேறுஞ்சிவனும்பெற்றமும்) பாரதிதானேபனுவலாட்டியு

நாவாயெனவுநாட்டுமிருபெயர்) வசுவேதேவரும்பொன்னுநீ
யுங் கோதனமெனவுங்கூறு நாற்பெயரே) அசமென்பதுவா
ட்டைநெல்லு மாடுமென்றேயறையுமிருபெயர்) அணையென்ப
துவேமெத்தையுங்கரையும்)சசியேநிலவுங்கடலுமழையுங் கர்ப்பூ
ரமுமயிராணியுமைம்பெயர். *௬*

விசும்புபொன்னுலகுமேகம்விண்ணொடுதிசையுநாற்பே - ர்
தசும்புநற்குடமிடாவாஞ்சாத்தனேயருகனே - - - - ய
னிசைபுகழ்கிளவிபாட்டாமேங்கலேயொலியிரங்க - - - ல்
பிசுனனேகோளன்பொய்யனுலோபனும்பேசுமப்பே - ர்.

இதன்பொருள்

(விசும்பென்பது) தேவலோகம் - மேகம் - ஆகாயம் - திசைக்கும்பெயர். (தசும்பென்பது) குடம் - மிடாவுக்கும்பெயர். (சாத்தனென்பது) அருகன் - அரிகரபுத்திரனுக்கும்பெயர். (இசையென்பது) புகழ் - சொல் - பாட்டுக்கும்பெயர். (ஏங்கலென்பது) சத்தம் - அழுதலுக்கும்பெயர். (பிசுனனென்பது) கோளன் - பொய்யன் - உலுத்தனுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

விசும்பேமுகிலுந்துறக்கமும்விண்ணுங் ககுபமுமெனவேகருது நாற்பெயரே) தசும்பென்பதுவேகுடமுமிடாவும் பொன்னுமெனவேபுகலுமுப்பெயரே ) சாத்தனென்பதுவேயருகனும்புத்தனு மரிகரபுத்திரனெனவுமுப்பெயரே ) இசையுரைச்சொல்லும் பொன்னும்புகழு மிசைப்பும்வண்மையும்பண்பும்பாட்டு மினிமையுமெனவேயியம்பலாகும் ) ஏங்கலே யொலியுமிரங்கலு மேங்குதலெனவுமிசைக்குமுப்பெயரே) (அ - ள்)பொய்யினனுலோபன்கோளன்போற்றியபிசுனனாமே. *௭*

வச்சிரஞ்சதுரக்கள்ளிவயிரமேகுலிசமும்பே - - - - ர்
நொச்சியேசிந்துவாரமதில்சிற்றூர்நவலலா - - - மே
தச்சனேசித்திரைப்பேர்தபதிபன்றுனுமா - - - - கு
முச்சிரண்டகலுச்சிப்பேருறுப்பவயவமுடம்பா - - - ம்.

இதன்பொருள்

(வச்சிரமென்பது ) சதுரக்கள்ளி - வயிரம் - வச்சிராயுதத்துக்கும்

பெயர். (நொச்சியென்பது) நொச்சிச்செடி - மதில் - சிற்றூருக்கும்பெயர். (தச்சனென்பது) சித்திரைநக்ஷத்திரம் - தச்சனுக்கும்பெயர். (உச்சியென்பது) நடுப்பகல் - உச்சந்தலைக்கும்பெயர். (உறுப்பென்பது) அவயவம் - சரீரத்துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

வச்சிரமென்பதுவயிரமுங்குலிசமுஞ் சதுரக்கள்ளியுஞ்சாற்றுமுப்பெயரோ) நொச்சியென்பதுமதிலுநொச்சியுஞ் சிற்றூரெனவுஞ்செப்புமுப்பெயரோ)தச்சனென்பதுசித்திரைநாளுந் தபதியனெனவுஞ்சாற்றுமிருபெயர்)உச்சியென்பதுமுடியுநண்பகலும்) உறுப்பேயவயவத்தேகமிரண்டே. ✻௰௧✻

பாசென்பபசுமைமூங்கில்பப்பென்பபரப்பொடொப் - பா
மாசென்பசிறுமைகுற்றமழையழுக்கொடுநாற்பே - - ரோ
கேசம்பெண்மயிர்க்குமாண்பான்மயிருக்குங்கிளத்தலாகு - ம்
வாசியேகுழன்முன்றண்மாவாசியென்னேவனுற்பே - - ர்.

இதன்பொருள்

(பாசென்பது) பசுமை - மூங்கிலுக்கும்பெயர். (பப்பென்பது) பரப்பு - ஒப்புக்கும்பெயர். (மாசென்பது) அற்பம் - குற்றம் - மேகம் - அழுக்குக்கும்பெயர். (கேசமென்பது) கூந்தல - குடுமிக்கும்பெயர். (வாசியென்பது) இசைக்குழல் - அச்சுவினிநக்ஷத்திரம் - குதிரை - வாசியென்னேவலுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

பாசுவேயும்பசுமையுமாகும்) பப்பேபரப்புமொப்பும்பகரும்) மாசுகுற்றமுமழுக்குமற்பமு மழையுமேகமும்வகுத்தனர்புலவர்) கேசமாண்மயிருப்பெண்பான்மயிரு மஃறிணைமயிருமென்றறையலாகும்) வாசிவங்கியமுமருத்துவனுளுங் குதிரையும்வாசியென்னேவலுமாகும். ✻௰௨✻

மிசையென்பதுணவுமேடுமீமிசைச்சொல்லுமூப்பே - - ர்
விசயமேமென்றிவெல்லலம்வெங்கதிர்மண்டலப்பே - - ர்
முசலியேயுடும்புதாழைமுத்தியவிராமனேந் - - - - தி
வசதிநல்லிடமூர்வீடாம்வரனயன்பரமன்காந்த - - - ன்.

இதன்பொருள்

(மிசையென்பது) உணவு - மேடு - மீமிசைச்சொல்லுக்கும்பெயர். (விசயமென்பது) வெற்றி - வெல்லம் - சூரியமண்டலத்துக்கும்பெயர். (முசலியென்பது)உடும்பு - தாழை - பலதேவன் - ஓந்திக்கும்பெயர். (வசதியென்பது) நல்லிடம் - ஊர் - வீட்டுக்கும்பெயர். (வரனென்பது) பிரமன் - சிவன் - தலைவனுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

மிசைமேடுமுணவுமீமிசைச்சொல்லும்) விசயமேசருக்கரையும்
வெற்றியு மருக்கன்மண்டலமுமாகுமுப்பெயரே) முசலியுடும்பு
ந்தாழையுமோந்தியு முகுந்தற்குமூத்தோன்பெயருமாகும்)வச
திமனையும்வளம்பெறுமிடமு மூருமெனவேயுரைக்கலாகும்) வர
னையனும்பரமனுங்காந்தனும் *௰௫*சகரவெதுகைமுற்றிற்று.

ஞ கர வெ து கை.

ஞஞ்சலேநிலைபெருகுந்துயில்சோம்புசாவுமாகு - - - ம்
பஞ்சரஞ்செருந்திகூடாம்பரதரோகழியர்நாய்க - - - ர்
கஞ்சமேதாளங்குல்லைகமலம்வெண்கலம்வட்டப்ப - - ங்
குஞ்சமீயோட்டிநாழிகுறள்குன்றிகுறளைச்சொல் - லே.

இதன்பொருள்

(ஞஞ்சலென்பது) நிலைபெறுதல் - நித்திரை - சோம்பல் - சாவுக்கும்பெயர். (பஞ்சரமென்பது) செருந்திமரம் - கூட்டுக்கும்பெயர். (பரதரென்பது) நெய்தனிலமாக்கள் - செட்டிகட்கும்பெயர். (கஞ்சமென்பது) தாளம் - கஞ்சா - தாமரை - வெண்கலம் - அப்பத்துக்கும்பெயர். (குஞ்சமென்பது) ஈயோட்டி - நாழி - குறுமை - குன்றிக்கொடி - குறளைச்சொல்லுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

ஞஞ்சலேநிலைபெறுந்துயிலுஞ் சாவுஞ்சோம்புஞ்சாற்றுநாற்பெ
யரே) பஞ்சரமென்பதுகூடுஞ்செருந்தியும்) பரதர்நுளையரும்வ
ணிகருமாகும்) கஞ்சமேவெண்கலமம்போருக மப்பந்தாளங்
கஞ்சாவைந்தே) குஞ்சங்கூனுமீயோட்டியுங்குறளுங் குறளைச்
சொல்லுங்குன்றியுநாழியும்.

*க*

நெஞ்சென்பமனமார்பின்பேர்நிழல்செல்வங்குளிர்ச்சிசா - ய

மஞ்சுபூண்வலிவனப்புமழையானைமுதலிவ்வைந் - - தே
வஞ்சிமேற்செலவோரூர்பாவல்லிமென்மருங்குற்பெண்ணு - ந்
தஞ்சமேயெளிமையென்பதருபற்றுக்கோடுமா - - மே.

இதன்பொருள்

(நெஞ்சென்பது) மனம் - மார்புக்கும்பெயர். (நிழலென்பது) செல்வம் - குளிர்ச்சி - நிழலுக்கும்பெயர். (மஞ்சென்பது) ஆபரணம் - வலிமை - அழகு - மேகம் - யானைமுதுகுக்கும்பெயர். (வஞ்சியென்பது) பகைவர்மேற்செல்லுதல் - ஓரூர் - ஓர்பா - ஓர்கொடி - பெண்ணுக்கும்பெயர். (தஞ்சமென்பது) எளிமை - பற்றுக்கோடுக்கும்பெயரென்றவாறு.

இதற்குமேற்கோள்

நெஞ்சேமனமுமார்புமிருபெயர்) நிழலென்பதுவேயருளுஞ்சாயையு நோயுமரக்கோடுடனேசெல்வமுங் குளிர்ச்சியுமெனவேகூறுமறுபெயர்) மஞ்சென்பதுவேயானையின்முதுகும் பூணும்வலியும்வனப்புமழையு மிளமையுமுகடுமிடம்புமேழ்பெயரோ) வஞ்சியேமேற்செலவுமோர்பாவும் வல்லியும்பெண்ணுங்கருவூருமைம்பேர்) தஞ்சந்தானேயெளிமையும்பெருமையும் பற்றுக்கோடுந் துணையுநாற்பெயரே. *உ*

அஞ்சனங்கறுப்புமைதிக்கானையிலொன்றுமுப்பே - - ர்
மஞ்சரியேபூங்கொத்துமாலைசெந்தளிருமா - - - - கு
மஞ்சலிவணங்கல்வாவற்பறவையுமாகுமென் - - - - ப
விஞ்சியேபுரிசையிஞ்சியெறுழென்பவலிதண்டா - - மே.

இதன்பொருள்

(அஞ்சனமென்பது) கறுப்பு - மை - மேற்றிசையானைக்கும்பெயர். (மஞ்சரியென்பது) பூங்கொத்து - பூமாலை - தளிருக்கும்பெயர். (அஞ்சலியென்பது) கும்பிடல் - வாவற்பறவைக்கும்பெயர். (இஞ்சியென்பது) மதில் - இஞ்சிக்கும்பெயர். (எறுழென்பது) வலிமை - தண்டாயுதத்துக்கும்பெயரென்றவாறு.

இதற்குமேற்கோள்

அஞ்சனமேதிக்கயமுங்கறுப்பு மோர்கற்பிறப்புங்கண்ணிடுமருந்து மிருளுமையுமெனப்பெயராமே (மஞ்சரியேபூங்கொத்துந்

ளிரு மாலையுமெனவேமதிக்குமுப்பெயரோ) அஞ்சலிதானேபே தையும்வாவலுங் கும்பிடலெனவுங்கொள்பெயர்மூன்றே) இஞ் சியென்பதுவேயிஞ்சியுமதிலுமாம்) எறுழேவலியுந்தண்டாயுத முந் தூணுமெனவேசொல்லுமுப்பெயரோ. *௩*

கிஞ்சுகமுருக்குச்செம்மைகிருட்டினனன்றன்மால்பார்த்த - ன்
கஞ்சனமேகண்ணுடிகரிக்குருவிக்கும்பே - - - - ரோ
பஞ்சமேசிறுமையைந்தாம்பகழியம்பிதன்குதைப்பே - ர்
வஞ்சனைமாயைபொய்யாமாயன்மால்கருநிறத்தோ - - ன்.

இதன்பொருள்

(கிஞ்சுகமென்பது) முருக்கமரம் - சிவப்புக்கும்பெயர். (கிரு ட்டினனென்பது) கண்ணன் - அருச்சுனனுக்கும்பெயர். (கஞ்ச னமென்பது) கண்ணுடி - கரிக்குருவிக்கும்பெயர். (பஞ்சமெ ன்பது) சிறுவிலைக்காலம் - ஐந்துக்கும்பெயர். (பகழியென்பது) அம்பு-அம்புக்குதைக்கும்பெயர். (வஞ்சனையென்பது) மாயை - பொய்க்கும்பெயர். (மாயனென்பது) திருமால் - கருநிறத்தோ னுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

கிஞ்சுகஞ்சிவப்புமுருக்குமாகும்) கிருட்டினன்மாலும்விசயனு மாகும்) கஞ்சனங்கண்ணுடியும்வலியனும்) பஞ்சஞ்சிறுமையுமை ந்துமாகும்) பகழியம்புமம்பின்குதையும்) வஞ்சனைமாயையும் பொய்யும்வஞ்சமும்) மாயன்மாலுங்கருநிறத்தோனுமாம். *௪*

குஞ்சியாண்மயிர்புட்பார்ப்புக்குன்றியின்புதன்முப்பே - ரோ
வஞ்சமேகபடம்வாளாமாயம்வஞ்சனைபொய்யென் - - ப
கஞ்சனேகுறளன்வேதன்களங்கந்தானழுக்குக்குற்ற - - ங்
கஞ்சிகைசிவிகையாடைகட்டிடுதிரையுமா - - - - மே.

இதன்பொருள்

(குஞ்சியென்பது) குடுமி - பறவைக்குஞ்சு - குன்றிப்புதருக்கும் பெயர். (வஞ்சமென்பது) கபடம் - வாளாயுதத்துக்கும்பெயர். (மாயமென்பது) வஞ்சனை - பொய்க்கும்பெயர். (கஞ்சனென்

பது) குறியஜ - பிரமனுக்கும்பெயர். (களங்கமென்பது) அழு
க்கு - குற்றத்துக்கும்பெயர். (கஞ்சிகையென்பது) சண்டிகை -
வஸ்திரம் - திரைச்சீலைக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

குஞ்சியேயாண்மயிர்புட்பார்ப்புடனே குன்றியின்புதலெனக்கூ
றுமுப்பெயரே) வஞ்சமேகபடம்வாளெனவிருபெயர்) மாய
மேபொய்வஞ்சனையிருபெயர்) கஞ்சனென்பதுபிரமனுங்குறள
னும் கஞ்சனுமெனவேகாட்டுமுப்பெயரே) களங்கமென்பதழு
க்குங்குற்றமும்) கஞ்சிகையென்பதுதிரையுஞ்சிவிகையு மாடையு
மெனவேயறையுமுப்பெயரே. *ரு* ஞகரவெதுகைமுற்றிற்று.

டகரவெதுகை

நடலைவஞ்சனைபொய்யென்பநடுங்கியநடுக்கமும்பே - - ர்
மடல்பனையேடுபோல்வமலரிதழோர்நூற்கும்பே - - - ர்
படர்நடைநினைப்புநோவாம்பகர்ந்திடில்வீரர்க்கும்பே - ர்
குடநகர்பசுவோர்கூத்துக்கும்பமேகரும்பின்கட் - - டி.

இதன்பொருள்

(நடலையென்பது) கபடம் - பொய் - அசைவுக்கும்பெயர். (மட
லென்பது) பனையேடுபோல்வன - பூவிதழ் - ஓர்பிரபந்தத்துக்கு
ம்பெயர். (படரென்பது) வழி - நினைப்பு - துன்பம் - படைவீர
ருக்கும்பெயர். (குடமென்பது) பட்டணம் - பசு - ஓர்கூத்து -
குடம் - வெல்லக்கட்டிக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

நடலையென்பதுநடுக்கமும்பொய்யும் வஞ்சனையுமெனவைக்கு
முப்பெயரே) மடல்பனையேடும்பூவினிதழு மடலென்றுரைத்த
பிரவந்தமுமாம்) படரென்பதுவேநடையுநினைப்பு நோவும்வீர
ரும்பரிவும்பகையுந் துகிற்கொடியெனவுஞ்சொல்லுமேழ்பெய
ரே) குடமேநகரும்பசுவுமோர்கூத்துங் கரும்புகட்டியுங்கும்
பமுமைம்பேர். *க*

மாடமேயுழுந்தோடில்லாமழையென்பகுளிர்ச்சிமேக - ங்
கூடமின்மறைவுகொல்லன்சம்மட்டிகுவட்டினுச் - - - சி
சேடனேர்சாதியாங்கன்செகந்தாங்குமனந்தனென் - - ப

கேடகம்பரிசைவேறோர்கேடிலூர்பலகைமுப்பே - - ர்.

இதன்பொருள்

(மாடமென்பது) உளுந்து - வீட்டுக்கும்பெயர். (மழையென்பது) குளிர்ச்சி - மேகத்துக்கும்பெயர். (கூடமென்பது) வீடு - மறைவு - கொல்லன்சம்மட்டி - மலையினுச்சிக்கும்பெயர். (சேடனென்பது) ஓர்சாதியான் - தோழன் - பூமிதாங்குமனந்தனென்னும்பாம்புக்கும்பெயர். (கேடகமென்பது) தோற்பலகை - ஊர் கேடகத்துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

மாடமேமனையுமூந்திருபெயரோ) மழையேமேகங்குளிர்ச்சியிருபெயர்) கூடமலையுச்சியுமறைவும்பொய்யும் வஞ்சமுஞ்சமட்டியுங்கூடமுங்கூட்டமு மண்டமும்யானையினிலையுமில்லுமாம்) சேடனேயிளையோனுமனந்தனும் பாங்கனுமேவல்செய்வோனுநாற்பெயரோ) கேடகமென்பதுபரிசையும்பலகையு மூருமெனவேயுரைக்குமுப்பெயரோ. ※உ※

இடங்கரோமுதலைதூர்த்தர்குடங்கரிம்முப்பேரொன் - - ப

முடங்கலேலமடங்கல்கைதைமூங்கிறேயோலையைம்பே - ர்

படங்குமேற்கட்டியென்பபகர்பெருங்கொடியுமாகு - - ம்

விடங்கமேர்கொடிகொடுங்கைமிதவையேதெப்பஞ்சோறு - ம்.

இதன்பொருள்

(இடங்கரென்பது) முதலை - விடர் - குடத்துக்கும்பெயர். (முடங்கலென்பது) மடங்குதல் - தாழை - மூங்கில் - வியாதி - ஓலைக்கும்பெயர். (படங்கென்பது) மேற்கட்டி - பெருங்கொடிக்கும்பெயர். (விடங்கமென்பது) அழகு - துகிற்கொடி - கொடுங்கைக்கும்பெயர். (மிதவையென்பது) தெப்பம் - சோற்றுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

இடங்கரென்பதுமுதலையுந்தூர்த்தருங் குடங்கரெனவுங்கூறுமுப்பெயரோ) முடங்கன்மடங்கலுங்கைதையுமூங்கிலு மோலையுநோயுமுரைக்கலாகும்) படங்கென்பதுபெருங்கொடியுமேற்கட்டியும்) விடங்கமென்பதுகொடுங்கையுமுகடு மாண்மையுமழ

குங்கொடியுமைம்பெயரோ) மிதவையென்பதுநெப்பமுஞ்சோ
றுமாம். ※௩※

குடிஞைபுட்பொதுவும்யாறுங்கூகையுமாகுமென் - - ப
தடிவயலுலக்கைவில்லுத்தண்டுமின்றசையுடும்பா - - - ந்
தொடிவளையொருபலப்பேர்சூழ்ந்தகங்கணமுமா - - கு
மடியடங்குதலேசோம்புவயிறுநோய்புடைவைதா - - ழை.

இதன்பொருள்

(குடிஞையென்பது) பறவைப்பொது - நதி - கோட்டானுக்கு
ம்பெயர். (தடியென்பது) கழனி - உலக்கை - வில்லு - தண்டா
யுதம் - மின்னல் - தசை - உடும்புக்கும்பெயர். (தொடியென்ப
து) கைவளை - ஒருபலம் - சங்கணத்துக்கும்பெயர். (மடியென்
பது) அடங்குதல் - சோம்பல் - வயிறு - வியாதி - புடைவை - தா
ழைக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

குடிஞைதானேநதியும்பதியும் புள்ளின்பொதுவுங்கூகையுநாற்
பெயர்) தடியேசார்ங்கமுந்தண்டுமின்னுந் தசையுமுடும்புமுலக்
கையும்வயலுமாம்) தொடியென்பதுகங்கணமும்வளையு மொரு
பலமெனவுமுரைக்குமுப்பெயரோ) மடியென்பதுவேயடங்கலு
ந்தாழையுஞ் சோம்பும்வயிறுந்தூசுநோயுஞ் சோறுமெனவே
சொல்லுமேழ்பெயரோ. ※௪※

படிவமேவடிவநோன்பாம்பந்தமேகிளையுங்கட்டு - - - ம்
வெடியச்சம்பரிமளிக்குமென்புகைவெளியிம்முப்பே - - ர்
துடியேலம்பறைகாலப்பேர்தூத்தூய்தூன்பற்றுக்கோடா - ங்
கொடிறுபூசங்கதுப்பாங்குரவையேகடலோர்கூத் - - து.

இதன்பொருள்

(படிவமென்பது) உருவம் - நோன்புக்கும்பெயர். (பந்தமென்
பது) உறவு - கட்டுக்கும்பெயர். (வெடியென்பது) பயம் - நறு
ம்புகை - வெளிக்கும்பெயர். (துடியென்பது) ஏலம் - குறிஞ்சிப்
பறை - ஓர்காலத்துக்கும்பெயர். (தூவென்பது) சுத்தம் - தசை -
பற்றுக்கோட்டுக்கும்பெயர். (கொடிறென்பது) பூசநக்ஷத்திர
ம் - கபோலத்துக்கும்பெயர். (குரவையென்பது) கடல் - ஓர்கூத்
துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

படிவமென்பதுவடிவமுநோன்பும் (பந்தமேதளைகிளைகட்டுண்டை பாசங்கைவிளக்கெனப்பெயராறே) (அ-கை) வெடியேகள்ச்சந்தூமம்வெள்ளிடிவெளியேயைம்பேர்) துடியேயோர்காலுமோர்பறையுஞ் சத்தமாதராடலுங்கூதாளியு முதடுமேலமுமெனவேயறுபெயர்) தூவேதூய்மையும்பற்றுக்கோடும் பகையும்வெறுப்பும்புள்ளினிறகுந் தசையுமெனவேசாற்றுமறுபெயர்) கொடிரேகதுப்பும்பூசமுமிருபெயர்) குரவையேகடலோர்கூத்திருபெயர்.. *௫*

கடிகைநாழிகையேதுண்டங்கதவிடுதாளேமுப்பே - - ர்
படிறுபொய்களவிரண்டாம்பகர்தலேயுரற்றல்பேசு - - ல்
சுடிகையேமகுடமுச்சிசுட்டியுமிட்டபே - - - - ரோ
யிடியிடிப்பேரோநென்மாவேற்றிடுமுறுதிச்சொல் - - லே.

இதன்பொருள்

(கடிகையென்பது) நாழிகை - துணிக்கை - கதவிடுதாளுக்கும் பெயர்) (படிறென்பது) பொய் - களவுக்கும்பெயர்) (பகர்தலென்பது) விற்றல் - பேசலுக்கும்பெயர்) (சுடிகையென்பது) கிரீடம் - நடுத்தலை - நெற்றிச்சுட்டிக்கும் பெயர் (இடியென்பது) இடி - நென்மா - உறுதிச்சொல்லுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

கடிகையென்பதுசமயநாழிகை துண்டந்தாப்பாள்வேதமென்றைந்தே) படிறேகளவுபொய்யெனவிருபெயர்) பகர்தருனேவிற்றலும்பேசலும்) சுடிகையென்பதுமகுடமுமுச்சியுஞ் சுட்டியுமெனவேசொல்லுமுப்பெயரோ) இடியேநென்மாவுறுதிச்சொல்லிடி தகரஞ்சுண்ணமெனப்பெயரைந்தே. *௬*

நாடிநாசிகைநரம்பாநந்தல்கேடுடனேயாக்க - - - ம்
பாடியேநகரநாடுபாசறையாயரூர்ப்பே - - - - - ர்
கோடிகந்துகில்பூநதட்டாங்குடம்பையேமுட்டைகூ - - டு
கோடியெண்புதுமைதூசாங்குடுமியேவெற்றியுச் - - சி.

இதன்பொருள்

(நாடியென்பது) மூக்கு - நரம்புக்கும்பெயர்) (நந்தலென்பது)

கேடு - ஆக்கத்துக்கும்பெயர். (பாடியென்பது) நகரம் - நாடு-முனைமேற்சென்றோருறைவிடம் - ஆயர்பாடிக்கும்பெயர். (கோடிகமென்பது) வஸ்திரம் - பூந்தட்டுக்கும்பெயர். (குடம்பையென்பது) முட்டை - கூட்டுக்கும்பெயர். (கோடியென்பது) ஒரொண் - புதுமை - வஸ்திரத்துக்கும்பெயர். (குடுமியென்பது) விசயம் - உச்சிக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

நாடியேநாசிகையுநரம்பு மாதர்மயிருமருவுமுப்பெயரோ) நந்தருனேயாக்கமுங்கேடுமாம்) பாடியேபாசறையும்படையுங் கவசமுநாடுநகரமுமாயர் பேரூரொனவும்பேசுமறுபெயர்) கோடிகமேபூந்தட்டுந்துகிலுங் கெண்டிகையெனவுங்கிளக்குமுப்பெயரோ) குடம்பையென்பதுமுட்டையுமேரியுங் கூடுமெனவேகூறுமுப்பெயரோ) கோடியேயோரோண்ணும்புதுமையுந் தூசுமென்றேசொல்லுமுப்பெயரோ) குடுமிதானேயுச்சியும்வெற்றியும் வில்லுமெனவேவிதிக்குமுப்பெயரோ. *எ*

உடுவிண்மீன்கிடங்குநாவாயோட்டுங்கோலம்பிலீர்க்கா - ங்
கடுவிடமுள்ளூத்தானேயரிதகிகசப்புநாற்பே - - - - ர்
படுமரக்குலேயேகள்ளூப்பரவுநீர்நிலைநன்மைப்பே - - ர்
படுதலேயொலியின்றுதல்பகரிலுண்டாதல்பூத்த - - - ல்.

இதன்பொருள்

(உடுவென்பது) நக்ஷத்திரம் - அகழி - மரக்கலமோட்டுங்கோல் - அம்பினிறகுக்கும்பெயர். (கடுவென்பது) நஞ்சு - முள் - கடுமரம் - கசப்புக்கும்பெயர். (படுவென்பது) மரக்குலே - கள் - குளம் - நன்மைக்கும்பெயர். (படுதலென்பது) சத்தம் - இல்லாமை - உண்டாதல் - பூத்தலுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

உடுவென்பதுவேகணையுங்கிடங்கும் விண்ணின்மீனுமம்பிறகு நாவாயோட்டியகோலுமென்றைந்தே) கடுவேவிடமுங்கசப்பொடுமுள்ளூ மரிதகியெனவுமாகுநாற்பெயரோ) படுவென்பது மரக்குலேயுங்கள்ளூ நீரினிலேயுநன்மையும்பொய்கையுஞ் சம்பத்தெனவுஞ்சாற்றுமறுபெயர்) படுதலேயுண்டாதலும்பூத்தலுமொ

வியுமில்லாமையுமோதுநாற்பெயரே. *௮*
மாடுபொன்பக்கஞ்செல்வம்வைகல்வைகறைநாடங்க - - ல்
சேடென்பபெருமைநன்மைதிரட்சியேயழகுநாற்பே - - ர்
பாடிடம்பெருமையோசைபட்டேபட்டாடைசிற் - - றா
ரீடென்பகுழைவேயொப்பேவலியொடுபெருமையென் - ப.

இதன்பொருள்

(மாடென்பது) பொன் - பக்கம் - செல்வத்துக்கும்பெயர். (வைகலென்பது) விடியற்காலம் - நாள் - தங்குதலுக்கும்பெயர். (சேடென்பது) பெருமை - நன்மை - திரண்டவடிவு - அழகுக்கும்பெயர். (பாடென்பது) இடம் - பெருமை - ஒலிக்கும்பெயர். (பட்டென்பது) பட்டுவஸ்திரம் - சிற்றூருக்கும்பெயர். (ஈடென்பது) நெகிழ்தல் - ஒப்பு - வலிமை - பெருமைக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

மாடேபக்கமுஞ்செல்வமும்பொன்னு நிரையுமணியுஞ்சீதனமுமறுபெயர்) வைகலேவைகறையுநாளுங் கழிவுநாளுந்தங்கலுநாற்பெயர். (சேடேபெருமையுநன்மையுந்திரட்சியு மழகுமெனவேயறையுநாற்பெயரோ) பாடேபடுதலும்பெருமையுமோசையும் பக்கமுநட்பும்பண்புமறுபெயர். (பட்டேசிற்றூரும்பட்டாடையும்) ஈடேகுழைவும்வலியுமொப்பும் - பெருமையுமெனவேபேசுநாற்பெயரே. *௯*

மடையென்பமதகுசோறுமணிப்பணிக்கடைப்பூட்டும்பே - ர்
படைபடைக்கலங்கலப்பைபடுக்கைபல்லணமேதா - - னை
யிடைநடுவென்பமற்றுமிடைப்பெயர்நுசுப்புமா - - - மே
மடமறியாமைசத்திரமன்னியமுனிவாசப்பே - - - - ர்.

இதன்பொருள்

(மடையென்பது) மதகு - சோறு - ஆபரணக்கடைப்பூட்டுக்கும்பெயர். (படையென்பது) ஆயுதம் - கலப்பை - நித்திரை - குதிரைச்சேணம் - சேனைக்கும்பெயர். (இடையென்பது) நடு - இடம் - இடைக்கும்பெயர். (மடமென்பது) அறிவின்மை - சத்திரம் - முனிவரிருப்பிடத்துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

மடையேமணிப்பணிக்கடைப்பூட்டுடனே சோறுமதகுஞ்சொல்லுமுப்பெயரோ) படைநிரையுங்கலப்பையுமாயுதமும் கலணையும்படுக்கையும்படையுமென்றுரே) இடையேயானையுநடுவுமிடமு நுசுப்புமெனவேநுவலுநாற்பெயரோ) மடமேயறியாமையுமுனிவாசமுஞ் சத்திரமெனவுஞ்சாற்றுமுப்பெயரோ. *௰*

வாடையென்பதுந்தான்வீதிவடகாற்றுத்தானுமா - - மே
யாடுமேழகம்வெற்றிப்பேரல்கனட்சுருங்கல்வைக - - ல்
கோடைமேல்காற்றிளுேடுகுதிரைவெண்காந்தளென் - - ப
வோடைநீர்நிலைகிடங்கேயொளிமணிப்பட்டமும்பே - ர்.

இதன்பொருள்

(வாடையென்பது) தெரு - வடகாற்றுக்கும்பெயர். (ஆடென்பது) ஆடு - வென்றிக்கும்பெயர். (அல்கலென்பது) நாள் - குறைதல் - தங்கலுக்கும்பெயர். (கோடையென்பது) மேல்காற்று - குதிரை - வெண்காந்தளுக்கும்பெயர். (ஓடையென்பது) தடாகம் - அகழி - நெற்றிப்பட்டத்துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

வாடையென்பதுவடகாற்றுடனே வீதியுமெனவேவிளங்குமிருபெயர்)ஆடேயாடும்வெற்றியுங்கூர்மையுங் கூத்துமெனவேகூறுநாற்பெயரோ) அல்கலென்பதுதங்கலுஞ்சுருங்கலு மிராத்திரியுடனேநாளுநாற்பெயரோ)கோடையென்பதுமேல்காற்றுங்குதிரையுங் கோடையும்வெண்காந்தளுநாற்பெயரோ) ஓடைதானே கிடங்குநீர்நிலையு மலையின்வழியுமிபமுமோர்தருவு மணிப்பட்டமுமெனவகுக்குமறுபெயர். *௰௧*

அடுப்பென்பபரணிநாளேயச்சமேசுல்லிமுப்பே - - - ர்
வடுச்செம்புதழும்புவண்டாமத்தகநெற்றிசென் - - - னி
யிடக்கரேமறைத்தவார்த்தைகும்பமுமென்பநூலோ - ர்
கடைப்பிடிமறப்பிலாமைகருதியதேற்றமா - - - மே.

இதன்பொருள்

(அடுப்பென்பது) பரணிநக்ஷத்திரம் - பயம் - அடுப்புக்கும்பெயர். (வடுவென்பது) செம்பு - தழும்பு - வண்டுக்கும்பெயர். (மத்த

கமென்பது) நெற்றி - தலைக்கும்பெயர். (இடக்கரென்பது) மறைத்தசொல் - குடத்துக்கும்பெயர். (கடைப்பிடியென்பது) மறவாமை - தேற்றத்துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

அடுப்பென்பதுவேயச்சமுமடுப்பும் பரணிநாளும்பகர்பெயர் மூன்றே) வடுவேசெம்பும்வண்டுந்தழும்புங் கூர்வாளெனவுங்கூறுநாற்பெயரோ) மத்தகமென்பதுநெற்றியுஞ்சென்னியும்) இடக்கரேகுடமறைத்தசொல்லிருபெயர்) கடைப்பிடியென்பதுமறப்பிலாமையுந் தேற்றமுமெனவேசெப்புமிருபெயர். *௯௨*

பட்டமேயோடைதூசுபதவிவாள்கவரிமாவா - - - ம்
புட்டமேகாகமாகும்புடைவையுநிறைவுமப்பே - - - ர்
குட்டமேதொழுநோயாழங்குளமெனப்பெயர்மூப்பாற் - றே
வட்டமேபரிசைநீர்ச்சால்வலயங்கைம்மணிதூசூர்கோ - ள்.

இதன்பொருள்

(பட்டமென்பது) குளம் - வஸ்திரம் - பதவி - வாள் - கவரிமாவுக்கும்பெயர். (புட்டமென்பது) காக்கை - சீலை - நிறைவுக்கும் பெயர். (குட்டமென்பது) குஷ்டவியாதி - ஆழம் - குளத்துக்கும் பெயர். (வட்டமென்பது) கேடகம் - நீர்ச்சால் - வட்டவடிவு - கைம்மணி - சீலை - பரிவேடத்துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

பட்டம்வாளாயுதமுமோடையும் பதவியுங்கவரிமாவும்பரிசையுந் தூசுநுதலணியும்பணவமுமெண்பெயர்) புட்டமென்பதுகாகமுந்தூசு நிறைவுமெனவேநிகழ்த்துமுப்பெயரோ) குட்டமே தொழுநோயுமாழமுங் குளமுமெனவேகுறித்திடுமுப்பெயர்) வட்டமேயூர்கோளும்பரிசையும் வலயமுந்தூசுநீர்ச்சாலுந்தாழ்வுங் கைம்மணியெனவுங்கருதுமேழ்பெயரோ. *௯௩*

திட்டையேயுரலுமேடுந்திண்ணையுநண்ணுமுப்பே - - ர்
தட்டைவேய்தினைத்தாள்கிள்ளைதனைக்கடிகோலுமுண்ட - ங்
கிட்டியேதலையிற்றூவாங்கிருட்டியாந்தாளமும்பே - - ர்
கட்டளைநிறைகல்லொப்பேயிட்டிகையியற்றலா - - ணி.

இதன்பொருள்

(திட்டையென்பது) உரல் - மேடு - திண்ணைக்கும்பெயர். (தட்டையென்பது) மூங்கில் - தினைத்தாள் - கிளிகடிகோல் - மொட்டைக்கும்பெயர். (கிட்டியென்பது) தலையிற்றுப்பசு - பன்றி - கைத்தாளத்துக்கும்பெயர். (கட்டளையென்பது) நிறையறிகருவி - உவமை - செங்கலியற்றுங்கருவி - உரையறிகருவிக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

திட்டையென்பதுவேயுரலுமேடுந் திண்ணையுமெனவேசெப்புமுப்பெயரோ) தட்டையேதினைத்தாளுமுண்டமுங் கிளிகடிகோலு நீதியுங்கழையுமாம்)கிட்டிதானேதலையிற்றுவுந் தாளமுங்கிருட்டியுஞ்சாற்றுமுப்பெயரோ) கட்டளைதானேயிட்டிகையியற்றலு நிறையறிகருவியுமுரையறிகருவியு நிறைகலுமொப்புநிகழ்த்துமைம்பெயரோ. ※௰௪※

நாட்டங்கண்ணோர்பண்வாளநாகுசங்கிளமைநத் - - தை
யோட்டமேலுதடேதோல்வியுயிரொன்பகாற்றேசீவ - - ன்
கோட்டங்கோணபடப்பைநாடுகோயிலெளவியமான்கொட் டி
றோட்டியங்குசங்கபாடந்துணையென்பதளவுமொப்பு - ம்.

இதன்பொருள்

(நாட்டமென்பது) கண் - ஓர்பண் - வாளாயுதத்துக்கும்பெயர். (நாகென்பது) சங்கு - இளமை - நத்தைக்கும்பெயர். (ஒட்டமென்பது) மேலுதடு - தோற்றலுக்கும்பெயர். (உயிரொன்பது) காற்று - சீவனுக்கும்பெயர். (கோட்டமென்பது) கோணல் - மருதநிலத்தூர் - நாடு - கோயில் - அழுக்காறு - தொழுவத்துக்கும் பெயர். (தோட்டியென்பது) யானைத்தோட்டி - கதவுக்கும்பெயர். (துணையென்பது) அளவு - ஒப்புக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

நாட்டந்தானேயாடலும்வாளுங் கண்ணுமோர்பண்ணுங்காட்டு நாற்பெயரோ) நாகேசங்குநத்தையும்பசுவு மெருமையுமரையுநீர்வாழ்சாதியின் பெண்பாலுடனேயீறுவிளமையு மிளமரமெனவுமிசைக்குமெண்பெயரோ) ஒட்டமென்பதுமேலுதடுந்தோல்வி

யும்) உயிரோகாற்றுஞ்சீவனுமாகும்) (அ-கை) கோட்டமேயாம் படப்பைகோயிலெளவியமான்கொட்டி னீட்டுவாத்தருமம்வா சநீர்நிலமருதத்தார்கோ ணட்டொடுகுரங்கேவாவிநல்வயன்மூ வைந்தேபேர்) தோட்டியேயங்குசமுங்கதவுந் தோட்டியுமேன வேசொல்லுமுப்பெயரோ) துணையேயளவுமொப்புமிருபெயர்.

*௰௫*

தடமலைபெருமைகோணஞ்சரிகளாயகலம்வா - - - வி
யடல்கொலைவலிபோராகுமருத்தமேபொருள்பொன்பா - தி
யுடல்பொருளாகமென்பவோங்கல்வெற்புயரமூங்கி - - ல்
விடபமேயிடபராசிவிடைமரக்கொம்புமுப்பே - - - ர்.

இதன்பொருள்

(தடமென்பது) மலை - பெருமை - வளைவு - வழி - குளக்கரை - அகலம் - குளத்துக்கும்பெயர். (அடலென்பது) கொல்லுதல் - வல்லமை - யுத்தந்துக்கும்பெயர். (அருத்தமென்பது) சொற் பொருள் - பொன் - பாதிக்கும்பெயர். (உடலென்பது) பொன் - உடலுக்கும்பெயர். (ஓங்கலென்பது) மலை - உயர்ச்சி - மூங் கிலுக்கும்பெயர். (விடபமென்பது) இடபவிராசி - இடபம் - மரக்கொம்புக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

தடந்தடக்கரையும்விரிவுமல்குளும் பொய்கையுந்தடமும்யானை த்தண்டமுங் கோணலும்விளைவும்பெருமையும்பணையு மலையுமெ னவேவழங்கலாகும்) அடலேகொலையும்புயவலியுடனே பொரு தலுமெனவேபொருந்துமுப்பெயரோ) அருத்தமென்பதுசொ ற்பொருளுடனே பொன்னும்பாதியும்புகலுமுப்பெயரோ) உட லேமேனியும்பொருளுமிருபெயர்) ஓங்கலென்பதுமலையுமூங்கி லு மிபமுமரக்கலத்துடனேமேடு முயரமுமென்றேயோதுமறு பெயர்) விடபம்விடையுமிடபவிராசியுங் கிம்புரியும்மரக்கொம் புமாகும்.

*௰௬*

கடகமேசேனைவட்டங்கைவளைமதிளுற்பே - - - - ரோ
வடகந்தோலத்தவாளம்வலமென்பதிடமேவெற் - - - றி
படுவிகள்விற்பாள்குண்டம்பரமென்பகவசமெய் - - யா

தொடிபிறிர்கிளவியாகுநூனநிச்சயமேகுன்ற - - - ல்.

இதன்பொருள்

(கடகமென்பது) சேனை - வட்டவடிவு - கைவளை - மதிலுக்கும் பெயர். (வடகமென்பது) தோல் - உல்லாசத்துக்கும்பெயர். (வலமென்பது) இடம் - வெற்றிக்கும்பெயர். (படுவியென்பது) கள்விற்பவள் - வசவிக்கும்பெயர். (பரமென்பது) கவசம் - சரீரத்துக்கும்பெயர். (தொடியென்பது) கைந்தொடி - சொல்லுக்கும்பெயர். (நூனமென்பது) நிச்சயம் - குறைதலுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

(அ-கை) கடகங்கைவளைகூத்தியானைக்கணம்வட்டம்பரிசைசேனை திடமொன்றும்படைவீடாமாசெப்பியவெண்பேராகும்) வடகமென்பதுவேயத்தவாளமும் வடகமுந்தோலும்வழங்குமுப்பெயரோ) வலமேயிடமும்வெற்றியுங்கனமும் வலமுமேலுமருவுமைம்பெயரோ) படுவிகள்விற்பாளுங்குண்டமும்) பரமென்பதுவேகவசமும்பரமுஞ் செயலுந்தேகமும்பழமையுமுன்பு மத்திமரமுமாகுமேழ்பெயரோ) தொடியேகிளவிதொடியெனவிருபெயர்) நூனமேநிச்சயமுங்குன்றலும். *யஎ*

கடங்கயிறுவாக்கதுப்புக்கான்சுரமுடம்புநீ - - - தி
குடங்கடாமீமம்யானைக்குழாங்கடன்முழவைந்தே - - ழா
மடங்கலேயசனிசியமறலிநோயுகமுழித் - - - - தீ
படங்கரிமுகபடாநற்றுகில்பாம்பின்பணமுப்பே - - ரோ.

இதன்பொருள்

(கடமென்பது) கயிறு - யானைக்கவுள் - காடு - அருநெறி - சரீரம் - நியாயம் - குடம் - யானைமதம் - சுடலை - யானைக்கூட்டம் - கடன் - குடமுழாவுக்கும்பெயர். (மடங்கலென்பது) இடி - சிங்கம் - இயமன் - வியாதி - யுகம் - வடவாமுகாக்கினிக்கும்பெயர். (படமென்பது) யானைமுகபடாம் - வஸ்திரம் - பாம்பின்படத்துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

கடங்கரிக்குழூவுமுழவுநீதியும் யானைக்கன்னமுங்கயிறுமதமுஞ்

ஊரமுமுடலுங்கடனுங்குடமுங் கானுஞ்சாரலுங்கழறலாகும்) மடங்கலென்பதிடிபுந்தாழையு மூழித்தீயுஞ்சிங்கமுநோயு மடங்கலுங்கூற்றுமருவுமேற்பெயரோ) படமேயாம்பின்படமுந்துகிலு மெழுதுபடமுங்குஞ்சரமுகத்தின் படாமுமெனவேபகருநாற்பெயரோ. ※௰௮※

ஆடலேபெண்ணுண்கூடல்வார்த்தைகூத்தாடல்வென் - - றி
பாடலஞ்சிவப்பினோடுபாதிரிகுதிரைமுப்பே - - - - ர்
கோடரங்குரங்குசோலைகொம்பொடுகுதிரையா - - - கு
மாடவர்புருடர்நாமமாமிளையவர்க்கும்பே - - - - ரோ.

இதன்பொருள்

(ஆடலென்பது) பெண்ணுண்கூடல் - வார்த்தை - கூத்தாடல் - வெற்றிக்கும்பெயர். (பாடலமென்பது) சிவப்பு - பாதிரிமரம் - குதிரைக்கும்பெயர். (கோடரமென்பது) குரங்கு - சோலை - மரக்கொம்பு குதிரைக்கும்பெயர். (ஆடவரென்பது) ஆண்மககள் - இளைஞருக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

ஆடலேவெற்றியுங்கூத்தும்வார்த்தையும் பெண்ணுண்கூடலும் பேசுநாற்பெயரோ) பாடலமென்பதுசபதமுங்குதிரையும் பாதிரிமரமுஞ்சிவப்புநாற்பெயரோ) கோடரமேமரக்கொம்புஞ்சோலையுங் குதிரையுங்குரங்குமயிரின்சாந்து மரச்செறிவும்மெனவைக்குமறுபெயர்) ஆடவரோயிளையோரும்புருடரும். ※௰௯※

கடிமணம்விரைவுகூர்மைகாலம்பேய்விளக்கங்காப் - - பு
வடிவச்சம்வாசமையம்வரைவுவிம்மிதமேழாறு - - - ம்
வடுகேயிந்தளராகப்பேர்மருதயாழ்த்திறனுமா - - - மே
வடவையேகுதிரைப்பெட்டையுவாப்பிடிவடவைத்தீயா - ம்.

இதன்பொருள்

(கடியென்பது) கலியாணம் - சீக்கிரம் - கூர்மை - காலம் - பிசாசம் - விளக்கம் - காவல் - அலகுல் - பயம் - வாசனை - சந்தேகம் - நீக்கல் - அதிசயத்துக்கும்பெயர். (வடுகென்பது) இந்தளராகம் - மருதயாழ்த்திறத்துக்கும்பெயர். (வடவையென்பது) பெண்குதி

ணா - பெண்யானை - ஊழித்தீக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

கடியேயச்சமும்விளைவும்பேயும் கூர்மையுங்காலமும்விளக்கமு ங்கரிப்புங் காப்புநாற்றமுமனமும்வடிவும் புதுமையுமணமும்வ ளைவுடனே॥ முஞ் சிறப்புட்விம்மிதமும்புணர்வுங்கடித்தலுங் கண் ணிடமுஞ்சிறுகொடியுமைய மேற்றிடுகடியுமென்றிருபத்திரண் டே)வடுகென்பதுவேமருதயாழ்த்திறனு மிந்தளமெனவுமிசை க்குமிருபெயர் )வடவையென்பதுகோளிகைக்குதிரையும் பிடி யானையுங்கடையனலுமுப்பெயரோ *உ0*

கோடுசங்கூதுகொம்புமரக்கொம்புவிலங்கின்கொம் - - பு
நீடுசெய்வரம்புகுன்றின்முகடுநீர்க்கரையேயும்பே - - - ரா
மோடுமேடுதரமாகுமுறுவலேநகைத்தல்பல் - - - லா
மாடியேயோர்மாதங்கண்ணடியுத்திராடமா - - - மே.

இதன்பொருள்

(கோடென்பது)சங்கு - ஊது கொம்பு - மரக்கொம்பு - மிருகத் தின்கொம்பு - கழனிவரம்பு - மலையினுச்சி - நீர்க்கரைக்கும்பெய ர்.(மோடென்பது) மேடு - வயிற்றுக்கும்பெயர். (முறுவலென் பது) சிரித்தல் - பல்லுக்கும்பெயர். (ஆடியென்பது) ஓர்மாத ம் - கண்ணடி - உத்திராடநக்ஷத்திரத்துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

கோடேவரம்புமூதிடுகொம்பு மரத்தின்கோடும்விலங்கின்மருப் பும் வெற்பின்முகடுஞ்சங்குநீர்க்கரையும் பக்கமுமென்றேபகரு மெண்பெயர் )மோடென்பதுவே வயிறும்போழ்தலு மேடு மெனவேவிரித்திடுமுப்பெயர்) முறுவலென்பதுநகுதலும்பல் லுமாம்) ஆடிகண்ணடியுமாதமுங்காற்று முத்திராடமுமெனவு ணாக்கலாகும். *உக*

தட்டுத்தேர்நடுவுகுற்றந்தட்டொடுபரிசைமுட்டா - - - ஞ்
செட்டிவாணிகன்செவ்வேளாஞ்செப்புளாகரண்டகப்பே - ர்
மட்டென்பதெல்லைகள்ளாமார்க்கமேசமயம்வீ - - - தி
பட்டிகையென்பகச்சுப்பகடுடனிரதமா - - - - மே.

இதன்பொருள்

(தட்டென்பது) தேர்நடுவு - குற்றம் - தட்டு - கேடகம் - விக்கினத்துக்கும்பெயர். (செட்டியென்பது) செட்டி - முருகனுக்கும்பெயர். (செப்பென்பது) சொல் - கரண்டகத்துக்கும்பெயர். (மட்டென்பது) எல்லை - கள்ளுக்கும்பெயர். (மார்க்கமென்பது) சமயம் - தெருவுக்கும்பெயர். (பட்டிகையென்பது) முலைக்கச்சு - தெப்பம் - அரைஞாணுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

தட்டேபரிசையுமுட்டுங்குற்றமுந் தட்டுந்தேர்நடுவுஞ்சாற்றுமைம்பெயரோ) செட்டியேவாணிகனுமுருகனும்) செப்பேகரண்டகஞ்சொல்லுடனிருபெயர்) மட்டேயெல்லையுங்கள்ளுமிருபெயர்) மார்க்கமேமறுதலையமுலகமும் வழியுஞ்சமயமும்விதியுமைம்பேர்)பட்டிகைதானேயிரதமும்புணையுங் கச்சுமெனவேகாட்டுமுப்பெயரோ. *உஉ*

கடைமுடிவிடம்வாயிற்பேர்களேபரம்பிணமுடம் - - பா
முடைதுகில்செல்வமென்பவுடுக்கைதண்ணுமைதுகிற் - பே
ரடையிலைகனமேயப்பமடுத்தல்செல்வழியைம்பே - - ரா
நடைவழியொழுக்கஞ்செல்வநாரொன்பகயிறன்பா - - மே.

இதன்பொருள்

(கடையென்பது) முடிவு - இடம் - வாயிலுக்கும்பெயர். (களேபரமென்பது) பிரேதம் - சரீரத்துக்கும்பெயர். (உடையென்பது) வஸ்திரம் - செல்வத்துக்கும்பெயர். (உடுக்கையென்பது) உடுக்கை - வஸ்திரத்துக்கும்பெயர். (அடையென்பது) இலை - பாரம் - அப்பம் - அடுத்தல் - வழிக்கும்பெயர். (நடையென்பது) வழி - ஒழுக்கம் - செல்வத்துக்கும்பெயர். (நாரென்பது) கயிறு - இஷ்டத்துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

கடையேயிடமுஞ்சோரியும்வாயிலு மாவணமுடனேயப்புக்கடையு முடிவுமென்றேமொழியுமறுபெயர்) களேபரமேபிணமுடலெனவிருபெயர்) உடையென்பதுவேசெல்வமுங்கூறையு முடைமையுஞ்சரணமுங்கலணையுமுள்ளுங் குடைவேலெனவுங்கூறுமேழ்பெயரோ) உடுக்கையேதுகில்வாச்சியமிருபெயர்) அடை

யென்பதுவேயிலையுங்கனமு மடுத்தலுடனேசெல்லும்வழியு மி லட்டுகமெனவுமிசைக்குமைம்பெயரே) நடையேவழியுமொழு க்கமுஞ்செல்வமுங் கூத்துநடையுங்கூறுமைம்பெயரே) நாரே யன்புங்கயிறுநாருமாம். *உஙு*

விடையெதிர்மொழியுமேறும்விடுத்தலும்விளம்புமுப்பே - ர்
கிடைகிடையுவமைநெட்டிகீதமேயிசையும்வண்டு - - - ம்
படியங்கவடிசோபானம்பகைகுணமுவமைபாரா - - ங்
குடிகுலம்புருவமூராங்கொடிவல்லிதுவசங்காக் - - - கை.

இதன்பொருள்

(விடையென்பது) எதிர்மொழி - இடபம் - அனுப்பலுக்கும்பெ யர். (கிடையென்பது) கிடை - உவமை - சடைக்கும்பெயர். (கீத மென்பது) இராகம் - வண்டுக்கும்பெயர். (படியென்பது) சுதி ையங்கவடி - சற்படி - பகை - பண்பு - ஒப்பு - பூமிக்கும்பெயர். (குடியென்பது) சாதி-புருவம் - ஊருக்கும்பெயர். (கொடியென் பது) படர்கொடி - துகிற்கொடி - காகங்கைக்கும்பெயரொன்றவா

இதற்குமேற்கோள் [று.

விடையேயேறுமெதிர்மொழிகொடுத்தலும் விடுத்தலுமென வேவளம்புமுப்பெயரே) கிடையேயுவமையுஞ்சடையுங்கிடையு மாம்) கீதமென்பதிசையுமூங்கிலும் வண்டுமெனவேவைக்குமுப் பெயரே) படிசோபானமுமுவமையுநாழியும் பூமியும்பகையுமங் கவடியு நீருமெனவேநிகழ்த்தலாகும்) குடியேயூருங்குலமும்பு ருவமும்)(அ - கை) கொடியென்பவல்லிவஞ்சிநீளத்தண்கொடிகா க்கைப்பேர். *உச*

நட்டமேநடனங்கேடாநகரொன்பமனையுமூரு - - - ந்
தொட்டலென்பதுவேயுண்டலுரேண்டல்கைதீண்டன்முப்பே ர்
தட்டலேதடைகிட்டற்பேர்தையொருமாதம்பூச - - - ங்
கட்டலென்பதுதடுத்தல்களைதல்பந்தித்தல்கள்ள - - - ல்.

இதன்பொருள்

(நட்டமென்பது) கூத்து - கேட்டுக்கும்பெயர். (நகரென்பது) விடு - ஊருக்கும்பெயர். (தொட்டலென்பது) உண்டல் - தோண்டு தல் - கையாற்றொடுதலுக்கும்பெயர். (தட்டலென்பது) தடுத்தல் -

கிட்டுதலுக்கும்பெயர். (தையென்பது) ஓர்மாதம் - பூசநக்ஷத்திரத்துக்கும்பெயர். (கட்டலென்பது) தடுத்தல் - களைதல் - கட்டல் - திருடலுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

நட்டமேநடனங்கேடெனவிருபெயர்) நகரோமனையுமூருங்கோயிலும்) தொட்டலேலைகைதீண்டலுமுண்டலுந் தோண்டுதலெனவுஞ் சொல்லுமுப்பெயரே) தட்டலொற்றறுத்தலுந்தடுத்தலுங்கிட்டலும்)தையென்பதுவேபூசநாளு மோர்மாதமுமெனவுரைக்குமிருபெயர்) கட்டல்பற்றித்தலுங்கள்ளலுந்தடுத்தலுங் களைதலுமென வேகழறலாகும். *௨௫*

புட்கர்நிறைவுபாண்டமுகந்தீர்த்தம்புனல்வான்சேன - - ங்
கட்கம்பங்கயமேயானைக்கைநுனிகுருகிரைந்தா - - ம்
வெட்சியென்பதுவேசெச்சைமிகுநிரைகவர்தலென் - - - ப
பெட்பென்பபெருமையன்பாம்பிரசந்தேன்மதுவண்டா - மே.

இதன்பொருள்

(புட்கரமென்பது) நிறைவு - பாண்டமுகம் - தீர்த்தம் - நீர் - ஆகாயம் -பருந்து - வாளாயுதம் - தாமரை - யானைத்துதிக்கை நுனி - குருகெனுமோர்பறவைக்கும்பெயர். (வெட்சியென்பது)வெட்சிப்பூஞ்செடி - பகைஞர்பசுக்கூட்டத்தைக்கவர்தலுக்கும்பெயர். (பெட்பென்பது) பெருமை - இஷ்டத்துக்கும்பெயர். (பிரசமென்பது) தேன் - கள் - வண்டுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

புட்கரமேயாகாயமுநீரு நிறைவும்வாளுங்குருகுந்தீர்த்தமும் பாண்டமுகமுமிபக்கைநுனியும் பங்கயத்துடனேபருந்தும்பத்தே) வெட்சிதானேயோர்பூஞ்செடியும் பகைநிரையோட்டலும்பகருமிருபெயர்)பெட்பென்பதுவேவிருப்பமும்பீடுமாம்)பிரசமென்பதுவண்டுங்கள்ளுந் தேனுந்தேனீயெனவுநாற்பெயரே. *௨௬*

அடுதலேயட்டலென்பவடர்தலுங்கொலையுமப்பே - - - ர்
சடிலமேநெருங்கலோடுசடைகுதிரையுமப்பே - - - ரோ
படலையேபடர்தன்மாலைபதலையேவாசிக்கோ - - - லவ

கிடுகுதேர்மரச்சுற்றின்பேர் பரிசைக்குங்கிளத்தலா - - மே.

இதன்பொருள்

(அடுதலென்பது) தீயிற்பாகமாக்குதல் - நெருங்கல் - கொல்லுத
லுக்கும்பெயர். (சடிலமென்பது) நெருங்கல் - சடை - குதிரைக்கு
ம்பெயர். (படலையென்பது) பரந்தவடிவு - பூமாலை - வாயகன்றப
றை - குதிரைக்கிண்கிணிமாலைக்கும்பெயர். (கிடுகென்பது) தேரின்
மரச்சுற்று - கேடகத்துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

அடுதல்கோறலுமட்டலுமடர்தலும்) சடிலநெருக்கமுஞ்சடையுங்
குதிரையும்) படலைபரந்தவாய்ப்பறையுமாலையும் பரியின்கோவை
யும்படர்தலுமாகும்) கிடுகுதேர்மரச்சுற்றுங்கேடகமும். *௨௭*

படலிகைபிர்க்குவட்டம்பரந்தகைம்மணிபூந்தட்டா - - ங்
கொடியனேகொடியன்கேதாங்குண்டாழந்தாழ்வாண்மா - வே
தொடுவென்பமருதப்பூமிதோட்டங்கைதவமுப்பே - - ரே
முடிமயிர்முடியேசென்னிமகுடமுமொழியலா - - - மே.

இதன்பொருள்

(படலிகையென்பது) பிர்க்கு - வட்டவடிவு - கைம்மணி - பூந்தட்
டுக்கும்பெயர். (கொடியனென்பது) துன்மார்க்கன் - கேதுவெ
னும்பாம்புக்கும்பெயர். (குண்டென்பது) ஆழம் - தாழ்வு - ஆண்
குதிரைக்கும்பெயர். (தொடுவென்பது) மருதநிலம் - தோட்டம் -
வஞ்சத்துக்கும்பெயர். (முடியென்பது) மயிர்முடி - தலை - கிரீடத்
துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

படலிகைபிர்க்கும்பரந்தகைம்மணியும் பூந்தட்டும்வட்டமும்புக
லுவர்புலவர்) கொடியனேதுட்டன்கேதிருபெயரே) குண்டேயா
ழமுந்தாழ்வுமாண்மாவுந் திரண்டகல்லுஞ்செப்புநாற்பெயரே)
தொடுவேதோட்டமுமருதநிலமும் வஞ்சமுமெனவேமதிக்குமுப்
பெயரே) முடியேசென்னியுமயிரின்முடியு மகுடமுமெனவேவழ
ங்குமுப்பெயரே. *௨௮*

ஆடகந்துவளாபொன்னுமஞராறிவிலரேதுக்க - - - - ம்

கோடகமுடியுறுப்புங்குதிரையும்புதுமையும்பே - - - ர்
பீடிகையாவணம்பூந்தட்டொடுபீடமுப்பே - - - - ர்
தோடுபூவிதழேயெண்ணமடல்போல்வதொகுதிக்கும்பே - ர்

இதன்பொருள்

ஆடகமென்பது) துவரை - பொன்னுக்கும்பெயர். (அருரொன்பது) அறிவிலார் - துயரத்துக்கும்பெயர். (கோடகமென்பது) முடியுறுப்பு - குதிரை - புதுமைக்கும்பெயர். (பீடிகையென்பது) கடைவீதி - பூந்தட்டு - ஆசனத்துக்கும்பெயர். (தோடென்பது) பூவினிதழ் - பனையேடுபோல்வன - கூட்டத்துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

ஆடகமென்பதுபொன்னுந்துவரையும்) அருரோதுக்கமறிவிலரிருபெயர்) கோடகமேமுடியுறுப்புங்குதிரையும் புதுமையுமெனவேபோற்றுமுப்பெயரோ) பீடிகையேயாவணம்பூண்கொள்கலம் பீடம்பூந்தட்டெனநாற்பெயரோ) தோடேயணையுமிலையுந்தொகுதியும் பனையிதழ்போல்பவும்பூவினிதழு மைம்பெயரெனவேயறைந்தனர்புலவர். *உகூ*

அடரொன்பநெருங்குதற்பேரைம்மையின்வடிவுமாகு - - ம்
விடர்முனியிருப்புத்தூர்த்தர்கமர்வெற்பின்முழைகாடைம்பே ர்
விடலையேதலைவன்பேரும்விறலோன்றன்பேருமா - - - கு
மடிசெண்டுவெளிதாளாதிகவிதையின்பாதமா - - - மே.

இதன்பொருள்

(அடரொன்பது) நெருங்குதல் - அச்சவடிவுக்கும்பெயர். (விடரொன்பது) முனிவரிருப்பிடம் - தூர்த்தர் - வெடிப்பு - மலைப்பிளப்பு - காட்டுக்கும்பெயர். (விடலையென்பது) பாலைநிலத்தலைவன் - வெற்றியாளனுக்கும்பெயர். (அடியென்பது) குதிரைவையாளிவீதி - கால் - முதல் - பாட்டினடிக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

அடரோயையமுந்தகடுநெருக்கமும்) விடர்மலைப்பிளப்புந் தூர்த்தரும்விடவுந் தவத்தோரிடமுங்கானுமாகும்) விடலையென்பதுவேவெற்றியாளனும் பாலைத்தோன்றலும்பகருமிருபெயர்) அடியேசெண்டுவெளியுமாதியும் பாட்டினடியும்பாதமுநாற்பேர். *௩௰*

டகரவெதுகைமுற்றிற்று.

புணர்வுதோய்ந்திடலிசைப்பாம்பொழில்புவிபெருமைசோ - லை
யுணர்வென்பதெளிவேயூடலொழிதலேயறிவுமாகு - - - ங்
குணமென்பகயிறுபண்புகும்பம்வின்னாணிநாற்பே - - - ர்
கணமுடுநோய்திரட்சிகாலநுட்பம்பேய்வட்ட - - - - ம்.

இதன்பொருள்

(புணர்வென்பது) கலவி - இசைப்புக்கும்பெயர். (பொழிலென்பது) பூமி - பெருமை - சோலைக்கும்பெயர். (உணர்வென்பது) தெளிவு - ஊடலொழிதல் - அறிவுக்கும்பெயர். (குணமென்பது) கயிறு - குணம் - குடம் - வின்னாணிக்கும்பெயர். (கணமென்பது) நக்ஷத்திரம் - ஓர்நோய் - கூட்டம் - காலநுட்பம் - பேய் - வட்டவடிவுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

புணர்வேதோய்ந்திடலிசைப்பெனவிருபெயர்) பொழிலேபுவியும்
பெருமையுஞ்சோலையு முலகமுமெனவேயோதுநாற்பெயரோ)
உணர்வேயூடநீர்தலுந்தெளிவு மறிவுமென்றேயாகுமுப்பெயரோ)
குணமென்பதுவேபண்புங்கும்பமுஞ் சீர்மையுங்கயிறும்விற்புனை
நாணியு முக்குணமெனவுமொழியுமறுபெயர்) கணமேயடுவுமற்ப
முமபேயுங் காலநுட்பமும்வட்டமுந்திரட்சியு மோர்நோயென
வுமோதுமேழ்பெயரோ. ※க※

ஆணமேகுழம்பொடன்பாமலநாஞ்சிலமைவுமா - - - மே
யோணமாயோனாளாறூதியமிலாபங்கல் - - - - - வி
காணமேபரிபூண்செககோர்கண்ணைல்பொற்காசுநாற்பே - ர்
கோணமேமாறுபாடுங்கூனுமாம்வளைவுமா - - - - மே.

இதன்பொருள்

(ஆணமென்பது) குழம்பு - இஷ்டத்துக்கும்பெயர். (அலமென்பது) கலப்பை - அமையுமென்றலுக்குப்பெயர். (ஓணமென்பது) திருவோணநக்ஷத்திரம் - நதிக்கும்பெயர். (ஊதியமென்பது) ஆதாயம் - வித்தைக்கும்பெயர். (காணமென்பது) குதிரையுணவு - செக்கு - ஓர்கட்பிராணி - பொற்காசுக்கும்பெயர். (கோணமென்பது) மாறுபாடு - கூன் - வளைவுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

ஆணந்தானேயன்புங்குழம்பும்) அலமேகலப்பையுமமைவுமா
கும்) ஒணந்தானேயாறுமோர்நாளும்) ஊதியமென்பதுகல்வியு
மிலாபமும்) (அ - கை) காணமேபரியூண்செக்கோர்கண்ணல்
பொன்னளத்தலும்பேர்) கோணமேலகூனும்வளைவுஞ்சிந்து மாறு
பாடெனவும்வைக்குநாற்பெயரோ. ＊உ＊

குணில்குறுந்தடிகடிப்பாங்குல்லையேதுளவுவெட் - - சி
மணிநவமணியேகண்டைவனப்பொடுகருமைநன் - - மை
துணிசோதிநாளேதுண்டந்துளிமழைத்துளிபெண்ணு - மை
பிணிமுகமயில்புட்யோரம்பிசிதநீரிறைச்சிவேம் - - - பு.

இதன்பொருள்

(குணிலென்பது) குறுந்தடி - பறையடிக்குங்குறுந்தடிக்கும்பெ
யர். (குல்லையென்பது) துளசி - வெட்சிப்பூஞ்செடிக்கும்பெய
ர். (மணியென்பது) நவமணி - யானைமணி - அழகு - கறுப்பு -
நன்மைக்கும்பெயர். (துணியென்பது) சோதிநக்ஷத்திரம் - துண்
டத்துக்கும்பெயர். (துளியென்பது) மழைத்துளி - பெண்ணு
மைக்கும்பெயர். (பிணிமுகமென்பது) மயில் - பறவைப்பொ
துவுக்கும்பெயர். (பிசிதமென்பது) நீர் - இறைச்சி - வேம்புக்கு
ம்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

குணிலென்பதுவேகணக்கிடுகயிறுங் குறுந்தடியுடனேக்டிப்பு
முப்பெயரோ) குல்லைகஞ்சாவும்வெட்சியுந்துழாயும்) மணியென்
பதுவேமுத்தும்வனப்புங் கருமையுநன்மையும்யானைமணியு
நவமணியெனவுநாட்டுமறுபெயர்) துணியேசோதிநாடுண்டமிரு
பெயர்) துளியென்பதுவேமழையின்றுளியும் பெண்ணுமையு
மெனப்பேசுமிருபெயர்) பிணிமுகமென்பதுமயிலுமெகினமு
ம் புள்ளின்பொதுவும்போற்றுமுப்பெயரோ) பிசிதந்தானேயி
றைச்சியும்வேம்பு நீருமெனவேநிகழ்த்துமுப்பெயரோ. ＊ங＊

நாணிலச்சைப்பேர்தானேகயிறென்றுநாட்டலாகு - - நீ
தோணியேகடைநாள்வங்கந்தொடுகணைதெப்பஞ்சே - று
வாணியேயோர்கூத்தின்பேர்வாக்குநாமகளுமா - - மே

யேணியேயுலகோடெல்லையிறைவைமானென்றுஞ்சொல்லு ம்.

இதன்பொருள்

(நாணென்பது) வெட்கம் - கயிற்றுக்கும்பெயர். (தோணியென்பது)இரேவதிநக்ஷத்திரம் - மரக்கலம் - அம்பு - தெப்பம் - சேற்றுக்கும்பெயர். (வாணியென்பது) ஓர்கூத்து - சொல் - சரஸ்வதிக்கும்பெயர். (ஏணியென்பது)உலகம் - எல்லை - ஏணி - மானுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

நாணேமடவார்மங்கலவணியு மிலச்சையுங்கயிறுமெய்திடுமுப்பெயர்) தோணிதானேயம்புந்தெப்பமு மதிலினுறிப்பு நீருஞ்சேறு மரக்கலமுமிரேவதியுமேழ்பெயரே) வாணியேயோர்கூத்தும்வாக்கு நாமகளெனவுநாட்டுமுப்பெயரே )ஏணியென்பது மானுமேணியு மெல்லையுமுலகுமென்றிசைக்குநாற்பேரே.*௪*

திணைநிலங்குலமொழுக்கஞ்செவியென்பகாதுகேள் - - வி
பிணையாசைவிலங்கின்பெண்பேர்பிலவங்கங்குரங்குதே - ரை
கணையம்புதிரட்சியும்பேர்கட்சியேகாடுங்கூடு - - - ம்
பணைவயல்பரியின்பந்திபருத்தல்வேயரசுபீடா - - - ம்.

இதன்பொருள்

(திணையென்பது) பூமி - சாதி - நன்னிலைக்கும்பெயர்.(செவியென்பது) காது - கேள்விக்கும்பெயர். (பிணையென்பது) ஆசை - பெண்மிருகத்துக்கும்பெயர்.(பிலவங்கமென்பது) குரங்கு - தேரைக்கும்பெயர்.(கணையென்பது) அம்பு - திரண்டவடிவுக்கும்பெயர். (கட்சியென்பது) காடு - பறவைக்கூட்டுக்கும்பெயர். (பணையென்பது) கழனி - குதிரைப்பந்தி - பருத்தல் - மூங்கில் - அரசமரம் - பெருமைக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

திணையேநிலமுங்குலமுமொழுக்கமும் புறத்திணையேழுமகத்திணையேழு மிருதிணையெனவுமெய்துமறுபெயர்) செவியேகாதுங்கேள்வியுமிருபெயர்) பிணையேயாசையும்விலங்கின் பெண்ணுநவ்வியும்பிணையுநாட்டுநாற்பெயரே) பிலவங்கமென்பதுதே

ணாயுங்குரங்கும்) கணையேயம்புந்திரட்சியுங்கோலும்) கட்சியெ
ன்பதுவேகாடுங்கூடுந் துயிலிடமெனவுஞ்சொல்லுமுப்பெய
ரோ) பணையேவயலுமருதமுமூங்கிலும் பரியின்பந்தியுமரத்தி
ன்கோடும் பிழைத்தலுமுரசும்பணைத்தலும்புறனும் பெருமை
யுமச்சுவத்தமும்பன்னென்றே. *ரு*

யாணரோபுதுமைதச்சரெய்தியவனப்புநன் - - - - மை
பாணந்தான்மேகவண்ணக்குறிஞ்சியெய்கணைபூம்பட்டா - ஞ்
சேணென்பதகலநீளஞ்செப்பிடிலுயரமும் - - - - பே
ராணமெய்யுடனேவென்றிசூளேவலாகநாற்பே - - - ர்.

இதன்பொருள்

(யாணரென்பது) புதுமை - தச்சர் - அழகு - நன்மைக்கும்பெ
யர். (பாணமென்பது) மழைவண்ணக்குறிஞ்சி - அம்பு - பட்டுவ
ஸ்திரத்துக்கும்பெயர். (சேணென்பது) அகலம் - நீளம் - உயரத்
துக்கும்பெயர். (ஆணையென்பது) உண்மை - வெற்றி - சபதம் -
ஏவலுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

யாணரோநன்மையும்புதுமையுந்தச்சரும் வனப்புமெனவேமருவு
நாற்பெயரோ)பாணமேபூம்பட்டுங்கணையு மேகவண்ணக்குறிஞ்
சியுமுப்பேர்) சேணையகலமுநீளமுந்தூரமு முயரமுமாகவிண்
ணுமோதுமைம்பெயரோ) ஆணையென்பதுவேயேவலுமெய்யும்
வெற்றியுஞ்சூளோடிலாஞ்சணையுமைந்தே *சா*

அண்டமாகாயமுட்டையயிலென்பவேலேகூர் - - - மை
துண்டமேசாரைப்பாம்புதுணியொடுவதனமூக்கா - - ங்
கண்டமேகவசம்வெல்லங்கழுத்திடுதிரைவாடுண் - - - ட
மூண்டகந்தாமழைகள்ளூமுளரிமத்தகமுண்மூல - - - ம்.

இதன்பொருள்

(அண்டமென்பது) ஆகாயம் - முட்டைக்கும்பெயர். (அயிலென்
பது) வேலாயுதம் - கூர்மைக்கும்பெயர். (துண்டமென்பது) சா
ரைப்பாம்பு - துண்டம் - முகம் - மூக்குக்கும்பெயர். (கண்ட
மென்பது) கவசம் - வெல்லம் - கழுத்து - திரைச்சீலை - வாளாயுதம் -
துண்டத்துக்கும்பெயர். (முண்டகமென்பது) தாமழை - கள் -

தாமரை - நெற்றி - முட்செடிக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

அண்டமேபிரமாண்டமுமுட்டையு மாகாயமும்விண்ணுலகுநா ற்பெயரே) அயிலேகோரையுமிரும்புங்கூர்மையுங் கைவேலெ னவுங்கருதுநாற்பெயரே) துண்டமென்பதுமுகமுஞ்சாரையு ந் துண்டமுமூக்குங்கண்டித்தலுமைம்பேர்) கண்டமேயிடுதிரை யுங்கவசமுங் கழுத்தும்வெல்லமுந் துண்டமும்வாளும் பூமியுந் தேசமும்போத்துமெண்பெயரே) முண்டகமென்பது தாழையு ங்கள்ளுங் கடலுநெற்றியுமம்போருகமு முண்மூலமுநீர்முள்ளி யுடனே முத்தகமெனவுமொழியுமெண்பெயரே. ＊எ＊

அண்டரோபகைவர்வானோராயரொன்றுகுமுப்பே - - - ர்
சுண்டனேசதயநாளுஞ்சூறனும்வேறுகாட்டு - - - - ங்
கண்டல்கேதகைமுள்ளிப்பேர்கனைதலேவிளித்தலோ - சை
பண்டம்பொன்பணிகாரப்பேர்பாகுபால்குழம்புபாக்கா - ம்.

இதன்பொருள்

(அண்டரென்பது) பகைஞர் - தேவர் - இடையருக்கும்பெயர். (சுண்டனென்பது) சதயநக்ஷத்திரம் - மூஞ்சூறுக்கும்பெயர். (கண்டலென்பது) தாழை - முள்ளிச்செடிக்கும்பெயர். (கனைத லென்பது) அழைத்தல் - சத்தத்துக்கும்பெயர். (பண்டமென் பது) பொன் - பலபண்டத்துக்கும்பெயர். (பாகென்பது) ப ங்கு - குழம்பு - பாக்குக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

அண்டரென்பதுவேபகைவருமிடையரு மமரரெனவுமறையுமு ப்பெயரே) சுண்டனென்பதுவேசதயநாளு மூஞ்சூறெனவு மொழியுமிருபெயர்)கண்டலென்பதுமுள்ளியுந்தாழையும்) கனைதலுனேவிளித்தலுமோசையுங் கனைதலுமெனவேகாட்டு முப்பெயரே) பண்டமேபணிகாரமும்பொன்னும்) பாகென்ப துவேபாக்குங்குழம்பும் பரணிநாளும்பகிர்ச்சியுங்கரையும் பா கனுஞ்சத்தியுங்கட்டியுமெண்பெயர். ＊அ＊

விண்டென்பமாயோன்வெற்புமேகமேமூங்கில்காற்று - நீ
தொண்டென்பபழமையொன்பான்றொழும்பொடுவழிபாடாமே

தண்டென்பகுழாயேவீணைதடிபடைமிதுனமோந் - - தி
வண்டென்பசங்குகுற்றம்வளையளிவாளியைம்பே - - ர்

இதன்பொருள்

(விண்டென்பது) திருமால் - மலை - மேகம் - மூங்கில் - காற்றுக்கும்பெயர். (தொண்டென்பது)பழமை - ஒன்பது - அடிமை - வழிபடுதலுக்கும்பெயர். (தண்டென்பது) துளையுடைப்பொருள் - வீணை - தடி - சேனை - மிதுனவிராசி - ஒளுனுக்கும்பெயர். (வண்டென்பது) சங்கு - குற்றம் - கைவளை - வண்டு - அம்புக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

விண்டேமாயனும்வெற்புமூங்கிலுங் காற்றுமேகமுங்கருதுமைம்பெயரே) தொண்டேயொன்பதுமடிமையும்பழமையு முருவுசிருக்கும்வழிபாடுமைம்பேர்) தண்டேவீணையுந்தடியும்படையுந் குழாயும்வரம்புமிதுனவிராசியுஞ் சிவிகையுந்தண்டமுஞ்செப்புமெண்பெயரே) வண்டேசங்குங்குற்றமும்வளையும் வண்டும்வாளியுமருவுமைம்பேரே.

*கூ*

உண்டையேதிரளையாகுமுறுபடைவகுப்புமென் - - - ப
தொண்டையாதொண்டைகொவ்வைதூங்கும்யானைத்துதிக் கை
கொண்டையேமயிர்முடிக்குமிலந்தையின்கனிக்குங்கூற்று - ங்
கண்டிகைபதக்கம்வாகுவலயமேகலன்பெய்செப் - - பு.

இதன்பொருள்

(உண்டையென்பது) திரண்டவடிவு - படைவகுப்புக்கும்பெயர். (தொண்டையென்பது) ஆதொண்டைச்செடி - கோவைக்கொடி - யானைத்துதிக்கைக்கும்பெயர். (கொண்டையென்பது) மயிர்முடி - இலந்தைப்பழத்துக்கும்பெயர். (கண்டிகையென்பது) பதக்கம் - தோளணி - ஆபரணச்செப்புக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

உண்டையேபடைவகுப்புந்திரளையும்)தொண்டையேயாதொண்டையுங்கொவ்வையுங் கழுத்தும்யாவணத்துதிக்கையுநாற்பேர்) கொண்டையென்பதுவேயிலந்தையின்கனியு மயிர்முடியெனவும்வைக்குமிருபெயர்) கண்டிகையேயணிச்செப்பும்பதக்கமும்

வாகுவலயமுமருவுமுப்பெயரே. *௰*
தண்ணமோர்கட்பறைப்பேர்தறித்திடுமழுவுமாகு - - - ம்
வண்ணமேர்சந்தம்பண்பாமறையிராசியமேவேத - - ம்
பண்ணெனப்பாட்டும்பண்ணும்பரிமாவின்கலணையும்பே - ர்
மண்ணணுவொப்பனைப்பேர்முழவின்மார்ச்சனையுமா - மே.

இதன்பொருள்

(தண்ணமென்பது) ஒருகட்பறை - பரசாயுதத்துக்கும்பெயர். (வண்ணமென்பது) அழகு - நிறம் - குணத்துக்கும்பெயர். (மறையென்பது) மறைவு - வேதத்துக்கும்பெயர். (பண்ணென்பது) இசைப்பாட்டு - பண் - குதிரைச்சேணத்துக்கும்பெயர். (மண்ணென்பது) அணு - அலங்காரம் - மத்தளத்திற்பூசுமண்ணுக்கும் பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

தண்ணமென்பதுவேயோர்கட்பறையு மழுவுமெனவேவைக்குமி ருபெயர்) வண்ணந்தானேயொப்பனைசெயலு மழகுஞ்சந்தமு ங்கவியிஞேசையும் பண்புமெனவேபகருமைம்பெயரே) மறை யேகேடகமந்திரம்வேத மிராசியமெனவேயியம்பு நாற்பெய ரே) பண்ணென்பதுவேபாட்டும்பண்ணு மாதர்கூட்டமுநீரினி லையுங் கலணையுமெனவேகாட்டுமைம்பெயரே) மண்ணேயணுவு முழவின்மார்ச்சனையு மொப்பனையுங்கழுவுதலுமாட்சிமையும் பூ மியுமெனவேபோற்றுமறுபெயர். *௰௧*

அணங்குநோயழகுதெய்வமாசைபெண்கொலைவருத்த - - ந்
துணங்கையேவிழாப்பேய்க்கூத்தாமாதிரைநாளுஞ்சொல்லு ங்
குணுங்கர்தோற்கருவிமாக்கள்குயிலுவரிழிஞர்முப் - பேர்
துணங்கறலிருள்விழாவாந்தோன்றலேசுதனுதன்பே - ர்.

இதன்பொருள்

(அணங்கென்பது) வியாதி - அழகு - தெய்வம் - ஆசை - பெண் - கொல்லுதல் - பிரயாசத்துக்கும்பெயர். (துணங்கையென்பது) திருவிழா - பேய்க்கூத்து - திருவாதிரைநக்ஷத்திரத்துக்கும்பெ யர். (குணுங்கரென்பது) தோற்கருவியாளர் - நரம்பிஞயகருவி க்குரியோர் - சண்டாளருக்கும்பெயர். (துணங்கறலென்பது)

இருள் - திருவிழாவுக்கும்பெயர். (தோன்றலென்பது) மகன் - அரசனுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

அணங்கேயழகுநோயுங்கொலையு மச்சமும்வருத்தமும்பெண்ணுஞ்சூருந் தெய்வப்பெண்ணுந்தெரிக்குமெண் பெயரோ) தணங்கையேயொருநாளும்விழவும் பேய்க்கூத்தெனவும்பேகமுப்பெயரோ) தணங்கறலேயிருள்விழா விருபெயரோ) தோன்றலேபுத்திரனுநாதனு முல்லைத்தலைவனுமுளைத்தலுநாற்பேர். *மஉ*

புணரியேவாரிநீரிற்பொருதிரைகளுமுப்பேரா - - - ம்
பணிலமேசலஞ்சலஞ்சங்கிருபெயர்பகரலா - - - - மே
கணிவேங்கைமரமதாகுங்கழனிசூழ்மருதமும்பே - - - ர்
பணியேதோற்கருவிவார்த்தைபாம்புசெய்தொழிலுமா - மே.

இதன்பொருள்

(புணரியென்பது) கடல் - அலை - களைக்கும்பெயர். (பணிலமென்பது)வலம்புரியாயிரஞ்சூழ்ந்தசங்கு - சங்குக்கும்பெயர்.(கணியென்பது)வேங்கைமரம் - மருதநிலத்துக்கும்பெயர். (பணியென்பது)தோற்கருவி - சொல் - பாம்பு - தொழிலுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

புணரியேயுயர்களையுங்கடலுங் கடற்றிரையெனவுங்கருதுமுப்பெயரோ) பணிலமேசலஞ்சலஞ்சங்கிருபெயரோ) கணியென்பதுவேமருதநிலமும் வேங்கைமரமுமோர்சாதியுமுப்பேர்)பணியேயேவலுமுரகமும் வார்த்தையும் பெருமையுந்தொழிலுங்கொடையும்பணியுந் தோற்கருவியுமெனச் சொல்லுமெண்பெயரோ *மங*

பாணியூர்நீர்கையோசைபற்றுக்கான்போதுநா - - - டு
சேணுறுசோலைபண்டஞ்சிறந்தபல்லியம்பன்னென்று - - ந்
தாணுவேசயிலங்குற்றிசங்கரனிலைதூணம்பே - - - - ர்
வேணியேசடைவிசும்பாம்வியாளமேபுலியும்பாம்பு - - ம்.

இதன்பொருள்

(பாணியென்பது) ஊர் - நீர் - கை - சத்தம் - பற்று - காடு - கா

லம் - நாடு - சோலை - பலபண்டம் - வாச்சியப்பொதுவுக்கும்பெயர். (தாணுவென்பது) மலை - குற்றி - சிவன் - நிலைபெறுதல் - தாணுக்கும்பெயர். (வேணியென்பது) மயிர்ச்சடை - ஆகாயத்துக்கும்பெயர். (வியாளமென்பது) புலி - பாம்புக்கும்பெயரொன்றவாறு.

## இதற்குமேற்கோள்

பாணியேயூருஞ்சோலையும்பண்டமும் பாடலுநாடும்பற்றுமோசையு நீருங்கையுநெடும்போதுடனே பல்லியமெனவும்பன்னொன்றேபேர்) தாணுவென்பதுவேமலையுஞ்சிவனுந் தாணுங்குற்றியுநிலைபேறுமைம்பேர்) வேணியேமயிர்ச்சடைவிசும்பிருபெயரோ) வியாளமேபுலியுரகமிருபெயர். *௰௪*

குண்டலங்குழைவிசும்பாங்குபேரனேதனதன்சோம - - ன்
மண்டிலம்பரியூர்வட்டமந்தியேயூகம்வண் - - - - டு
கொண்டலேமுகில்கீழ்காற்றுங்கோட்டியேவாயில்கூட் - ட
மண்டலிபூனைபாம்புமண்ணொடுநாயுமா - - - - - மே.

## இதன்பொருள்

(குண்டலமென்பது) குண்டலம் - ஆகாயத்துக்கும்பெயர். (குபேரனென்பது) குபேரன் - சந்திரனுக்கும்பெயர். (மண்டிலமென்பது) குதிரை - ஊர் - வட்டத்துக்கும்பெயர். (மந்தியென்பது) பெண்குரங்கு - வண்டுக்கும்பெயர். (கொண்டலென்பது) மேகம் - கீழ்காற்றுக்கும்பெயர். (கோட்டியென்பது) வாயில் - கூட்டத்துக்கும்பெயர். (மண்டலியென்பது) பூனை - பாம்பு - பூமி - நாய்க்கும்பெயரொன்றவாறு.

## இதற்குமேற்கோள்

குண்டலமேகுழைவிசும்பொடிருபெயர்) குபேரனென்பதுநிலவுங்குபேரனும்) மண்டிலமென்பதுநாடுங்குதிரையும் வட்டமுமெனவேவைக்குமுப்பெயரோ) மந்திபெண்குரங்குவண்டிருபெயரோ) கொண்டலேகீழ்காற்றுமேகமும்) கோட்டியென்பதநகருங் கூட்டமுஞ் சவையும்வாயிலுஞ்சாற்றுநாற்பெயரோ) மண்டலிதானேயுரகமும்பூமியு நாயும்பூனையுநாற்பெயராகும். *௰௫*

புண்டரீகந்திக்கானைபுலிவண்டுகழுகுகஞ்ச - - - - - ந்
தண்டமேயானைசெல்லும்வழிதண்டாயுதங்குடைக்கா - ல்
பிண்டிநென்மாவசோகாம்பிதாச்சிவன்பிரமனு - - - னா
கண்டகஞ்சுரிகைமுள்வாள்களவென்பகளாச்சோரப்பே - ர்.

இதன்பொருள்

(புண்டரீகமென்பது) தென்கீழ்த்திசையானை - புலி - வண்டு - கழுகு - தாமரைக்கும்பெயர். (தண்டமென்பது) யானைசெல்லும் வழி - தண்டாயுதம் - குடைக்காம்புக்கும் பெயர் . (பிண்டியென்பது) நென்மா - அசோகமரத்துக்கும்பெயர். (பிதாவென்பது) சிவன் - பிரமன் - நானாக்கும்பெயர். (கண்டகமென்பது) உடைவாள் - முள் - வாளாயுதத்துக்கும்பெயர். (களவென்பது) களாச்செடி - திருட்டுக்கும்பெயரென்றவாறு.

இதற்குமேற்கோள்

புண்டரீகமேபுலியும்வண்டுங் கழுகுங்கஞ்சமுந்திக்கயத்தொன்றும் வெண்கொற்றக்குடையுட்விளம்புமறுபெயர்)(அ-கை)தண்டமேருடைக்காலூர்திதண்டித்தல்கதைபண்டார்ங் கண்டுறுநாடு சேனைகரித்தடம்வரம்பொன்பான்பேர்) பிண்டியேநென்மாவுமசோகும் பிண்ணுக்குடனேபேசுமுப்பெயரோ) பிதாவென்பது வேபிரமனுநானாயுந் தாதையுஞ்சிவனுஞ்சாற்றுநாற்பெயரோ) கண்டகமென்பதுசுரிகையும்வாளு முள்ளுமெனவேமொழியுமுப்பெயரோ) களவென்பதுவேதிருட்டுமுன்மத்தமுங் களாச்செடியுடனேகழறுமுப்பெயரோ.

✻ம௲✻

பண்ணவன்முனிவன்றேவன்பகர்குருவருகனுற்பே - - - ர்
தண்ணடைமருதஞ்சாரூர்நாடெனவிருபேர்சாற்று - - ம்
வண்மையேவழங்கல்வாய்மைவளம்புகழ்வலியாமென் - - ப
வொண்மையேமிகுதிநன்மையொழுங்கறிவழகைம்பே - ரோ.

இதன்பொருள்

(பண்ணவனென்பது) முனிவன் - தேவன் - குரு - அருகனுக்கும்பெயர். (தண்ணடையென்பது) மருதநிலத்தூர் - நாட்டுக்கும்பெயர். (வண்மையென்பது) கொடுத்தல் - உண்மை - வளமை - புகழ் - வலிமைக்கும்பெயர். (ஒண்மையென்பது) மிகுதி - நன்மை -

ஒழுங்கு - அறிவு - அழகுக்கும்பெயரொன்றவா று.

இதற்குமேற்கோள்

பண்ணவன்ருனேயருகனுமுனிவனு ந் தேவனுங்குருவுஞ்செப்புநாற்பெயரோ) தண்ணடைதானேயுடுக்கையுநாடு மருதநிலத்தூருடனேகாடும் பச்சிலையெனவும்பகருமைம்பெயரோ) வண்மையென்பதுவாய்மையுங்கொடையும் வலியும்புகழும்வளமுமைம்பெயரோ) ஒண்மையேமிகுதியுமறிவுமழகு நன்மையுமொழுங்குநவிலுமைம்பெயரோ. ௬எ

எண்ணென்பதெள்ளிலக்கமெளிமைசோதிடம்விசார - - ங்
கண்ணிடங்கணுவேய்கண்ணுங்காஞ்சிமேகலையோர்பண்ணு - ம்
விண்முகில்சுவர்க்கம்வானும்விபுலம்பார்விரிவுமூ - - - டு
பண்ணையேவயனீர்த்தாழ்வுமருதமாத்துயிலும்பா - - ழி.

இதன்பொருள்

(எண்ணென்பது) எள் - இலக்கம் - எளிமை - சோதிடநூல் - ஆலோசனைக்கும்பெயர். (கண்ணென்பது) இடம் - மரக்கணு - மூங்கில் - கண்ணுக்கும்பெயர். (காஞ்சியென்பது) மாதரிடையணியுளேழுகோவை - ஓர்பண்ணுக்கும்பெயர். (விண்ணென்பது) மேகம் - தேவலோகம் - ஆகாயத்துக்கும்பெயர். (விபுலமென்பது) பூமி - அகலம் - பெருமைக்கும்பெயர். (பண்ணையென்பது) கழனி - குளம் - மருதநிலம் - விலங்கின்படுக்கையிடத்துககும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

எண்ணென்பதுவேசோதிடநூலு மெளிமையும்வலியுமெள்ளும் விசாரமு மெண்ணுமெனவேயிசைக்குமறுபெயர்) கண்ணென்பதுவேயிடமும்விழியும் பெருமையுமூங்கிலும்பேசுநாற்பெயரோ) காஞ்சியேயெதிருநன்றலும்பெருமைய மணிமேகலையுமறிவுமோர்மரமு நிலையின்மையுமோருருமென்றேழ்பேர்) விண்ணேமேகமும்விசும்புமிளமையு முப்பெயரொன்றேமொழியற்பாற்றே) விபுலமென்பதுபெருமையும்விரிவும் பூமியெனவும்போற்றுமுப்பெயரோ) பண்ணையேகன்னியர்விளையாட்டு மாதர்கூட்டமுமருதநிலமு மிருகத்துயிலிடமுநீரின்றாழ்வும் வயலுமெனவேமரு

வுமாறுபெயர்.

*௰௮*

காண்டமேதிரைகாடம்புகமண்டலங்கலன்பெய்செப் - பு
நீண்டகோன்முடிவுதூசுநீர்படைக்கலமீரைந்தா - - - ம்
பாண்டிலேறார்திவட்டம்பணைகட்டில்விளக்குத்தா - - ள
மீண்டென்பதிவ்விடத்தோடிப்படிசடிதியும்பே - - - ர்.

இதன்பொருள்

(காண்டமென்பது) திரைச்சீலை - காடு - அம்பு - கமண்டலம் - ஆபரணம்வைக்குஞ்செப்பு - கோல் - முடிவு - வஸ்திரம் - நீர் - ஆயுதத்துக்கும்பெயர். (பாண்டிலென்பது) எருது - வாகனம் - வட்டவடிவு - மூங்கில் - கட்டில் - விளக்கு - தாளத்துக்கும்பெயர். (ஈண்டென்பது) இவ்விடம் - இவ்வண்ணம் - சீக்கிரத்துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

காண்டமேயிடுதிரையுமுடிவுங் காடுந்தீர்த்தமுங்காண்டமுநீரும் புந்தியுந்தூசுந்திரளுங்கோலு மம்பும்படைக்கலமுமட்டணிச்செப்புங் கமண்டலமெனவும்பெயர்பதினன்கே) பாண்டிலென்பதுவிளக்கின்றகழியும் வட்டமுங்கட்டிலுமேறுமூர்தியுந் தாளமும்வேயுஞ்சாற்றுமேற்பெயரே) ஈண்டென்பதுவேயிவ்விடஞ்சடிதி யிப்படியெனவுமுப்பெயராகும்.

*௰௯*

அண்டசமுதலையோந்தியரணைபுள்ளுடும்புபல் - - - லி
நண்டுமீன்றவளையாமைநாகமிப்பியுமீராறு - - - - ஞ்
சண்டன்கூற்றலிவெய்யோனுந்தாள்கதவுறுதாள்பாத - - ஞ்
சுண்டையேசுண்டைகள்ளாஞ்சொர்க்கமேசுவர்க்கங்கொங் கை.

இதன்பொருள்

(அண்டசமென்பது) முதலை - ஓணான் - அரணை - பறவை - உடும்பு - பல்லி - நண்டு - மீன் - தவளை - ஆமை - பாம்பு - இப்பிக்கும்பெயர். (சண்டனென்பது) இயமன் - பேடி - சூரியனுக்கும்பெயர். (தாளென்பது) தாப்பாள் - பாதத்துக்கும்பெயர். (சுண்டையென்பது) சுண்டைச்செடி - கள்ளுக்கும்பெயர். (சொர்க்கமென்பது) தேவலோகம் - முலைக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

அண்டசமிப்பியுமரகமுந்தவளையு முதலையுமீனுமுடும்புமோந்தி

யு மரணையுங்கெளளியுநண்டும்பறவையு மாமையுமிவைமுதலாம்
பன்னிரண்டே(அ-கை)சண்டனேயலியேகாலன்றடனனென்
ரேருதற்கும்பேர்) தாளென்பதுவேகதவுறுதாளும் பாதமுமுயற்
சியும்பகருமுப்பெயரோ) சுண்டையேமதுவுஞ்சுண்டையுமிருபெ
யர்) சொர்க்கமேமுலையுஞ்சொர்க்கமுமிருபெயர். ✻உ௰✻
பணமென்பதரவின்பையும்பாம்பும்பொற்காசுமுப்பே - ர்
மணமென்பவாசங்கூட்டம்வதுவையுமாகுமென் - - - ப
பணவையேபரணுற்பேயும்பையுளேசிறுமைநோ . - - யா
நுணவையெண்ணேலபிண்டி நுனியென்பநுனிநுண்மைப்பே ர்.

இதன்பொருள்

(பணமென்பது) பாம்பின்படம் - பாம்பு - பொற்காசுக்கும்பெ
யர். (மணமென்பது) வாசனை - கூட்டம் - கலியாணத்துக்கும்
பெயர். (பணவையென்பது) பரண் - பிசாசத்துக்கும்பெயர்.
(பையுளென்பது) அற்பம் - வியாதிக்கும்பெயர். (நுணவையெ
ன்பது) எண்ணேல - மாவுக்கும்பெயர். (நுனியென்பது) கூர்
மை - நுட்பத்துக்கும்பெயரென்றவாறு.

இதற்குமேற்கோள்

பணமேயுரகமும்பாம்பின்படமும் பணமுமெனவேபகருமுப்
பெயரோ) மணங்கலியாணமும்வாசமுங்கூட்டமு மகிழ்ச்சியுமெ
னவேவழங்கலாகும்) பணவைகழுதும்பரணுமளவும் புள்ளுமெ
னவேபுகன்றனர்புலவர்) பையுளேநோயுஞ்சிறுமையுமிருபெயர்)
நுணவையென்பதுவேநுண்பிண்டியு மெண்ணேலயுமெனவி
சைசகுமிருபெயர்) நுனியேநுண்மையுநுனியுமிருபெயர்.✻உக✻
ணகரவெதுகைமுற்றிற்று. தகரவெதுகை
மதலையேகொன்றைபிள்ளைமரக்கலங்கொடுங்கைதாணு - ஞ்
சிதலைநோய்துணிசெல்லென்பசீதநீர்குளிரோமேக - - ம்
பதலையோர்கட்பறைப்பேர்பருவளைதாழிக்கும்பே - - ர்
கதலியேவாழைதேறுகாற்றூடிதுவசநாற்பே - - - - ர்.

இதன்பொருள்

(மதலையென்பது) கொன்றைமரம் - மகன் - மரக்கலம் - கொடுங்
கை - தாணுக்கும்பெயர். (சிதலையென்பது) வியாதி - சீலைத்துணி

கறையானுக்கும்பெயர். (சீதமென்பது) நீர் - குளிர்ச்சி - மேகத்துக்கும்பெயர்.(பதலையென்பது)ஒருகட்பறை - மலை - சாடிக்கும்பெயர். (கதலியென்பது) வாழை - தேற்றுமரம் - காற்றுடி - விருதுக்கொடிக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

மதலைகொன்றையும்பிள்ளையுங்கொடுங்கையுந் தாணுமரக்கலமுஞ்சொல்லுவர்புலவர்)சிதலையென்பதுவேநோயுந்துணியுங் கறையானெனவுங்காட்டுமுப்பெயரே) சீதமென்பதுமேகமுங்குளிரு நீருமெனவேநிகழ்த்துமுப்பெயரே )பதலையேதண்ணுமையுந்தாழியும் வெற்புமோர்கட்பறையுநாற்பெயரே ) கதலியென்பதுவேதேறும்வாழையுந் துவசமுங்காற்றுடியுமெனநாற்பேர். *க*

இதழ்பனையேடுபூவினிதழுதடெனவிம்முப்பே - - - ர்
கதழ்வுவேகஞ்சிறப்பாங்களிசெருக்கொடுகுழம் - - - பு
மதுகமேயிருப்பையெட்டிமதுரமாந்தராவுமா - - - மே
சிதடனந்தகன்மூடன்பேர்திதிபக்கநிலைபேறும்பே - - ர்.

இதன்பொருள்

(இதழென்பது) பனையேடு - பூவிதழ் - உதட்டுக்கும்பெயர். (கதழ்வென்பது) சீக்கிரம் - சிறப்புக்கும்பெயர். (களியென்பது)களிப்பு - குழம்புக்கும்பெயர். (மதுகமென்பது) இருப்பைமரம் - எட்டிமரம் - தித்திப்பு - பொன்முதலியவெழுவகைலோகத்தொன்றுக்கும்பெயர். (சிதடனென்பது ) குருடன் - மூடனுக்கும்பெயர். (திதியென்பது) பிரதமைமுதலியதிதி - நிலைபெறுதலுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

இதழேயுதடும்பூவினிதழும் பனையேடெனவும்பகருமுப்பெயரே)கதழ்வென்பதுவேசிறப்பும்வேகமும்) களியேசெருக்குங்குழம்பும்வடிவு மதுவுமென்றேவைக்குநாற்பெயரே) மதுகமென்பதுவேயெட்டியுமிருப்பையு மதுரமுந்தராவுமதிக்குநாற்பெயரே) சிதடனேயந்தகனுமூடனும்) திதுயென்பதுநிலைபேறும்பக்கமுங் காத்தலுமெனவேகருதுமுப்பெயரே. *உ*

ஆதனுருயிரோர்வில்லானங்கியென்பதுதீச்சட் - - - டை
போதகம்யானைக்கன்றுபோற்றியவிளமைக்கும் - - பே
ரோதந்துன்பங்குற்றப்பேரீமமேமயானங்காட்ட - - ஞ்
சூதன்றேர்ப்பாகன்சூதன்சுவேதமேவேர்வுவெண் - - மை.

இதன்பொருள்

(ஆதனென்பது) உயிர் - அறிவிலானுக்கும்பெயர்.(அங்கியென்பது) நெருப்பு - சட்டைக்கும்பெயர். (போதகமென்பது) யானைக்கன்று - இளையதன்மைக்கும்பெயர். (ஏதமென்பது) துன்பம்-குற்றத்துக்கும்பெயர்.(ஈமமென்பது) சுடுகாடு - விறகுக்கும்பெயர்.(சூதனென்பது) தேர்ப்பாகன் - சூதாடுவோனுக்கும்பெயர். (சுவேதமென்பது) வேர்வை - வெண்மைககும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

ஆதனென்பதோரறிவில்லானு மாருயிரெனவுமமைக்குமிருபெயர்)அங்கியென்பதுவேசட்டையுமங்கியுங் கார்த்திகைநாளுங்காட்டுமுப்பெயரே) போதகமேயிபக்கன்றும்யானையு மிளமையுமெனவேயிசைக்குமுப்பெயரோ)ஏதமென்பதுவேகுற்றமுந்துன்பமும்)ஈமமென்பதுமயானமும்விறகும்)சூதனேதேர்ப்பாகனுஞ்சூதனும் புகழ்வோனெனவும்போற்றுமுப்பெயரே) சுவேதமென்பதுவெண்மையும்வேர்வையும். ※௩※

சூதமாமரமேவண்டுசூதுடனிரதந்தோன்ற - - - - ல்
சூதகமேயாசுசந்தோகைமார்தோயாப்பூப்பா - - - ம்
பூதமாலிறந்தகாலம்புனிதமைம்பூதஞ்சீவ - - - - ன்
மாதவந்தவம்வசந்தம்வாதமேதர்க்கங்காற்ரு - - - - ம்.

இதன்பொருள்

(சூதமென்பது) மாமரம் - வண்டு - சூது - இரசம் - பிறப்புக்கும்பெயர்.(சூதகமென்பது) அசுத்தம் - மகளிர்துடக்குக்கும்பெயர். (பூதமென்பது) ஆலமரம் - இறந்தகாலம் - சுத்தம் - பிருதிவி முதலியவைம்பூதம் - உயிருக்கும்பெயர். (மாதவமென்பது) தவம் - வசந்தகாலத்துக்கும்பெயர். (வாதமென்பது) தருக்கம் - காற்றுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

சூதமாமரமும்பிறப்புஞ்சூதும் பாதரசமும்வண்டுமைம்பெயரோ)சூதகமேயாசூசமுமங்கையர் தோயாப்பூப்புமென்றிருபேர்சொல்லும்)பூதமேபரணிநாளுமைம்பூதமுஞ் சீவனும்பூதமுமிறந்தகாலமு மாலமரமும்புனிதமுமேழ்பெயர்)மாதவமென்பதுதவமும்வசந்தமும்)வாதந்தானேதருக்கமுங்காற்றும் வாதமுமெனவேமருவுமுப்பெயரோ. *௪*

மதன்வலிவேள்வனப்பாம்வலித்தலேவளைத்தல்பேச - - ல்
பதங்கட்புட்பொதுவிட்டிற்பேர்பலிபூசைபிச்சைநீறு - ஞ்
சிதம்விண்மீன்ஞானம்வெள்ளைசெயமுறப்பட்டதா - - மே
நிதம்பமேயல்குலென்புநெடுமலைப்பக்கமும்பே - - - ர்.

இதன்பொருள்

(மதனென்பது) வலிமை - மன்மதன் - அழகுக்கும்பெயர்.(வலித்தலென்பது ) வளைத்தல் - பேசலுக் கும்பெயர்.(பதங்கமென்பது) பறவைப்பொது - விட்டிற்பறவைக்கும்பெயர்.(பலியென்பது) பூசை - பிச்சை - நீற்றுக்கும்பெயர். (சிதமென்பது) நட்சத்திரம் - ஞானம் - வெண்மை - சயமுறப்படுதலுக்கும் பெயர். (நிதம்பமென்பது) அல்குல் - மலைப்பக்கத்துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

மதன்மன்மதனும்வனப்பும்வலியு மாட்சிமையும்மெனவகுத்தனர்புலவர்) வலித்தல்பேசலும்வளைத்தலுநிணத்தலும்) பதங்கமேபுட்பொதுவும்விட்டிலும்) பலியென்பதுவேசோறும்பூசையும்பிச்சையுநீறுந்தேவவுணவு மோர்தருவும்மெனவோதுமறுபெயர்) சிதமேவெண்மையுஞ்சயமுறப்படலு ஞானமுடன் விண்மீனுநாற்பெயரோ) நிதம்பமென்பதுமலையின்பக்கமு மல்குலுமென்றேயறையுமிருபெயர். *௫*

சதியுரோகிணிகற்பாட்டிவஞ்சனைதாளவொற் - - - - று
விதியென்பவினையயன்பேர்வேட்டுவன்மகநாள்வேட - ன்
பதியிறைகேள்வனூராம்பதுக்கையேபாறைதூ - - - று
பிதிர்கதைநொடிதூவற்பேர்பிண்டமேதிரளைபிச் - - சை.

இதன்பொருள்

(சதியென்பது) உரோகிணிநட்சத்திரம் - கற்புடைமகள் - கபடம் - தாளவொற்றுக்கும்பெயர். (விதியென்பது) தொழில் - பிரமனுக்கும்பெயர். (வேட்டுவனென்பது) மகநட்சத்திரம் - வேடனுக்கும்பெயர். (பதியென்பது) அரசன் - நாயகன் - ஊருக்கும்பெயர். (பதுக்கையென்பது) பாறை - சிறுதூறுக்கும்பெயர். (பிதிரென்பது) கதை - கைநொடி - தூவலுக்கும்பெயர். (பிண்டமென்பது) திரட்சி - பிச்சைக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

சதிதாளவொற்றுங்கற்புடையாளும் வஞ்சனையுமுரோணியும்வட்டமுமாகும்) விதியேயயனுங்குணமும்வினையு மியல்புமூழுமெனுமைம்பேரே) வேட்டுவனேமகநாளும்வேடனும்) பதியேயூருஞ்சிவனுங்கேள்வனுங் குதிரையுமிறையுமூத்தோனுமறுபெயர்) பதுக்கையென்பதுபாறையுந்தூறும் பரலுஞ்சிறுதிட்டையுநாற்பெயரே) பிதிரென்பதுவேநொடியுந்தூவலுங் கதையுமெனவேகாட்டுமுப்பெயரே) பிண்டமென்பதுபிச்சையுந்திரளையும். * சுஎ *

ஆதியேமுதனேரோடலருகன்மாலீசன்வேத - - - - ன்
பூதியம்புவியுடற்பேர்பொம்மலேபொலிவுஞ்சோறு - - ம்
பாதிரிபாடலப்பேர்பணைத்தெழுமூங்கிற்கும் - - - பே
ரேதியாயுதம்வாளென்பவிழைநூலாபரணமா - - - மே.

இதன்பொருள்

(ஆதியென்பது) முதல் - நேரோடல் - அருகன் - திருமால் - சிவன் - பிரமனுக்கும்பெயர். (பூதியமென்பது) பூமி - சரீரத்துக்கும்பெயர். (பொம்மலென்பது) மங்கலம் - சோற்றுக்கும்பெயர். (பாதிரியென்பது) பாதிரிமரம் - மூங்கிலுக் குக்கும்பெயர். (ஏதியென்பது) ஆயுதம் - வாளாயுதத்துக்கும்பெயர். (இழையென்பது) நூல் - ஆபரணத்துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

ஆதியென்பதுசிவனுமுராரியும் வேதனுமிரவியுமசோகுடைச்செல்வனு முதலுநேரோடலுமொழியுமேழ்பெயரே) பூதியமேயுடலபுவியெனவிருபெயர்) பொம்மலென்பதுபொலிவும்பொரும

ளுஞ் சோறுமென்றேசொல்லுமுப்பெயரே) பாதிரியேயோர்
மரமுமூமங்கிலும்) எதியேயாயுதம்வாளிருபெயர்) இழையென்ப
துவேயிழைத்தலுநூலு மாபரணமெனவுமறையுமுப்பெயரே.

❊௭❊

சாதியேபிரம்புகள்ளோர்தருசிறுசண்பகப்பே - - - ர்
போதஞானந்தோணிப்பேர்புகல்குதிருடல்சொல்வெற் - றி
யோதிபெண்மயிரோபூனையோர்திமெய்ஞ்ஞானம்வெற் - பா
மோதிமமன்னம்வெற்பாமுருத்தலேதோற்றல்கோப - ம்.

இதன்பொருள்

(சாதியென்பது) பிரம்பு - கள் - தேக்கமரம் - சிறுசண்பகத்துக் கும்பெயர். (போதமென்பது) ஞானம் - மரக்கலத்துக்கும் பெயர். (புகலென்பது) தானியக்குதிர் - சரீரம் - சொல் - வென்றிக் கும்பெயர். (ஓதியென்பது) கூர்தல் - பூனை - ஓணன் - ஞானம் - மலைக்கும்பெயர். (ஓதிமமென்பது) அன்னப்பட்சி - மலைக்கும் பெயர். (உருத்தலென்பது) மூளைத்தல் - கோபத்துக்கும்பெய ரென்றவாறு.

இதற்குமேற்கோள்

சாதியென்பதுவேசிறுசண்பகமும் பிரம்புங்கள்ளுங்குலமுந் தேக்குஞ் சீர்த்திலுமூங்கிலுஞ்செப்புமேழ்பெயரே) போதமெ ன்பதுவேயறிவுஞானமு மரக்கலமுமிபகன்றுநாற்பெயரே) பு கலேவெற்றியுமுடலும்வார்த்தையுங் குதிருமெனவேகூறுநாற் பெயரே) ஓதியேபெண்மயிரும்பூனையு மோந்தியும்வெற்போட டிசுஞானமுங் கல்வியுமெனவேகருதுமேழ்பெயரே ) ஓதிமமெ ன்பதுமலையுமெகினமுங் கவரிமாவுங்கருதுமுப்பெயரே )உருத் தலுமேனேதோற்றலுங்கோபமும்.

❊௮❊

சுதைமகள்கறவாத்தேனுசுண்ணச்சாந்தமுதுநாற்பே - - ர்
புதையென்பகணையின்கட்டும்புதைமையுமறைவுமுப்பே - ர்
மதுவென்பநறவுந்தேனும்வசந்தகாலமுமாமென் - - ப
கதைதண்டாயுதமேவார்த்தைகாரணமிம்முப்பே - - ரே.

இதன்பொருள்

(சுதையென்பது)மகள் - உதைகாற்பசு - சுண்ணச்சாந்து - அமி

ர்த்தநர்க்கும்பெயர். (புதையென்பது) அம்பின்கட்டு - புதுமை - மறைவுக்கும்பெயர். (மதுவென்பது) கள் - தேன் - வசந்தகாலத்துக்கும்பெயர். (கதையென்பது) தண்டாயுதம் - சொல் - காரணத்துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

சுதைபெயர் மகளொடு கார்பகழுஞ் சுண்ணம்புடனேபடுவுமமிர்தமும் வெண்மையுமெனவே விளம்புமறுபெயர்) புதைகணைக்கட்டும் புதுமையு மறைவு மம்புமெனவே யறைந்தனர்புலவர்) மதுவென்பது வசந்தகாலமுந் தேனுங்கள்ளுஞ் செப்புமுப்பெயரே) கதைபெயர்வார்த்தை தண்டாயுதமொடு காரணமெனவுங்கருதுமுப்பெயரே. *௯*

சீதைபெயர்பொன்னுங்காணிபடைச்சால்சீராமன்றே - - வி
மேதைதோல்புதனிறைச்சிப்பேரறிவுகள்ளா - - - ங்
கோதைமுன்கைத்தோற்கட்டெகுழல்பூங்காற்றொழுங்குசே - ர
ஓதைபெயரொலிமதிற்பெருக்கந்தியிடையானே - - று.

இதன்பொருள்

(சீதையென்பது) பொன்னுங்காணி - உழுபடைச்சால் - சீதாதேவிக்கும்பெயர். (மேதையென்பது) தோல - புதன் - இறைச்சி - பேரறிவு - கள்ளுக்கும்பெயர். (கோதையென்பது) முன்கைத்தோற்கட்டு - பெண்மயிர் - பூமாலை - காற்று - ஒழுங்கு - சேரனுக்கும்பெயர். (ஓதையென்பது) ஆரவாரம் - மதிலுக்கும்பெயர். (உக்கமென்பது) நெருப்பு - இடை - பசு - எருதுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

சீதையுழுபடைச்சாலுந்திருவும் பொன்னுங்காணியும்புகலலாகும்) மேதைதோலும்புதனுமிறைச்சியு மறிவுமதிவுமேம்பாடு நரம்புங் கள்ளுமெனவேவகுத்தனர்புலவர்) கோதைகைக்கட்டியுமாதருங்குழலு மாலையுங்காற்றுமொழுங்குஞ்சேரனும்) ஓதையேபேரொலியுமதிலும்) உக்கமென்பதுயெருங்குட்பகவு மாலவட்டமுங்கோழியுமெருந் தீயுமெனவேசெப்புமறுபெயர். *௰*

அத்தம்பொன்பாதிவழிகண்ணாடிசொற்பொருள்காடோர்நா - ள்

புத்தகங்கோசமெய்ப்பவித்திரப்படாமுமா - - - மே
நத்தமேயிருளூருஞ்சங்குடனிராத்திரியே - - - - ர்
அத்தம்யாழிசைநாய்பாலேவயிறுகண்மருந்துஞ்சொல்லு - ம்.

இதன்பொருள்

(அத்தமென்பது) பொன் - பாணி - கை - கண்ணாடி - சொற்பொருள் - காடு - ஓர் நட்சத்திரத்துக்கும்பெயர். (புத்தகமென்பது) எழுதுபுத்தகம் - எழுத்துச்சீலைக்கும்பெயர். (நத்தமென்பது) இருள் - ஊர் - சங்கு - இராத்திரிக்கும்பெயர். (அத்தமென்பது) யாழிலோர்நரம்பு - நாய் - பால் - வயிறு - கண்மருந்துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

அத்தஞ்சொற்பொருள்காடோர்நாளு மருநெறியும்பொனு
ம்பாணிபுங்கரமுங் கண்ணாடியுமெனக்கழறலாகும்) புத்தகமென்
பதுவெத்திரப்படாமுந் திருமுறையெனவுஞ்செப்புமிருபெயர்)
நத்தமிந்நத்தையுமிருளுமாகமுஞ் சங்குமிரவுமூருமதுபெயர்)
அத்தமேகண்மருந்தாம்வயிறும் பாலுநாயும்யாழினோர்நரம்பு
மிசையுமெனவேயிசைக்குமறுபெயர். *௰க* [பேர்

அத்தெனவரைஞாண்செம்மைபசைச்சொலோடிசைப்புநாற்
றொத்துப்பூங்கொத்துத்தொண்டாந்தாம்புவேய்துளைமரக் கா
றத்தைமூத்தாள்கிளிக்காந்தழல்கிளிகடிகோல்செந் - - தீ
யுத்தரமொழித்தீமேலொடுமெதிர்மொழிவடக் - - - - கு.

இதன்பொருள்

(அத்தென்பது) அரைநாண் - சிவப்பு - அசைச்சொல் - கூடிநிற்றலுக்கும்பெயர். (தொத்தென்பது) பூங்கொத்து - அடிமைக்கும்பெயர். (தாம்பென்பது) மூங்கில் - உட்டுளைப்பொருள் - மரக்காலுக்கும்பெயர். (தத்தையென்பது) அக்காள் - கிளிக்கும்பெயர். (தழலென்பது) கிளிகடிகோல் - நெருப்புக்கும்பெயர். (உத்தரமென்பது) வடவாமுகாக்கினி - மேல் - எதிர்மொழி - வடக்குக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

அத்தென்பதுவேயசைச்சொலுஞ்சிவப்பு மிசைப்புமரைஞாணு

மெனநாற்பெயரோ) தொத்தேதொண்டுழுங்கொத்திருபெயர்) தூம்பேவேயுந்துளையுடைப்பொருளு மரக்காலுடனேபூழையு நாற்பேர்) தத்தையேகிளிமூத்தாளிருபெயர்) தழலேலதீயுங்கிளிக டிகோலும்) உத்தரமடங்கலுமேலும்வடக்கு நூலிலொன்றுமே திருளையுஞ்சொல்லும். ※௰௨※

கூத்தனேயுயிர்நடன்பேர்குலங்குடிகோயில்கூட் - - - ட
லூழ்த்தலேநினைத்தல்செவ்வியுறுபதனழிவுமுப்பே - - ர்
பாத்தென்பகஞ்சிசோறுபகுத்திடல்வகுத்தமுப்பே - - ர்
தீர்த்தமேவிழாவுநீருந்தீர்த்தனேயருகனுசா - - - ன்.

இதன்பொருள்

(கூத்தனென்பது) உயிர் - நாடகனுக்கும்பெயர். (குலமென்பது) சாதி - அரசன்மனை - கூட்டத்துக்கும்பெயர். (ஊழ்த்தலென்பது) நினைத்தல் - பதம் - பதனழிவுக்கும்பெயர். (பாத்தென்பது) கஞ்சி - சோறு - பங்கிடலுக்கும்பெயர். (தீர்த்தமென்பது) திருவிழா - நீருக்கும்பெயர். (தீர்த்தனென்பது) அருகன் - குருவுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

கூத்தனென்பதுநடனுமுயிரும்) குலமிரோவதியுஞ்சாதியுங்கோயிலுங் கூட்டமுமில்லமுங்கூறலாகும்) ஊழ்த்தலேபதனழிவுஞ்செவ்விய நினைத்தலெனவுநிகழ்த்துமுப்பெயரோ) பாத்தென்பதுவேசோறுங்கஞ்சியும் பகுத்திடலெனவும்பகருமுப்பெயரோ) தீர்த்தமேவிழாநீரெனவிருபெயர்) தீர்த்தனேயருகனுமாசானும். ※௰௩※

குத்திமண்ணடக்கமென்பகோணம்வாள்குதிரைமூக்கா - ம்
பத்தியேமுறைமையொழுக்கம்பகர்வழிபாடுமுப் - - - பே
ரத்தியார்கலிமேயானையதலெலும்பாகநாற்பே - - - ர்
சத்தியஞ்சபதமெய்யார்தபுதலேசாவுங்கேடு - - - ம்.

இதன்பொருள்

(குத்தியென்பது) பூமி - அடக்கத்துக்கும்பெயர். (கோணமென்பது) வாளாயுதம் - குதிரை - மூக்குக்கும்பெயர். (பத்தியென்பது) முறைமை - நன்னிலை - வழிபடுதலுக்கும்பெயர். (அத்தியென்

பது) சமுத்திரம் - யானை - அத்திமரம் - எலும்புக்கும்பெயர். (சத்தியமென்பது) சபதம் - உண்மைக்கும்பெயர். (தபுதலென்பது) சாதல் - கெடுதலுக்கும்பெய ரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

குத்தியேமண்ணடக்கமிருபெயர்) கோணமென்பதுகுதிரையும் வாளூ மூகருமெனவேமொழியுமுப்பேரோ)பத்தியேவழிபாடு மொழுக்கமு மடைப்புமுறைமையுமாகுநாற் பேரோ) அத்தி யென்பதுவேயானையுங்கடலு மென்புமோர்மரமுமிசைக்குநாற் பெயரோ) சத்தியமென்பதுசபதமெய்யிரண்டே)தபுதலென்ப துவேகேடுஞ்சாவும்.

*௰சு*

பித்திகைகருமுகைக்குப்பெயர்சுவர்த்தலமுமாகு - - ங்
கத்திகைதொடைவிகற்பந்துவசமேகமழ்வாசந் - - தி
யுத்திசெந்திருவுறுப்புச்சுணங்குரையாடன்முபபே - - ர்
துத்தியேசுணங்குபாம்பின்சுடர்ப்பொறிபுதலொன்று - மே.

இதன்பொருள்

(பித்திகையென்பது)சிறுசண்பகம் - சுவர்த்தலத்துக்கும்பெயர். (கத்திகையென்பது) மாலையின்வேறுபாடு - துகிற்கொடி - குருக்கத்திக்கொடிக்கும்பெயர். (உத்தியென்பது) திருவுறுப்பெனுந்தலைக்கோலம் - தேமல் - உரைத்தலுக்கும்பெயர். (துத்தியென்பது) தேமல்-பாம்பின்படப்பொறி-ஓர்செடிக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

பித்திகையென்பதுவேசுவர்த்தலமுங் கருமுகையெனவுங்காட்டுமிருபெயர்) கத்திகையேதொடைவிகற்பமுந் துவசமுங் கமழ்வாசந்தியுங்காட்டுமுப்பெயரோ) (அ - கை) உத்திசெந்திருவுறுப்புத் திதலைப்பொறியேயோதல் கொத்துறுதொங்கலாடைக் கொடியிவையிருமூன்றேபேர்) துத்தியென்பதுவேதுணங்கையாடலு நாளும்விழவுஞ்சுணங்குநெய்யு மோர்செடியும்படப்பொறியுமேற்பெயரோ.

*௰ரு*

சித்திரபானுசெந்தீதிவாகரனுண்டொன்றின்பே - - ர்
பத்திரமிலைவனப்புப்படைநன்மைசிறகேபாண - - ஞ்

சித்திரமழகோர்பாடல்சிறந்தவிம்மிதமோரண்ட - - ம்
சத்திரங்குடையேயன்னசாலைகைவிடாவேல்வேள் - - வி.

இதன்பொருள்

(சித்திரபானுவென்பது) நெருப்பு - சூரியன் - ஓர்வருடத்துக்கும்பெயர் (பத்திரமென்பது) இலை - அழகு - ஆயுதம் - நன்மை - பறவையினிறகு - அம்புகளும்பெயர். (சித்திரமென்பது) அழகு - ஓர்கவி - அதிசயம் - ஆமணக்குகளும்பெயர். (சத்திரமென்பது) குடை - அன்னசத்திரம் - கைவிடாவேல் - யாகத்துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

சித்திரபானுவோராண்டும்பானுவுந் தீயுமெனவேசெப்பலாகும்)பத்திரந்தானேயிலைசிறகாயுதம் வனப்புநன்மைபாணமென்றறுபெயர் )சித்திரமென்பதோர்கவியுமாமணக்கு மெய்போற்பொய்யையுரைத்தலுமழகு மதிசயமுடனேசிறப்புமோவியமும் காடுமென்றேகருதுமென்பெயரோ) சத்திரமேகைவேலும் வேள்வியு மன்னசாலையுங்குடையுநாற்பெயரோ. *௰௬*

காத்திரங்கனமெய்சீற்றங்களிற்றின்முற்காலேகீ - - - ரி
நேத்திரங்கண்பட்டாடை நீலியேகருமைதூர்க் - - கை
கோத்திரம்புடவிதானேகுலமொடுமலையுமா - - - மே
பாத்திரயேசிறுசெய்யில்லம்பகுத்தலும்வகுத்தநாம - - ம்.

இதன்பொருள்

(காத்திரமென்பது) கனம் - உடல் - கோபம் - யானைமுன்கால் - கீரிகளும்பெயர். (நேத்திரமென்பது) கண் - பட்டுவஸ்திரத்துக்கும்பெயர். (நீலியென்பது) கறுப்பு - துர்க்கைக்கும்பெயர். (கோத்திரமென்பது) பூமி - குலம் - மலைக்கும்பெயர். (பாத்தியென்பது) சிறுவயல் - வீடு - பாகுபாட்டுகளும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

காத்திரங்கனமுமுடலுங்கோபமுங் கரிமுற்காலுங்கீரியும்பாம்புங் கூற்றுமுறுப்புங்கூறலாகும் ) நேத்திரங்கண்ணும்பட்டாடையுமாம்) நீலிசங்கரியுமாலுந்துர்க்கையு மவுரியுங்கறுப்புமறைய

லாகும்) கோத்திரம்பூமியுங்குலமுமலையும்)(அ-கை) பாத்திரமேயசி
றுசெய்யில்லம்பகுத்திடலெனவிம்முயபேர். *௰௭*

சதமிலையிறகோரொண்ணுஞ்சத்தமேயோசையேழா - - ங்
கதவமேகதவுகாப்பாங்கழங்குபேய்நடங்கழற் - - - சி
பதமூரலின்பஞ்செவ்விபதவிதாள்வரிசைவார்த் - - - தை
மதியேமுன்னிலையசைச்சொன்மாதமம்புலிபுத்திப்பே - ர்.

இதன்பொருள்

(சதமென்பது) இலை - இறகு - ஒரொண்ணுக்கும்பெயர். (சத்தமென்பது) ஒலி - ஏழுக்கும்பெயர். (கதவமென்பது) கதவு - காவலுக்கும்பெயர். (கழங்கென்பது) பேய்க்கூத்து - கழற்காய்க்கும்பெயர். (பதமென்பது) சோறு - இன்பம் - காலம் - வழி - பாதம் - வரிசை - சொல்லுக்கும்பெயர். (மதியென்பது)முன்னிலையசைச்சொல் - மாதம் - சந்திரன் - புத்திக்கும் பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

சதம்புள்ளிறகுநூறுமுறுதியு மிலையுமெனவேயியம்பலாகும்) சத்தமேயெழுமொலியுமிருபெயர்)கதவமென்பதுகாவலுங்காத்தலுங் கதவுமென்றேகருதுமுப்பெயரோ)கழங்கென்பதுவேவேலனாடலு மணங்கினாடலுங்கொடியின்கழலு மிந்திரியமுமெனவிசைக்குநாற்பெயரோ)(அ-கை) பதமேசோறியல்சேமந்தாள்பதவிபோதாடையிர மிதமார்சொல்குழைவு பாதையிலங்கல்கொக்கின்பங்கால நிதமாருங்கடிகைசெவ்விநிகழ்நலமீரொன்பான்பேர்) மதியேநிலவுமுன்னிலையசைச்சொலு மாதமும்பொறியுமருவுநாற்பேரே. *௰௮*

பீதகஞ்சாந்துபொன்மைபெருந்தனமிருவேலிப்பே - - ர்
சாதகம்வானம்பாடிசனனம்பாரிடமுப்பே - - - - ரோ
சேதகஞ்சேறுசெம்மைதேய்ந்தாணுடம்புநா - - - டா
மாதரோயிடைச்சொல்காதல்வனப்பொடுமகளிரா - - மே.

இதன்பொருள்

(பீதகமென்பது) நால்வகைச்சாந்திலொன்று - பொன்னிறம் -

செம்பொன் - வெட்டிவேருக்கும்பெயர். (சாதகமென்பது) வானம்பாடி - பிறப்பு - பூதத்திக்கும்பெயர். (சேதகமென்பது) சேறு - சிவப்புக்கும்பெயர். (தேயமென்பது) சரீரம் - நாட்டுக்கும்பெயர். (மாதரென்பது) இடைச்சொல் - ஆசை - அழகு - பெண்களுக்கும்பெயரென்றவாறு.

இதற்குமேற்கோள்

ஶீதகமேயிருவேலியுஞ்சாந்தும் பொன்மையும் பொன்னும் போற்றுநாற்பெயரே) சாதகமென்பதுவானம்பாடியும் பூதமுஞ்சென்னமும்போற்றுமுப்பெயரே) சேதகமேசெந்நிறஞ்சேறிருபெயர்) தேயமென்பதுடலும்விண்ணு நாடுமெனவேநாட்டுமுப்பெயரே) மாதரோயிடைச்சொல்லுமாதருங் காதலுமழகுங்கருதுநாற்பெயரே. *௰சூ*

சோதிமாலருகன்பானுசுடர்விளக்கீசனோர்நா - - - ள்
பூதியேநரகஞ்செல்வந்துர்க்கந்தப்புழுதிநீறு - - - - ம்
வீதியேதெருநேரோடன்மேலென்பதிடம்விண்மேற் - கா
மாதிரந்திசையாகாயமலையானைநிலமைம்பே - - - ரோ.

இதன்பொருள்

(சோதியென்பது)திருமால் - அருகன் - சூரியன் - ஒளி - தீபம் - சிவன் - ஓர்நட்சத்திரத்துக்கும்பெயர். (பூதியென்பது)நரகம் - செல்வம் - தீநாற்றம் - புழுதி - விபூதிக்கும்பெயர். (வீதியென்பது) தெரு - நேரோடலுக்கும்பெயர். (மேலென்பது) இடம் - ஆகாயம் - மேற்குக்கும்பெயர். (மாதிரமென்பது) திக்கு - ஆகாயம் - மலை - யானை - பூமிக்கும்பெயரென்றவாறு.

இதற்குமேற்கோள

சோதிசங்கரனுமாலுமிரவியுஞ் சோதிநாளும்விளக்குமுடுவுஞ்சுடருமருகனுஞ்சொல்லுமெண்பெயரே) பூதிதுர்கந்தமுஞ்செல்வமும்புவிபு நரகமுமுடம்புப்பூதியுங்கொடுமையு நீறுந்தசையுமுளவுமாகும்) வீதியென்பதுசெவ்வேபோதலுந் தெருவுமென்றேசெப்புமிருபெயர்) மேலென்பதுவேயிடமும்விண்ணு மேற்றிசையெனவும்விறிக்குமுப்பெயரே) மாதிரமென்பதுதிசைபுமலையும் வானுந்தும்பியுமண்டலமுமைம்பெயர். *உ௰*

தாதுபொன்முதலாமேழுஞ்சடமுறுதாதோமேழு - - ம்
பூதமோமைந்துங்காவிக்கல்லுடன்புகலுநாற்பே - - - ர்
வேதிகைபலகைதிண்ணைவெதிரொன்பசெவிடுவே - - ணு
கேதுவேசிகிபதாகைகிள்ளைதான்குதிரைதத் - - - தை.

இதன்பொருள்

(தாதென்பது) பொன்முதலியவெழுவகைலோகம் - உடலிற்றோன்றியவிரதமுதலியவெழுவகைத்தாது - மண்முதலியவைவகைப்பூதம் - காவிக்கல்லுக்கும்பெயர். (வேதிகையென்பது) கேடகம் - திண்ணைக்கும்பெயர். (வெதிரென்பது) செவிடு - மூங்கிலுக்கும்பெயர். (கேதுவென்பது) ஒர்கோள் - துகிற்கொடிக்கும்பெயர். (கிள்ளையென்பது) குதிரை - கிளிக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

(அ - ள்) செய்யபொன்னுதியேழுஞ்சிறந்தவெண்டுகிலிற்றோய்க்கு மையறுகாவிக்கல்லுமண்முதலாகவைந்து மெய்யுறுமிரதமாதியேழுமேவிளங்குந்தாதாம்) வேதிகையென்பதுபலகையுந்திண்ணையும்) வெதிரோவேயுஞ்செவிடுமிருபெயர்) கேதுவோர்கோளுங்கொடியுமோர்நாளு நெருப்புமெனவேநிகழ்த்தலாகும்) கிள்ளேயேகிளியுங்குதிரையுமிருபெயர்.

※உக※

கதுப்பேயாண்மயிரும்பெண்பான்மயிரொடுகவுளுமுப்பே - ர்
விதப்பேசம்பிதமிக்காகும்வித்தம்பொன்பழிப்புஞா - ன
மதிர்ப்பொலிநடுக்கமென்பவகப்பாவேபுரிசைமே - டை
யொதுக்கமேநடைமறைப்பாமொருத்தலாண்விலங்குவேழம்.

இதன்பொருள்

(கதுப்பென்பது) மைந்தர்மயிர் - பெண்மயிர் - கபோலத்துக்கும்பெயர். (விதப்பென்பது) நடுக்கம் - மிகுதிக்கும்பெயர். (வித்தமென்பது) பொன் - இகழ்வு - ஞானத்துக்கும்பெயர். (அதிர்ப்பென்பது) சத்தம் - நடுக்கத்துக்கும்பெயர். (அகப்பாவென்பது) மதில் - மதிலுண்மேடைக்கும்பெயர். (ஒதுக்கமென்பது) நடை - மறைப்புக்கும்பெயர். (ஒருத்தலென்பது) ஆண்மிருகம் - யானைக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

கதுப்பேமஞ்சளுங்கவுளுமாண்மயிரும் பெண்மயிரெனவும்பே
சுநாற்பெயரோ)விதப்பேமிகுதியுமதிலினுறுப்பங் கம்பிதமென
வுங்காட்டுமுப்பெயரோ) வித்தமென்பதுவேபொன்னும்பழிப்
பு ஞானமுமென்றேநவிலுமுப்பெயரோ) அதிர்ப்பென்பதுவே
நடுக்கமுமொலியும்) அகப்பாமதிலுமதிலுண்மேடையும்) ஒதுக்
கமேநடைமறைப்பிருபெயரோ) ஒருத்தலயானையுமாண்விலங்
குமாகும். *உஉ*

பத்திரிபறவைகாளிபரியிலைபாணமைம் - - - - பே
ரத்திரிகழுதைவிண்ணொட்டகம்பரியசலமம்பா - - - ஞ்
சத்தியேயுமைவேலகான்றல்குடைவலிதுவசந்தானு - - ஞ்
சுத்தியேயகல்வெண்சங்கஞ்சுத்தமோர்கருவிகளும்பே - ர்.

இதன்பொருள்

(பத்திரியென்பது) பட்சி - காளி - குதிரை - இலை - அம்புக்கும்
பெயர். (அத்திரியென்பது) கழுதை - ஆகாயம் - ஒட்டகம் - குதி
ரை - மலை - பாணத்துக்கும்பெயர். (சத்திரியென்பது) பார்வதி -
வேலாயுதம் - கக்கல் - குடை - வலிமை - துகிற்கொடிகளும்பெய
ர். (சுத்திரியென்பது) அகல் - சங்கு - சுசி - ஓர்கருவிக்கும்பெயரெ
ன்றவாறு.

இதற்குமேற்கோள்

பத்திரிகாளியுமம்புமிலையுங் குதிரையும்பறவையுங்கூறுமைம்பே
ரோ) அத்திரியேயொட்டகமுங்கழுதையும் விண்ணுங்கணையும்வ
ரையும்பரியுமாம்) சத்திரியென்பதுவேசூலம்வலியுமை வேல்கு
டைகான்றல்விரிகூமறுபெயர்) சுத்தியோர்கருவியுஞ்சங்குஞ்சு
த்தமு மகலுநெய்க்குத்தியுமறையுமைம்பேரோ. *உங*

புத்தன்மாலருகன்சாந்தன்பூழிருணகில்பூமிப்பே - - - ர்
புத்தேளேபுதுமைதேவாம்பூட்கைதோன்மேற்கோள்யா - ளி
தைத்தநுன்னங்கைத்தற்பேர்சாறுகள்விழவுதா - - - ரு
முத்தமேபிரியமோட்டமருதநன்னிலமுத்தா - - - மே.

இதன்பொருள்

(புத்தனென்பது) திருமால் - அருகன் - புத்தனுக்கும்பெயர். (பூ
ழியென்பது) அகில் - பூமிக்கும்பெயர். (புத்தேளென்பது) புது

மை - தெய்வத்துக்கும்பெயர். (பூட்கையென்பது) யானை - மேன்மை-யாளிக்கும்பெயர். (தைத்தலென்பது) அணிமுதலியதைத்தல் - அலங்கரித்தற்கும்பெயர். (சாறென்பது) கள் - திருவிழா - மாக்குலைக்கும்பெயர். (முத்தமென்பது) பிரீதி - உதடு - மருதநிலம் - முத்துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

புத்தன்றானேயருகனும்புத்தனுஞ் சீதரனெனவுஞ்செப்புமுப்
பெயரே) பூழிலேயகிலுநிலமுமிருபெயர்) புத்தேளென்பதுதெ
ய்வமும்புதுமையும்) பூட்கைதானேயாளியும்யானையு மேற்கோ
ளெனவுமேவுமுப்பெயரே) தைத்தலேதுன்னமுந்தைத்தலுமிரு
பெயர்)சாறேவிழவுமரத்தின்குலையுங் கள்ளுமெனவேவகருதுமுப்
பெயரே) முத்தந்தானேயுதடும்பிரியமு முத்தமுமருதநிலமு
நாற்பெயரே. *உச*

அத்தனேமூத்தோன்றந்தையரனொடுகுருவுநாற்பே - - ர்
சித்தமேதிடமுள்ளப்பேர்சேகரந்தலைமாவேரா - - - ங்
கைத்தலேசினங்கைப்பாகுங்கறலேபொலிவுகன்ற - - ல்
சித்தென்பசயமேஞானஞ்செய்யென்பநிலமேவற்பே - ர்.

இதன்பொருள்

(அத்தனென்பது) மூத்தோன் - பிதா - சிவன் - குருவுக்கும்பெயர். (சித்தமென்பது) மெய் - மனத்துக்கும்பெயர். (சேகரமென்பது) தலை - மாமரம் - அழகுக்கும்பெயர். (கைத்தலென்பது) கோபம் - கசப்புக்கும்பெயர். (கறலென்பது) மங்கலம் - சினக்குறிப்புக்கும்பெயர். (சித்தென்பது) வெற்றி - ஞானத்துக்கும்பெயர். (செய்யென்பது) விளைநிலம் - செய்யெனேவற்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

அத்தனேமூத்தோனுஞ்சிவனும் பிதாவுங்குருவும்பேசுநாற்பெய
ரே) சித்தந்திடமுஞ்சித்தமுமாகும்) சேகரமேமாமரமுமுடியு
மழகுமெனவேயாகுமுப்பெயரே) கைத்தலேசினமுங்கசப்பு
மாகும்) கறல்பொலிவுங்கன்றலுமாகும்) சித்துஞானமுஞ்சய
முமாகும்) செய்விளைவயலுமேவல்வினையுமாம். *உரு*

உத்திரஞ்சித்திரஞ்சேர்ந்தொளிருமில்லுறுப்பொடோர்நா - ள்
பைத்தலேமுனிவினோடுபசுத்தலும்பகரலா - - - - கு
மத்திகையேசம்மட்டிசுடர்நிலைத்தண்டுமா - - - - லை
மத்தென்பதயிர்மத்தோடுமெத்தமுமிருபேரா - - - மே.

இதன்பொருள்

(உத்திரமென்பது) இல்லுறுப்பாகியவுத்திரம் - ஓர்நட்சத்திரத்துக்கும்பெயர். (பைத்தலென்பது) கோபம் - பசுமைக்கும்பெயர். (மத்திகையென்பது) குதிரைச்சம்மட்டி - விளக்குத்தண்டு - பூமாலைக்கும்பெயர். (மத்தென்பது) தயிர்முதலியகடையுமத்து - ஊமத்தைக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

உத்திரமென்பதில்லினுறுப்பு மோர்நாளெனவுமுரைக்குமிரு
பெயர்) பைத்தலேயுருத்தலும்பசுத்தலுமிருபெயர்) மத்திகை
மாலையும்விளக்குத்தண்டுஞ் சம்மட்டியுமெனச்சாற்றினர்புலவர் )
மத்துன்மத்தமுமத்தின்விகற்பமும். *உசு*

மதர்வுமேவுதலைவனப்புவலியிடமிகுதியைம்பே - - - ர்
புதவென்பகதவோர்புல்லாம்புணர்ச்சியேகலவிகூட - - ல்
சிதருறிதிவலைவண்டுசீலையின்றுணிநாற்பே - - - - ரோ
யதர்வழிபுழுதியாட்டினதருநுண்மணலுமா - - - மே.

இதன்பொருள்

(மதரென்பது) ஆசைப்பெருக்கம் - அழகு - வலிமை - இடம் - மிகுதிக்கும்பெயர். (புதவென்பது) கதவு - ஓர்வகைப்புல்லுக்கும்பெயர். (புணர்ச்சியென்பது) சையோகம் - இசைப்புக்கும்பெயர். (சிதரென்பது) உறி - துளி - வண்டு - சீலைத்துணிக்கும்பெயர். (அதரென்பது) வழி - புழுதி - ஆட்டினதர் - நுண்மணலுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

மதர்வுமேவுதலும்வலியுமிடமு மிகுதியும்வனப்பும்விளம்புமை
ம்பெயரே) புதவுகதவுமோர்வகைப்புல்லுமாம்)புணர்ச்சிகலவியு
ஞ்சேர்தலுமாகும்) சிதரறுபதமுந்துணியுந்திவலையு முறியுமென
வேயுரைக்கலாகும்) அதரோவழியும்புழுதியுமாட்டி னதருநுண்ம
ணலுமாகுநாற்பெயரே. *உஎ*

முதலைசெங்கிடையிடங்கர்முருந்தெனமொழியலா - - ரு
மதமிறங்குதல்பாதாளங்கீழுமென்றறையுமுப்பே - - ர்
கதிநடைவிரைவேநான்குகதியொடுகதியுங்காட் - - - டு
மதமிபமதஞ்செருக்காமாயையேமாயஞ்சத் - - - - தி.

இதன்பொருள்

(முதலையென்பது) செஞ்சடை - நீர்வாழ்முதலை - இறசினடிக்குருத்துக்கும்பெயர். (அதமென்பது) இறங்குதல் - பாதலம்- கீழுக்கும்பெயர். (கதியென்பது) நடையின்வேகம் - தேவகதிமுதலியநாற்கதி - முத்திக்கும்பெயர். (மதமென்பது) யானைமதம் - களிப்புக்கும்பெயர். (மாயையென்பது) வஞ்சனை - சத்திக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

முதலைசெங்கிடையுமுருந் துமிடங்கரும்) அதம்பாதலமுங்கீழுமிறங்கலும்) கதிநடைவிரைவொடுநான்குகதியு மைங்கதியெனவுமறையுமுப்பெயரோ) மதமேசெருக்கும்யானைமதமும் ) மாயைவஞ்சனையுஞ்சத்தியுமாகும்.

*உஅ*

பீதமேசாந்துமஞ்சள்பிங்கலத்தொடுபொன்மைப்பே - ர்
பேதையோர்பருவமுடன்பெண்டரித்திரனேநாற்பே - ர்
வாதுவர்யானைப்பாகர்வயப்பரிமாவடிப்போ - - - - ர்
மூதிரையாதிரைப்பேர்முக்கணன்பேருமா - - - - மே.

இதன்பொருள்

(பீதமென்பது) நால்வகைச்சாந்திலொன்று - மஞ்சள் - பொன் - பொன்னிறத்துக்கும்பெயர். (பேதையென்பது) பேதைப்பருவம்-அறிவிலான் - பெண் - தரித்திரனுக்கும்பெயர். (வாதுவனென்பது) யானைப்பாகர் - குதிரைப்பாகருக்கும்பெயர். (மூதிரையென்பது) திருவாதிரைநட்சத்திரம் - சிவனுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

பீதம்பொன்னும்பொன்மையுஞ்சாந்து மஞ்சளுமெனவேமதிக்குநாற்பெயரோ ) பேதையோர்பருவப்பெண்ணுமூடனு மாதருமிடியனும்வழங்குநாற்பேரோ ) வாதுவர்கரிப்பாகரும்பரிப்பாகரும்) மூதிரையேதிருவாதிரைநாளு மூதிரையானுமொழியுமிருபெயர்.

*உகூ*

தாதியேபரணிநாளுமடிமையுமிருபேர்சாற்று - - - ம்
போதுதான்காலம்பூவாம்போர்வைதோல்கவசமீக்கோ - ள்
சாதமேதிடம்பதப்பேர்தகைமையேயியல்புமிடா - - ம்
வீதலேகெடுதல்சாவேயிலம்பாடும்விளம்புமப்பே - - ர்.

இதன்பொருள்

(தாதியென்பது) பரணிநட்சத்திரம் - அடிமைக்கும்பெயர். (போதென்பது) பொழுது - மலருக்கும்பெயர். (போர்வையென்பது) தோல் - மெய்க்கவசம் - மேற்போர்வைக்கும்பெயர். (சாதமென்பது) உண்மை - சோற்றுக்கும்பெயர். (தகைமையென்பது) அழகு - குணம் - பெருமைக்கும்பெயர். (வீதலென்பது) கெடுதல் - சாதல் - வறுமைக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

தாதியடிமையும்பரணிநாளும்) போதுதானேபூவுங்காலமும்) போர்வைதோலுமீக்கோளுங்கவசமும்) சாதமுண்மையுஞ்சாதமும்பூதமும்) தகைமையியல்புமழகும்பெருமையும்) வீதலென்பதுகெடுதலுஞ்சாதலும் வறுமையுமெனவேவழங்குமுப்பெயரோ. தகரவெதுகைமுற்றிற்று. ※௩௰※ [நகரவெதுகை]

இந்தனமிசையேகாட்டமெரியிடுகனலுமாகு - - - ஞ்
சந்தமேநிறம்வனப்புச்சாற்றியகவிதைசாந்த - - - - ங்
கந்தமிந்தியம்பகுத்தல்கழுத்தடிகிழங்குநாற் - - - - ற
மந்திரம்விசாரங்கோயில்வாசியின்குழாம்வீடேக - - ள்.

இதன்பொருள்

(இந்தனமென்பது) மேல் - விறகு - அக்கினிச்சுவாலைக்கும்பெயர். (சந்தமென்பது) நிறம் - அழகு - கவிதை - சந்தனத்துக்கும்பெயர். (கந்தமென்பது) இந்திரியம் - பங்கிடல் - கழுத்தடி - கிழங்கு - வாசனைக்கும்பெயர். (மந்திரமென்பது) ஆலோசனை - தேவாலயம் - குதிரைக்கூட்டம் - வீடு - கள்ளுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

இந்தனமேநறும்புகையுமிசையு மெரியிடுகனலும்விறகுநாற்பெயரோ) சந்தமென்பதுகவிதையுஞ்சாந்தமு நிறமும்வனப்புநிகழ்த்துநாற்பெயரோ) கந்தமென்பதுபகுத்தலுங்கிழங்குங் கரணை

யுநாற்றமும்பொன்னுமிந்தியமுங் கழுத்தடியெனவுங்கருதுமே
ழ்பெயரே ) மந்திரமென்பதுகுதிரைக்கூட்டமும் விசாரமுங்
கோயிலுமில்லுமந்திரமுங் கள்ளுமெனவேகழறுமறுபெய ர்.

✻க✻

அந்திலாங்கசையிடப்பேரணவலேயணுகல்புல்ல - - - ல்
சந்தியேயந்திமூங்கில்சதுக்கமுமிசைப்புமப்பே - - - ர்
நந்தியேசிவனுமேறுநந்தியீச்சுரனும்ப் - - - - - பே
ருந்திதேருருளையாறேயுவரிநீர்ச்சுழியேகொப்பூ - - ம்.

இதன்பொருள்

( அந்திலென்பதும் - ஆங்கென்பதும் ) அசைச்சொல்லுக்கும் - இடத்துக்கும்பெயர்.(அணவலென்பது ) கிட்டல் - புணர்தலுக்கும்பெயர்.(சந்தியென்பது ) மாலைக்காலம் - மூங்கில் - நாற்றெருக்கூடுமிடம் - இசைப்புக்கும்பெயர்.(நந்தியென்பது ) சிவன் - இடபம் - நந்தியீச்சுரனுக்கும்பெயர். (உந்தியென்பது) தேருருளை - நதி - கடல் - நீர்ச்சுழி - தொப்புளுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

( நன்னூல் ) அந்திலாங்கசைநிலையிடப்பொருளவ் [illegible] அணவருமேனயணுகலும்புல்லலும் ) சந்திதானேயந்தியுஞ்ச[illegible]கமும் வேயுமிசைப்பும்விளம்புநாற்பெயரே ) நந்தியென்பதுமேவசிவனுமிடபமு நந்தியீச்சுரனுநாட்டும்பெயரே ) உந்தியென்பதுநீர்ச்சுழியுநதியு நாபியுங்கடலும்யாழினுறுப்பு நடுவுமுயர்ச்சியுந்தேரினுருளுந் துணையும்பரப்புஞ்சொல்லுமீரைம்பேர்.

✻உ✻

கந்துபண்டியுளிரும்புங்கம்பமும்யாக்கைமூட்டு - - - ங்
கந்துகங்குதிரைபந்தாங்கனமென்பபுயல்பாரப்பே - - ர்
பந்துகந்துகமுமட்டுப்படர்நீர்தூந்துருத்தியும்பே - - ர்
குந்தளமாதரோதிகுழற்கொத்துக்குருவாமுப்பே - - ர்.

இதன்பொருள்

(கந்தென்பது)இருசு - தூண் - யாக்கையின்மூட்டுக்கும்பெயர்.
(கந்துகமென்பது)குதிரை -பந்துக்கும்பெயர்.(கனமென்பது) மேகம் - பாரத்துக்கும்பெயர். (பந்தென்பது ) எறியும்பந்து -

மட்டத்துருத்திக்கும்பெயர். (குந்தளமென்பது )பெண்மயிர் - மயிர்க்கொத்து - விலங்கின்குட்டிக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

கந்தேகம்பமும்யாக்கையின்மூட்டும் பண்டியுளிரும்பு ம்பகரு
மூப்பெயரோ) கந்துகமென்பதுபந்துங்குதிரையுங் குறுநிலமன்
னர்குதிரையுமுப்பேர்)கனமேமுத்தக்காசுந்திரட்சியும் புயனுடம்
பாரமுஞ்செறிவும்வட்டமும் பொன்னுமென்றேழ்கனுமேழ்பெ
யரோ )பந்தென்பதுவே நீர்தூந்துருத்தியுங் கந்துகமெனவுங்கா
ட்டுமிருபெயர்) குந்தளமேபெண்மயிருங்குருளையு மயிர்க்கொ
த்தெனவுமதிக்குமுப்பெயரோ. ※௩※

வேந்தனேயரசன்றிங்கள்வியாழமிந்திரனுதித்த - - - ன்
காந்தாரமிசைகாடென்பகாழகங்கருமைதூ - - .. - சா
மேந்தலேபெருமைமேடாமெஃகுருக்கொடுவேல்கூர் - மை
கூந்தல்பெண்மயிர்ப்பொலிப்பேர்குவலயங்குவளைபூ - - - மி.

இதன்பொருள்

(வேந்தனென்பது ) இராசன் - சந்திரன் - சுரகுரு - தேவேந்திரன் - சூரியனுக்கும்பெயர். (காந்தாரமென்பது) ஓரிசை - காட்டுக்கும்பெயர். ( காழகமென்பது ) கறுப்பு - ஆடைக்கும்பெயர். (ஏந்தலென்பது) பெருமை - மேட்டுக்கும்பெயர். (எஃகென்பது) உருக்கு - வேலாயுதம் - கூர்மைக்கும்பெயர். ( கூந்தலென்பது)மாதர்மயிர் - மயிற்றோகைக்கும்பெயர் (குவலயமென்பது ) குவளைப்போது - பூமிக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

வேந்தனேயிந்திரனுமன்னனும் வியாழமுமதியும்பானுவுமைம்
பேர் ) காந்தாரந்தானிசையுங்கானமும் ) காழகமென்பதுபுடை
வையுங்கறுப்புங் கழுதையுந்தேசமுங்கருதுநாற்பெயரோ ) ஏந்த
லென்பதுவேமலையும்பெருமையு முதலுமேடுமேந்தலு மைம்
பேர் ) எஃகென்பதுவேகூர்மையும்வேலு மெஃகுமென்றேயி
சைக்குமுப்பெயரோ)கூந்தலேமயிற்பீலியுங்கமுகு மாதர்மயிரு
மருவுமுப்பெயரோ ) குவலயந்தானேநெய்தலுங்குவளையும் பூமி
யுமெனவேபோற்றுமுப்பெயரோ. ※௪※

அந்தரமுடிவுபேதமண்டமோடிடநாற்பே - - - - ரோ
கந்தரமென்பமேகங்கழுத்தொடுமலைமுழைப்பே - - ர்
மந்தாரந்தருமரஞ்செவ்வரத்தமுமாகுமென் - - - ப
சிந்துரம்புளிமாயானைசெங்குடைதிலகஞ்செம் - - மை.

இதன்பொருள்

(அந்தரமென்பது) முடிவு - வேறுபாடு - ஆகாயம் - இடத்துக்கும்பெயர். (கந்தரமென்பது) மேகம் - கழுத்து - மலைக்குகைக்கும்பெயர். (மந்தாரமென்பது) ஐந்தருவிலொன்று - செவ்வரத்தத்துக்கும்பெயர். (சிந்துரமென்பது) புளிமா - யானை - சிவப்புக்குடை - பொட்டு - சிவப்புக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

அந்தரமென்பதுமுடிவும்பேதமு மிடமும்விண்ணுமெனப்பெயர்நான்கே) கந்தரமென்பதுகழுத்துமேகமு மலைமுழையெனவும்வழங்குமுப்பெயரோ) மந்தாரமென்பதுவேசெவ்வரத்தமுந்தருமரமெனவுஞ்சாற்றுமிருபெயர்) சிந்துரமேபுளிமாவுஞ்செம்மையுஞ் செங்குடையுடனேயானையுந்திலகமும். *ரு*

கந்தருவம்பண்வாசிகவந்தமென்பதுநீர்மட் - - - டை
குந்தமேயொருவியாதிகுருந்தொடுகுதிரைகைவே - - ல்
செந்துவோர்நரகமோரிசிவஞ்டைணுவுநாற்பே - - - ர்
சிந்துநீர்முச்சீராறுகடல்குறளொருதேசப்பே - - - ர்.

இதன்பொருள்

(கந்தருவமென்பது) இசைப்பாட்டு - குதிரைக்கும்பெயர். (கவந்தமென்பது) நீர் - உடற்குறைக்கும்பெயர். (குந்தமென்பது) ஓர்நோய் - குருந்தமரம் - குதிரை - கைவேலுக்கும்பெயர். (செந்தென்பது) ஓர்நரகம் - கிழநரி - உயிர் - அணுவுக்கும்பெயர். (சிந்தென்பது) நீர் - மூச்சீர் - நதி - கடல் - குள்ளம் - ஓர்தேசத்துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

கந்தருவமென்பதுபுரவியோடிசையாம்) கவந்தமேநீருடற்குறையிருபெயர்) குந்தமேகைவேலுங்குருந்தமும் வியாதியுங்குதி

ளையும்விரிக்குநாற்பேரோ) செந்தென்பதுவேயணுவுமோர்நிரய
மு மோரியுஞ்சீவனுமோதுநாற்பேரோ)சிந்தேநதியுங்குறளுங்க
டலு நீருமுச்சீருமோர்தேயமுமறுபெயர். ✽கூ✽

அந்திமுச்சந்திபாலையாழிசையிரவுமா - - - - - லை
நந்தென்பநத்தைசங்காநாறுதன்மணமுண்டாத - ன்
மைந்தனேதிறலோன்சேயாம்வசந்தமேவேனில்வாச - - ம்
வந்தியர்புகழ்வோர்பேருமலடிகள்பேருமா - - - மே.

இதன்பொருள்

(அந்தியென்பது) முத்தெருக்கூடுமிடம் - பாலையாழிசை - இரா
த்திரி - மாலைக்காலத்துக்கும்பெயர். (நந்தென்பது ) நத்தை -
சங்குக்கும்பெயர்.(நாறுதலென்பது)மணத்தல் - உண்டாதலுக்
கும்பெயர். (மைந்தனென்பது) திண்ணியன் - மகனுக்கும்பெ
யர். (வசந்தமென்பது) வசந்தகாலம் - வாசனைக்கும்பெயர்.(வந்
தியரென்பது) புகழ்வோர் - மலடிகட்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

அந்திமாலையும்பாலையாழிசையு மிரவுமுச்சந்தியுமியம்பலாகும்)
நந்துநத்தையுஞ்சங்குமாகும்) நாறுதன்மணத்தலுமுண்டாதலு
மாம்) மைந்தனேமகன்றிறலோனிருபெயர் )வசந்தம்புரந்தரன்
மாளிகைப்பேரும் வசந்தகாலமுமணமுமாகும்)வந்தியர்மாகத
ர்மலடிகளிருபெயர். ✽எ✽

விந்தமோரொண்ணும்வெற்பும்விருத்தமேவட்டமூப் - பா
மந்தணரறவோர்பார்ப்பாரணிபடைவகுப்பணிப் - - பே
ரந்தகன்குருடன்கூற்றுமங்காரகன்றீச்செவ்வா - - - ய்
மந்தனேசனிகூர்ப்பில்லாமனுடனுமிருபேரா - - - மே.

இதன்பொருள்

(விந்தமென்பது) ஒரொண் - மலைக்கும்பெயர். (விருத்தமென்ப
து) வட்டவடிவு - மூப்புக்கும்பெயர். (அந்தணரென்பது) முனி
வர் - பார்ப்பாருக்கும்பெயர். (அணியென்பது) படைவகுப்பு -
ஆபரணத்துக்கும்பெயர்.(அந்தகனென்பது) குருடன் - இயம
னுக்கும்பெயர்.(அங்காரகனென்பது)நெருப்பு - செவ்வாய்க்கு

ம்பெயர். (மந்தனென்பது) சனி - கூர்மையில்லானுக்கும்பெய
ரொன்றவாறு. இதற்குமேற்கோள்

விந்தமோரொண்ணும்வெற்புமாகும்) விருத்தமேவட்டமும்வே
றுபடுதலு மூப்புமெனவேமொழியுமுப்பெயரோ) அந்தணரோ
வேதியரறவோரும்) அணியென்பதுவேயழகொடுபூணு மலங்கா
ரமும்பூடைவகுப்புநாற்பேரோ) அந்தகனென்பதுகுருடனுங்கூற்
றனும்) அங்காரகன்செவ்வாயுமனலுமாம்) மந்தனேசனியுங்கூர்
மையில்லானும். ✻அ✻ நகரவெதுகைமுற்றிற்று.

[பகரவெதுகை]

உப்புமெல்லியலாராடலுவர்கடலினிமைநாற்பே - - ர்
செப்பமேநடுநிலைப்பேர்தெருவொடுநெஞ்சுமாகு - - ந்
துப்பரக்கூற்றந்தூய்மைதுகிர்பகையனுபவப்பே - - ர்
கப்பணமிரும்பிற்செய்தநெருஞ்சின்முட்கைவேலா - மே.

இதன்பொருள்

(உப்பென்பது) மகளிர்விளையாட்டு - உவர்த்தல் - கடல் - தித்தி
ப்புக்கும்பெயர். (செப்பமென்பது) நடுநிலை - வீதி - மார்புக்கு
ம்பெயர். (துப்பென்பது) அரக்கு - அறிவு - சுத்தம் - பவளம் -
பகை - அனுபோகத்துக்கும்பெயர். (கப்பணமென்பது) இரும்
பினியற்றியநெருஞ்சின்முள் - கைவேலுக்கும்பெயரொன்றவா
[று. இதற்குமேற்கோள்

உப்பேயராகமுங்கடலுமுவரு மகளிராடலுமினிமையுமைம்பே
ர்) செப்பமேநடுநிலையும்வீதியு நெஞ்சுஞ்செப்பமுநிகழ்த்துநா
ற்பேரோ) துப்பேசுத்தமுமரக்குமூற்றமுஞ் சோறும்வண்ணமு
ந்துகிரும்பகையும் வலியுநெய்யும்வன்படைக்கலமு மனுபவ
மெனவுமாம்பதினொருபெயர்) கப்பணமென்பதுகைவேலுட
னே யிரும்பினியற்றியநெருஞ்சின்முள்ளுமாம். ✻க✻

தாபரமலைபோனிற்றல்சடமொடுதருவுமுப்பே - - - ர்
நீபமுத்திரட்டாதிப்பேர்நிமித்தநீர்க்கடம்புமாகு - - ம்
றூபமேகவந்தம்வேள்விக்குறுதம்பம்படைவகுப்பா - ஞ்
சாபமேசபித்தல்வில்லாந்தளிமமேயழகுமெத் - - தை.

இதன்பொருள்

(தாபரமென்பது)மலைபோனிற்றல் - உடல் - மரப்பொதுவிற்கும்பெயர்.(நீபமென்பது) உத்திரட்டாதிநட்சத்திரம் - காரணம் - நீர்ககடம்புக்கும்பெயர். (யூபமென்பது) உடற்குறை - யாகப்பசுவைக்கட்டுந்தறி - படைவகுப்புக்கும்பெயர். (சாபமென்பது) சபித்தல் - வில்லுக்கும்பெயர். (தளிமமென்பது) அழகு - மெத்தைக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

தாபரமென்பதுமலையும்பூமியுங் கோயிலுந்தேகமுநிர்பனவுடனே மரமுமெனவேவைககுமறுபெயர்) நீபநீர்க்கடம்புமுத்திரட்டாதியு நிமித்தமுமெனவேநிகழ்த்தினர்புலவர்) யூபமேபடைவகுப்புங்கவந்தமும் வேள்வித்தம்பமுமேவுமுப்பெயரோ)சாபஞ்சபித்தலும்வில்லுமாகும்) தளிமந்தானேமெத்தையுமழகும்.

*௨*

சீப்பென்பகதவிற்ருழுஞ்சீவுக்கமுமாமென் - - - ப
நாப்பணென்பதுதேர்த்தட்டுநடுவும்யாழுறுப்புமுப்பே - ர்
காப்பென்பகாவலோடுகதவும்வெண்ணீறுமாகு - - ம்
யாப்பென்பகவிதைகட்டாமிருநேன்கூடெருதுமீ - னே.

இதன்பொருள்

(சீப்பென்பது) தாழக்கோல் - சீப்புக்கும்பெயர். (நாப்பணென்பது) தேர்த்தட்டு - நடு - யாழினுறுப்புக்கும்பெயர். (காப்பென்பது) காவல் - கதவு - வெண்ணீற்றுக்கும்பெயர்.( யாப்பென்பது)பாட்டு - கட்டுக்கும்பெயர். (இருலென்பது) தேன்கூடு - எருது - ஓர்மீனுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

சீப்பேதாழக்கோல்சீப்பிருபெயர்) நாப்பணென்பதுவேயாழினுறுப்பு நடுவுந்தேர்த்தட்டுநண்ணுமுப்பெயரோ) காப்பேகாவலுங்கதவுமூங்சிலுந் தூசுநீறுஞ்சொல்லுமைம்பெயரோ) யாப்பேகட்டுங்கவிதையுமிருபெயர்) இருலென்பதுகார்த்திகைநாளோர்மீ னேறுடனேதேன்கூடுநாற்பேரோ. *௩*

[பகரவெதுகைமுற்றிற்று.]

சமன்யமனடுவுமாகுஞ்சலமென்பவயிரநீர்பொ - - - ய்
கமலநீர்வனசமுமம்பேர்கலாஞ்சினங்கொடுமையாகு - - ங்
குமரிசற்றாழைகன்னிகொற்றவைகாளிக்கும்பே - - - ர்
ஞமலிநாய்மயிலகள்ளென்பநனைகள்ளுமலர்மொட்டும்பே ர்.

இதன்பொருள்

(சமனென்பது) இயமன் - நடுவுக்கும்பெயர். (சலமென்பது) தணியாககோபம் - நீர் - அபத்தத்துக்கும்பெயர்.( கமலமென்பது )சலம் - தாமரைக்கும்பெயர்.(கலாமென்பது)கோபம் - குரூரத்துக்கும்பெயர். (குமரியென்பது ) கற்றாழை - கன்னி - துர்க்கை - காளிக்கும்பெயர்.(ஞமலியென்பது )நாய் - மயில் - கள்ளுக்கும்பெயர்.(நனையென்பது)கள் - பூவரும்புக்கும்பெயரொன் [றவாறு.

இதற்குமேற்கோள்

சமனேநடுவுநமனுமிருபெயர்)சலமேநடுக்கமும்வயிரமுநீரும் பொய்யுமெனவேபோற்றுநாற்பேரோ)கமலமேசெம்படாமுநீருந் தாமரையெனவுஞ்சாற்றமுப்பேரோ )கலாமேகொடுமையுஞ்சினமுமாகும் ) குமரியேகற்றாழையுங்காளியுங் கன்னிகையுங் கொற்றவையுநாற்பேரோ ) ஞமலியேநாய்மயிலெனவிருபெயர் ) நனையென்பதுவேமதமுங்கள்ளும் பூமொட்டெனவும்புகலுமுப்பெயரோ.

✻க✻

சாமமோர்வேதம்பச்சைசாமமேகருமைநாற்பே - - ர்
வாமமேகுறளிடப்பால்வனப்பொடுதொடையுமா - மே
பூமலர்வனப்புக்கூர்மைபொலிவொடுபிறப்புப்பூ - - மி
யேமமேசேமங்காவலின்பம்பொன்னிரவேமைய - - ல்.

இதன்பொருள்

(சாமமென்பது ) ஓர்வேதம் - பச்சை - இரவு - கறுப்புக்கும்பெயர் (வாமமென்பது) குறள் - இடதுபக்கம் - அழகு - தொடைக்கும்பெயர்.(பூவென்பது)மலர் - அழகு - கூர்மை - பொலிவு - பிறப்பு - பூமிக்கும்பெயர். (ஏமமென்பது ) புதையல் - காவல் - சுகம் - பொன் - இராத்திரி - மயக்கத்துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

சாமமேயோர்வேதமும்பச்சையுங் கருமையும்யாமமுங்காட்டு

நாற்பேரோ) வாமமேயிடப்பாலுந்தொடையுங் குறளும்வனப்பு
ங்கூறுநாற்பேரோ) பூவென்பதுவேமலரும்வனப்புங் கூர்மையு
ம்பொலிவும்பிறப்பும்பூமியுந் தாமரையெனவுஞ்சாற்றுமேழ்
பெயரோ) ஏமமென்பதுசேமமுங்காவலு மின்பமுமிரவும்பொ
ன்னுமையலும் வலியுங்கலையுமேமாப்புமொன்பான்பே ர்.

*உ*

உம்பரோதேவராகுமுயர்நிலமுடன்மேலும்பே - - - ர்
வம்பென்பபுதுமைகச்சுமணநிலையின்மைநாற்பே - - ர்
கும்பமேகுடமிராசிகும்பிமத்தகமுமாகு - - - - - ந்
தும்பென்பசிம்புடோடாஞ்சுகமென்பகிளியேயின்ப - ம்.

இதன்பொருள்

(உம்பரொன்பது) தேவர் - தேவலோகம் - மேலுக்கும்பெயர் • (வம்பென்பது) புதுமை - முலைக்கச்சு - வாசனை - நிலையில்லாமை க்கும்பெயர். (கும்பமென்பது) குடம் - ஓரிராசி - யானைமத்தகத் துக்கும்பெயர். (தும்பென்பது) சிம்புள் - ஓர்கயிற்று க் கும் பெ யர். (சுகமென்பது) கிளி - இன்பத்துக்கும்பெயரொன்றவா று.

இதற்குமேற்கோள்

உம்பரொன்பதுவேமேலுந்தேவரு முயர்நிலமெனவுமுறைக்கு
முப்பெயரோ) வம்பேபுதுமையுங்கச்சுமணமு நிலையின்மையு
மெனநிகழ்த் துநாற்பேரோ) கும்பந்தானேயானைமத்தகமுங்
குடமுமிராசியுங்கூறுமுப்பெயரோ) தும்பேதோடுஞ்சிம்புளுமி
ருபெயர்) சுகமேகிளியுமின்பமுநன்மையுஞ் சுங்கனுமெனவே
சொல்லுநாற்பெயரோ.

*ந*

ஆம்பலவேய்கள்ளுக்கவ்வையயல்லிவங்கியமேயா - - னை
சாம்பல்கூம்புதல்பழம்பூத்தமிழென்பதினிமைநீர் - - மை
தாம்பென்பகயிறுதானேதாமணிதனக்கும்பேரா - - ங்
காம்புவேய்மலர்த்தாள்பட்டேகடிமலர்க்கொம்பேநாற்பே ர்.

இதன்பொருள்

(ஆம்பலென்பது) மூங்கில - கள் - துன்பம் - அல்லி - வேய்ங்குழல் - யானைக்கும்பெயர். (சாம்பலென்பது) குவிதல் - பழம்பூவுக்கு ம்பெயர். (தமிழென்பது) தித்திப்பு - குணத்துக்கும்பெயர்.

(தாம்பென்பது)கயிறு - தாமணிக்கும்பெயர்.(காம்பென்பது) மூங்கில் - பூவின்காம்பு - பட்டு - சீலை - மரக்கொம்புகளும்பெய [ரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

ஆம்பலென்பதுமூங்கிலுநிலவு மிபமுமங்கள்ளுமல்லியுங்கவ்வையு மூதிடுகொம்புமோரொண்ணுடனே யோர்பண்ணெனவுமோது மொன்பான்பேர்) சாம்பலென்பதுகூம்புதல்பழம்பூச் சாம்ப லெனவுஞ்சாற்றுமுப்பெயரோ) தமிழென்பதுமேவயினிமையுநீர் மையுந் தமிழுமெனவேசாற்றுமுப்பெயரோ) தாம்பேகயிறுதா மணியிருபெயர்) காம்பலர்த் தாளுமூங்கிலும்பட்டு மரககொ ம்பெனவுமதிக்குநாற்பெயரோ. ※ச※

அம்மையேவருபிறப்புமழகுமாந்தாயுமாகு - - - - ஞ்
சும்மையென்பதுவேநெற்போர்நாடொலிசுவையுஞ்சொல்லுஞ்
செம்மைசெவ்வையுஞ்சிவப்புந்திரிதலேயுலாவல்கேடா ங்
கொம்மையேயிளமைவட்டங்கொங்கைகைகுவித்துக்கொட் ட [ல்.

இதன்பொருள்

(அம்மையென்பது) வருபிறப்பு - அழகு - தாய்க்கும்பெயர். (சும்மையென்பது) நெற்போர் - நாடு - சத்தம் - சுவைக்கும் பெயர். (செம்மையென்பது) செவ்வை - சிவப்புக்கும்பெயர். (திரிதலென்பது) உலாவல் - கேட்டுக்கும்பெயர். (கொம்மை யென்பது) இளமை - வட்டவடிவு - முலை - கைகுவித்துக்கொட் டலுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

அம்மையேவருபிறப்புமழகு மன்னையுமுமையுமாகுநாற்பெய ரோ) சும்மைசுவையுநெற்போருநகரமு மொலியுநாடுமோது மைம்பெயரோ) செம்மையென்பதுவேசெவ்வையுஞ்சிவப்பும் பெருமையுஞ்செப்பமும்பேசுநாற்பெயரோ) திரிதலேகெடுதலு லாவலிருபெயர்)கொம்மையேகைகுவித்துககொட்டலு மிள மையும்வட்டமுமுலையுந்திரட்சியு மழகுமெனவேயறுபெயரா கும்※ரு※

அம்மழகசைச்சொனீரமழனந்தீப்பிணமுமாகு - - - ங்
கம்மென்பதலையாகாயங்கனங்காளீர்விதிவெளுப்பு - - ச்

செம்மலேபழம்பூவீசன்சினேந்திரன்சிறந்தோன்மைந்த - ன்
கம்மியர்கைவினைப்பேர்கண்ணாளர்தாமுமா - - - மே.

இதன்பொருள்

(அம்மென்பது)அழகு - அசைச்சொல் - நீருக்கும்பெயர்.(அழனமென்பது) நெருப்பு - பிரேதத்துக்கும்பெயர். (கம்மென்பது) தலை - ஆகாயம் - மேகம் - காற்று - நீர் - பிரமன் - வெண்மைக்கும்பெயர். (செம்மலென்பது) பழம்பூ - சிவன் - அருகதேவன் - சிறப்புற்றோன் - மகனுக்கும்பெயர். (கம்மியனென்பது) தொழில்செய்வோர் - கம்மாளருக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

அம்மென்பதுவேயசைச்சொலுமழகு நீருமெனவேநிகழ்த்துமுப்பெயரே) அழனமேபிணந்தீயெனவிருபெயர்) கம்மென்பதுவேவெண்மையுந்தலையும் விதியுங்ககனமும்புனலுமுகிலு மாடுங்காற்றுமென்றறையலாகும்) செம்மருனேயருகனுமீசனும் வாடாப்பூவும்வாரியும்பெருமையும் பழம்பூவுடனுந்தலைமையும்வீரனும் புதல்வனுஞ்சிறந்தோனுடனொருபான்பேர்) கம்மியனொன்பதுதொழில்செய்வோருங் கம்மாளருமெனக்கருதுமிருபெயர்.*௬*

வாமனங்குறள்புராணமாதிரக்கயத்திலொன்று - - - ங்
காமரமத்தநாளோடடுப்பிசைப்பொதுவுங்காட் - - டு
நேமிசக்கரம்பார்வட்டநேமிப்புட்கடலும்பே - - - ரோ
தேமென்பதிடந்தித்திப்புத்தேனுற்றந்திசைதேசப்பே - ர்.

இதன்பொருள்

(வாமனமென்பது) குள்ளம் - ஓர்புராணம் - தென்றிசையானைக்கும்பெயர். (காமரமென்பது)அத்தநட்சத்திரம் - அடுப்பு - இசைப்பொதுவிற்கும்பெயர்.(நேமியென்பது)சக்கராயுதம் - பூமி - வட்டவடிவு - சக்கரவாகப்புள் - சமுத்திரத்துக்கும்பெயர். (தேமென்பது) இடம் - தித்திப்பு - தேன் - வாசனை - திக்கு - தேசத்துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

வாமனமென்பதுதிக்கயத்தொன்றுங் குறளுமோர்புராணமுங்

கூறுமுப்பெயரோ) சாமரமேயிசைப்பொதுவுமடுப்பு மத்தநாளுமென்றறையுமுப்பெயரோ) நேமிசக்கரமும்வட்டமுமூங்கிலும் பூமிபுங்கடலுநேமிப்புள்ளுந் சகுனமுந்தேரினுருளையுமாகும்)தேமேயிடமுநாற்றமுந்திசையுந் தித்திப்புந்தேசமுந்தேனுங்களுமாம். *எ*

தாமம்வெற்பொழுங்குகொன்றைசாந்தொளிநகரந்தாம் - பூ
பூமணிக்கோவைமாலைபொருகளங்கரியீராறு - - - ஞ்
சோமனோர்வள்ளலிந்துசுரும்பென்பமலையும்வண்டு - - ஞ்
சாமியேமுதல்வன்செவ்வேடலைவியாசான்வெறுக் - . கை.

இதன்பொருள்

(தாமமென்பது) மலை - ஒழுங்கு - கொன்றைமரம் - சாந்து - பிரகாசம் - பட்டணம் - கயிறு - பூ - மணிக்கோவை - பூமாலை - போர்க்களம் - யானைக்கும்பெயர். (சோமனென்பது) ஓர்வள்ளல் - சந்திரனுக்கும்பெயர். (சுரும்பென்பது)மலை - வண்டுக்கும்பெயர். (சாமியென்பது) கடவுள் - முருகக்கடவுள் - முதல்வி - குரு - பொன்னுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

தாமம்பூவும்வெற்புந்தந்தியுந் தாருநகருஞ்சாந்தமுங்கயிறுங்கொன்றையுமணியின்கோவையுமொளியு மொழுங்குங்களமுமென்றுரைக்கலாகும்) சோமனென்பதோர்வள்ளலுந்தூசுஞ்சந்திரனெனவுஞ்சாற்றுமுப்பெயரோ) சுரும்புவண்டுமலையுமாகும்)சாமியாசானுமரசனுந்தலைவியும் வியாழமுந்தலைவனுங்கடவுளும்வேளும் பொன்னுமருகனும்புகலலாகும். *அ*

குமுதமேயடுப்போர்திக்கின்குஞ்சரமொலிவெண்ணெய்த - ல்
சிமயமேமலைவெற்புச்சிதீத்தீயேநரகுதீங் - - - - கா
மமறலேபொலிவுதுன்னலரிமூறுபிணக்கமா - - - - சு
சிமிலியேகுடுமிசிக்கஞ்சிள்வீடுதானுமா - - - - மே.

இதன்பொருள்

(குமுதமென்பது) அடுப்பு - மேற்றிசையானை - சத்தம் - வெள்ளாம்பலுக்கும்பெயர். (சிமயமென்பது) மலை - மலையினுச்சிக்கும்பெயர். (தீயென்பது) நெருப்பு - நரகம் - தீமைக்கும்பெ

யர்.(அமறலென்பது) பொலிவு - நெருங்கலுக்கும்பெயர். (அரி லென்பது) சிறுதூறு - பிணக்கு - குற்றத்துக்கும்பெயர். (சிமிலி யென்பது) சிகை - உறி - சிள்வண்டுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

குமுதமென்பதுநெய்தலுமொலியுந் திக்கயத்தொன்றுமடுப்பு நாற்பேரே) சிமயமேமலையுமலையினுச்சியும்) தீயென்பதுவேதி ரயமுந்தீங்குந் தீயுந்தித்திப்புஞ்செப்புநாற்பேரே) அமறன்மிகு தியும்பொலிவும்பீடு நெருக்கமுமென்றேறிகழ்த்தலாகும் ) அரி லென்பதுவேபாயலுஞ்சேகுங் குரலுங்குழலுங்குற்றமுஞ்சந்தி யும் பிணக்குஞ்சிறுதூறெனுமெண்பேரே) சிமிலிதானேயுறியுங் குடுமியுஞ் சிள்வீடெனவுஞ்செப்புமுப்பெயரே. *கூ*

சம்புவேயிரவிநாவல்சங்கரனயன்மாலோ - - - - - ரி
தும்பியேகளிறுவண்டாந் துன்னலேசெறிதல்சேர்த - - ல்
கம்புளேசங்குசம்பங்கோழியென்றிருபேர்காட் - - - டு
மம்பரங்கடல்விண்சோமண்ணலேதலைவன்பீ - - - - டு.

இதன்பொருள்

(சம்புவென்பது) சூரியன் - நாவன்மரம் - சிவன் - பிரமன் - திரு மால் - நரிக்கும்பெயர். (தும்பியென்பது) யானை - வண்டுக்கும் பெயர்.(துன்னலென்பது)நெருங்கல் - கிட்டலுக்கும்பெயர். (கம்புளென்பது) சங்கு - சம்பங்கோழிக்கும்பெயர். ( அம்பர மென்பது) கடல் - ஆகாயம் - வஸ்திரத்துக்கும்பெயர்.(அண்ண லென்பது) அரசன் - பெருமைக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

சம்புமாலுமயனுமரனு நரியுநாவலுமிரவியுஞ்சம்பு மெனுமிச் சையும்வச்சிரமுமொன்பான்பேர்)தும்பியேயிபம்வண்டெனவி ருபெயர்) துன்னலுனேசெறிதலுஞ்சேர்தலுங் குறுகுதலெனவு ங்கூறுமுப்பெயரே)கம்புடானேசம்பங்கோழியுஞ் சங்குமென வேசாற்றுமிருபெயர்) அம்பரந்தானேகடலும்புடைவையு மா காயமுமென்றறையுமுப்பெயரே) அண்ணலென்பதுமரபுந்த லைவனும் பெருமையுமெனவேபேசுமுப்பெயரே. *ம*

கிம்புரிமுடிதந்தப்பூண்கேட்டைதான்மூகடியோர்நா - ள்
கும்பிசேறுனைபூதிகுலைதான்செய்கனைகாய்க்கொத் - - தா
மும்பலாண்விலங்குவேழமுயர்குலமெழுச்சிக்கும் - - பே
ரம்பலேபழிச்சொல்சில்லோரறிந்தலர்தூற்றலா - - மே.

இதன்பொருள்

(கிம்புரியென்பது) முடி - யானைக்கொம்பிற்பூணுக்கும்பெயர். (கேட்டையென்பது) மூதேவி - ஓர்நட்சத்திரத்துக்கும்பெயர். (கும்பியென்பது) சேறு - யானை - நரகத்துக்கும்பெயர். (குலையென்பது) செய்கனை - மரக்குலைக்கும்பெயர். (உம்பலென்பது) ஆண்மிருகம் - யானை - குலம் - எழுச்சிக்கும்பெயர். (அம்பலென்பது) பழிச்சொல் - சிலரறிந்துதம்முட்புறங்கூறலுக்கும் பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

கிம்புரியேதோளணியுமங்கமுந் தந்தப்பூணுமுடியுநாற்பெயரோ) கேட்டையசைச்சொலுங்கேட்டையுமுகடியும்) கும்பியென்பதிபமுநிரயமுஞ் சேறுமெனவேசெப்புமுப்பெயரோ) குலை செய்கனையுமம்பின்குதையுங் காயின்கொத்தும்விற்குதையுமாகும்) உம்பலாண்விலங்குங்குலமுந்தந்தியு மெழுச்சியுமெனவேயிசைக்குநாற்பெயரோ) அம்பலேசில்லோரறிந்தலர்தூற்றலும் பழிமொழியெனவும்பகருமிருபெயர். ※௰௧※

கம்பலையச்சமோசைகம்பிதந்துன்பநாற்பே - - - - ர்
செம்புலம்பாலைசேருந்திணைசெருக்களமிரண்டா - - - ந்
தம்பமேகவசந்தூணுஞ்சமழ்த்தலேவருத்தநாண - - ங்
கம்பமேநடுக்கந்தம்பங்கந்தனேயருகன்செவ்வே - - ள்.

இதன்பொருள்

(கம்பலையென்பது) பயம் - சத்தம் - நடுக்கம் - துன்பத்துக்கும் பெயர். (செம்புலமென்பது) பாலைத்திணை - போர்க்களத்துக்கும்பெயர். (தம்பமென்பது) கவசம் - தூணுக்கும்பெயர். (சமழ்த்தலென்பது) வருத்தம் - வெட்கத்துக்கும்பெயர். (கம்பமென்பது) நடுக்கம் - தூணுக்கும்பெயர். (கந்தனென்பது) அருகதேவன் - முருகக்கடவுளுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

கம்பலைதானேயச்சமுமொலியுந் துன்பமுநடுக்கமுஞ்சொல்லு
நாற்பேரோ) செம்புலமென்பதுபாலைநிலமும் யுத்தகளமுமென்
றோதுமிருபெயர்) தம்பமென்பதுகவசமுங்கம்பமும்) சமழ்த்
தலென்பதுவருத்தமுநாணமும்) கம்பமென்பதுதம்பமுநடுக்க
முமம்) கந்தனருகனுங்கந்தனுமாகும். *௫௨*

அமரோவிபுதர் தெவ்வரவந்திதான்கிளியோரூ - - - ரா
மமுதுபாறேவருண்டியாகுமின்சுவையுமப் - - - பே
ரமலையேயாரவாரமயினியோடுமையுமுப்பே - - - ர்
தமமிருளிராகுவின்பேர்சார்ங்கம்விற்பொதுமால்வில்லா - ம்

இதன்பொருள்

(அமரொன்பது)தேவர் - பகைஞருக்கும்பெயர். (அவந்தியெ
ன்பது) கிளி - ஒரூருக்கும்பெயர்.(அமுதென்பது)பால் - தேவ
ருணவு - அமிர்தத்துக்கும்பெயர். (அமலையென்பது) ஒலி - சோ
று - பார்வதிக்கும்பெயர்.(தமமென்பது) இருள் - இராகுக்கோ
ளுக்கும்பெயர். (சார்ங்கமென்பது) விற்பொது - திருமால்வில்
லுக்கும்பெயரென்றவாறு.

இதற்குமேற்கோள்

அமரோவிண்ணவரும்பகைஞரும்) அவந்தியோரூருங்கிளியுஞ்
சேனையும்)அமுதேபாலுந்தேவருணவு மமுதமுநீருமென்றறை
யுநாற்பெயரோ)அமலையம்பிகையுஞ்சோறுமோசையும்)தமமே
யிருளுமிராகுவுமாகும்) சார்ங்கமாயோன்வில்லும்விற்பொதுவு
ம். *௫௩*

ஆம்பிரம்புளிமாத்தேமாவாம்புளிப்பினுக்குமப்பே - - ர்
சாம்புபொன்பறையாமென்பதாண்டவங்கூத்தேதாவ - ல்
பாம்பென்பகணைமராளம்பையராப்படமேபச் - - சை
யாம்பியேயொலிகாளாஞுமயிராணியுமையிந்திரா - - ணி.

இதன்பொருள்

( ஆம்பிரமென்பது ) புளிமா - தேமா - புளிப்புக்கும்பெயர்.
(சாம்பென்பது ) பொன் - பறைக்கும்பெயர். ( தாண்டவமென்
பது)கூத்து - தாண்டுதலுக்கும்பெயர்.(பாம்பென்பது ) கணை -

பாம்புக்கும்பெயர்.(பையென்பது)பாம்பின்படம் - பச்சைக்கும் பெயர். ( ஆம்பியென்பது )சத்ரம் - காளானுக்கும்பெயர். (அயிராணியென்பது)பார்வதி - இந்திராணிக்கும்பெயரென்றவாறு.

இதற்குமேற்கோள்

ஆம்பிரமேதேமாவும்புளிப்பும் புளிமாவெனவும்போற்றுமுப்பெயரே)சாப்பவேபன்றிபொன்னெனவிருபெயர் தாண்டவமாடனுந்தாவனுமாகும்)பாம்பேவரம்பும்பாம்பின்விகற்பமும்)பையெயழகும்பசுமையயிடையும் பாம்பின்படமுமெய்தெனனுமைம்பேரே ) ஆம்பிகாளானுஞ்சத்தமுமாகும் )அயிராணியுமையுமிந்திரன்றேவியும். ※௰௪※

காமனேமாசவன்வேள்கமுதந்திப்பலியுமாகு - - - ங்
காமமேவிரகமாசைகண்சசிதான்மழுவேதோட் - - - டி
பூமனேபிரமன்செய்வாய்புரையோரேகீழோர்மேலோ - ர்
சேமமேகாவலின்பந்தெக்கணம்வலந்தெற்காகு - - ம்.

இதன்பொருள்

(காமனென்பது) தேவேந்திரன் - மன்மதன் - வண்டு- திப்பலிக்கும்பெயர். ( காமமென்பது ) காமநோய் - ஆசைக்கும்பெயர். (கண்சசியென்பது) மழு - அங்குசத்துக்கும்பெயர். (பூமனென்பது) பிரமதேவன் - செவ்வாய்க்கும்பெயர். (புரையோரென்பது, கீழ்மக்கள் - மேன்மக்கட்கும்பெயர்.(சேமமென்பது)காவல - இன்பத்துக்கும்பெயர். ( தெக்கணமென்பது) வலப்பக்கம்- தெற்குக்கும்பெயரென்றவாறு.

இதற்குமேற்கோள்

காமனிந்திரனுமதனும்வண்டுந் திப்பலியெனவுஞ்செப்புநாற்பேரே) காமமேருங்குடியுமிறையும் விருப்புங்காமமும்விளம்பலாகும் ) கண்சசியுளியுந்தோட்டியுமழுவும் ) பூமன்பிரமனுஞ்செவ்வாயுமாகும்)புரையோர்மேலோர்கீழோரிருபெயர் ) சேமமின்பமுங்காவலுமாகும்)தெக்கணமேவலந்தெற்கிருபெயரே. ※௰௫※

காமுகன்விடன்வேண்மாலாங்காதென்பகொலையுங்காது - ங்
கோமளம்பசுவனப்புகசூறியவிளமைக்கும்பே - - - ர்

நாமமாங்கலித்தன்மிக்குநற்பொலிவெழுச்சியோ - ௬௪
மாமையேநிறம்வனப்பாமலயசஞ்சந்தநற்தென்ற - - - ல்.

இதன்பொருள்

(காமுகனென்பது) தூர்த்தன் - மன்மதன் - திருமாலுக்கும்பெயர். (காதென்பது) கொலை - காதுகளுக்கும்பெயர். (கோமளமென்பது) பசு - அழகு - இளமைக்கும்பெயர். (கலித்தலென்பது) மிகுதி - பொலிவு - எழுச்சி - சத்தத்துக்கும்பெயர். (மாமையென்பது)நிறம் - அழகுக்கும்பெயர்.(மலயசமென்பது)சந்தனமரம் - தென்றலுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

காமுகனென்பதுகாமனுமாலும் விடனுமென்றேவிதிக்குமுப்பெயரோ) காதேகொலையுங்காதுமிருபெயர்) கோமளமென்பது பசுவும்வனப்புமிளமையுமெனவேயிசைக்குமுப்பெயரோ) கலித்தருனேயொலியும்பொலிவு மெழுச்சியுமிகுதியுமிசைக்குநாற்பேரோ)மாமைநிறமும்வடிவுமிருபெயர்)மலயசஞ்சந்தனமரமுந்தென்றலும். * ௬௫ * மகரவெதுகைமுற்றிற்று

யகரவெதுகை.

காயமெய்விண்வெண்காயம்பெருங்காயங்கறிகரித் - - த
னேயநெய்யெண்ணெயன்பாநிறமென்பமருமங்காந் - - தி
யாயமேகவற்றிற்றுயமாதாயமாதர்கூட்ட - - - - ஞ்
சாயலென்பதுமேம்பாடுதருமழகுடனேமென் - - ௬௬.

இதன்பொருள்

(காயமென்பது) உடல் - ஆகாயம் - வெண்காயம் - பெருங்காயம் - மிளகு - கரிப்புக்கும்பெயர்.(நேயமென்பது)நெய் - எண்ணெய் - அன்புக்கும்பெயர்.(நிறமென்பது)மார்பு - பிரகாசத்துக்கும்பெயர்.(ஆயமென்பது) கவற்றிற்றுயம் - இலாபம் - பெண்கள்கூட்டத்துக்கும்பெயர்.(சாயலென்பது)மேம்பாடு - அழகு - மென்மைக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

காயமேவெண்காயமுங்கறியும் பெருங்காயமுமாகாயமுங்கரிப்பு முடலுமெனவேயோதுமறுபெயர்) நேயந்தானேயன்புமெ

ண்ணெயு நெய்யுமெனவேதிகழ்த்துமுப்பெயரோ) நிறமேமருமமுங்காந்தியுமிருபெயர்) ஆயமாதாயமுமகளிர்கூட்டமுங் கவற்றிற்ருயமுஞ்சுங்கமுநீளமு மல்லாரியுமெனவழுத்தலாகும்)சாயலேமேம்பாடுமழகு மென்மையுமொப்பும்விளம்புநாற்பேரோ.※க※

வயநீர்புட்பொதுவலிப்பேர்வயல்வெளிபழனமும்பே - - ர்
சயம்வெற்றிசருக்கரைப்பேர்சடமுடல்வஞ்சம்பொய் - யா
நியமமேநியதிவீதிநிச்சயநகரங்கோ - - - - - - யி
லியமென்பவொலியேவார்த்தைவாச்சியமிம்முப்பே - ரோ.

இதன்பொருள்

(வயமென்பது) நீர் - பறவைப்பொது - வலிமைக்கும்பெயர். (வயலென்பது) வெளி - கழனிக்கும்பெயர். (சயமென்பது) வென்றி - சருக்கரைக்கும்பெயர்.(சடமென்பது)சரீரம் - வஞ்சனை - பொய்க்கும்பெயர். (நியமமென்பது)செய்கடன் - தெரு - நிச்சயம் - பட்டணம் - கோயிலுக்கும்பெயர்.(இயமென்பது)சத்தம் - சொல் - வாச்சியப்பொதுவிற்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

வயமேயாடுங்குதிரையுமிரும்பும் வலியும்புட்பொதுவுநீருமறுபெயர்) வயலேவெளியும்பழனமுமிருபெயர்) சயமேயல்லிசருக்கரையிரவி மாலைவெற்றியென்றைம்பேர்மருவும்) சடமேபொய்யுமுடலும்வஞ்சமும்) நியமமென்பதுவேயங்காடியுங் குருவியும்வீதியுநியதியுநகரமுங் கோயிலுந்தவமுஞ்சுடுகாடுடனே நிச்சயமெனவுநிகழ்த்துமொன்பான்பேர்) இயமென்பதுவேவயியுமோசையும் வார்த்தையும்வாச்சியமுநாற்பேரோ. ※உ※

அயமென்பநீர்தடாகமாடுவெம்பரியிரும்பா - - - - ங்
கயமேன்மைகுளமேயாழங்களிறுகீழ்பெருமைதேய்வா - ம்
பயமென்பசுதைநீரச்சம்பாலொடுபயன்பேரைந் - - தே
யயனமேவழியிருமமாண்டினிற்பாதிக்கும்பே - - - ர்.

இதன்பொருள்

(அயமென்பது) நீர் - குளம் - ஆடு - குதிரை - இரும்புக்கும்பெயர். (கயமென்பது)மேன்மை - குளம் - ஆழம் - யானை - கீழ் - பெரு

மை - தெய்வுக்கும் பெயர். (பயமென்பது) அமிர்தம் - நீர் - பயம் -
பால் - பயனுக்கும் பெயர். (அயனமென்பது) வழி - வருடப்பாதிக்
கும் பெயரொன்றவாறு.] இதற்குமேற்கோள்

அயமேயாடுநீருநிலமுங் குளமுங்குதிரையுஞ்சேறும்விழவு மக
முமிரும்புஞ்சூதனருடனே யொருபது பெயரொன்றுனாக்கப்படு
மே) கா மென்பதும்வயானையமழகுங் குளமுங்கீழும்பெருமை
யுந்தெய்வு மேன்மையுமென்றேவிதிக்குமேற்பெயரோ) பயமெ
ன்பதுவேட்சமுங்குளமும் பயனும்பாலுஞ்சுதையுநீரும் பிர
மனுமென்றேம்பசுமேழ்பெயரோ) அயனந்தானேயாண்டினிற்
பாதியம் வழியமென்றேமதிக்குமிருபெயர். *ங*

பயிரொலிபயிலேலையைங்கூற்பறைக்கும்புட்குரலிற்றாற்பே - ர்
கயினிமேயத்தநாளுங்கைம்மையுமிருபேர்காட்டு - - - ம்
வயிரமேசெற்றங்கூர்மைவச்சிரமோர்மணியேசே - - கு
கயிலபிடர்த்தலையேபூணின்கடைப்புணர்விருபேர்தா - னே.

இதன்பொருள்

(பயிரென்பது) சத்தம் - சைகை - பயிர் - பறவைக்குரலுக்கும்
பெயர். (கயினியென்பது) அத்தநட்சத்திரம் - கைம்பெணுக்கு
ம்பெயர். (வயிரமென்பது) சலஞ்சாதித்தல் - கூர்மை - வசிராயுத
ம் - வச்சிரமணி - மரவயிரத்துக்கும்பெயர். (கயிலென்பது) பிடரி -
ஆபரணக்கடைப்புணர்வுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

பயிரொலிகத்துகட்டியவழக்கும்பயிரு மொலியும்பயிலுஞ் சிலங்
கிளைலியும் பசும்புலும்புள்ளினொலியும்பகர்வர் ) கயினிதானே
யத்தநாளுங் கைம்பெண்ணெனவுங்கருதுமிருபெயர்) வயிரமோ
ர்மணிவச்சிரங்கூர்மை செற்றஞ்சேகுவன்மையென்றறுபெயர் )
கயிலேபூணின்கடைப்புணர்வுடனே பிடர்த்தலையெனவும்பேசு
[மிருபெயர். *ச*

ஐயமேபிச்சைபோற்றுமோடனுமானம்பிச் - - - - சை
யையனேமூத்தோன்சாத்தனைப்பனீச்சுரனுற்பே - - ரோ
தொய்யபலேயுழவுஞ்சேறுந்துயரமுமகிழ்ச்சியும்பே - - ர்
மொய்செருக்களம்போரியானைமூசல்வண்டொடுதிர்ட்பே - ர்.

இதன்பொருள்

(ஐயமென்பது) பிச்சையேற்கும்பாத்திரம் - சந்தேகம் - பிச்சைக்கும்பெயர். (ஐயனென்பது) மூத்தோன் - ஐயனூர் - தகப்பன் - சுவாமிக்கும்பெயர். (தொய்யலென்பது) உழவு - சேறு - துன்பம் - களிப்புக்கும்பெயர். (மொய்யென்பது) போர்க்களம் - யுத்தம் - யானை - மொய்த்தல் - வண்டு - கூட்டத்துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

ஐயமேபிச்சையேற்றிடுமோடும் பொழுதுமையமும் பிச்சையு நாற்பேர்) ஐயனென்பதுமூத்தோன்சாத்த னப்பன்சுவாமியெனும்பெயர்நாலே) தொய்யலேயோர்புதலுந்தொய்யிலு மழகுங் குழைவுமகிழ்ச்சியுந்துயரமுஞ் சேறுமுழவுஞ்செப்புமென்பெயரோ) மொய்செருக்களமுமொய்த்தலும்யானையும் பூசலுந்திரளும் வண்டுமாகும்.

*ரு*

வயவனேவீரனேடுவலியான்காதலனுமாகு - - - - ங்
குயிறலேசெறிதல்கூவல்குடைதல்பண்ணுதனுற்பே - - ரோ
வயினிடமுதரம்வீடாம்வயாக்கருவருத்தங்காத - - - ன்
மயல்செத்தைமயக்கம்பேயாமறவரோவயவர்வேட - - ர்.

இதன்பொருள்

(வயவனென்பது) வீரன் - வலியன் - தலைவனுக்கும்பெயர். (குயிறலென்பது) நெருங்கல் - அழைத்தல் - குளித்தல் - செய்தலுக்கும்பெயர். (வயினென்பது) இடம் - வயிறு - வீட்டிற்கும்பெயர். (வயாவென்பது) கருப்பம் - வருத்தம் - ஆசைக்கும்பெயர். (மயலென்பது) செத்தை - மயக்கம் - பேய்க்கும்பெயர். (மறவரென்பது) படைவீரர் - வேடருக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

வயவனேவல்லாளனும்வலியனுங் காதலனெனவுங்கருதும்பெயரோ) குயிறலென்பதுகுடைதலுஞ்செறிதலுஞ் செய்தலுங்கூவலுஞ்செப்புநாற்பெயரோ) வயினென்பதுவேயிடமுமனையும் வயிறுமெனவேமதிக்கும்பெயரோ) வயாவென்பதுவேகாதற்பெருக்கமுங் கருப்பமுநோயுங்காட்டும்பெயரோ) மயலென்பதுவேமயக்கமுஞ்செத்தையும் பேயுமென்றேபேசும்பெயரோ) மறவர்வீரரும்வேடருமாகும்.

*சா*

குயிலேகோகிலமுஞ்சொல்லுங்கொண்மூவுந்துளையுநாற்பே - ர்
வயமாவேகுதிரைசிங்கமதகரிபுலியுமாகு - - - - - ம்
வியலென்பவிசாலம்மிடாம்வேய்துளையொற்றுமூங்கி - ன்
மயிலையேமீனராசிமீனிருவாட்சிமுப்பே - - - - - ர்.

இதன்பொருள்

(குயிலென்பது)ஓர்பட்சி-வார்த்தை-மேகம்-துளையுடைப்பொருளுக்கும்பெயர். (வயமாவென்பது)குதிரை-சிங்கம்-மதயானை-புலிக்கும்பெயர்.(வியலென்பது)விரிவு-பெருமைக்கும்பெயர்.(வேயென்பது)உட்டுளை-வேவு-மூங்கிலுக்கும்பெயர்.(மயிலையென்பது) மீனவிராசி-மீன்-இருவாட்சிக்கும்பெயரொன்றவாறு.]

இதற்குமேற்கோள்

குயில்சொல்கோகில்முகிறுளைநாற்பேர்)வயமாக்குதிரையும்யானையுஞ்சிங்கமும் புலியுமென்றேபுகலலாகும்)வியலென்பதுவேபெருமையுமகலமுங் காடுமெனவேகருதுமுப்பெயரோ) வேயென்பதுவேவிணையுமூங்கிலு மொற்றுந்துளையுமென்றோதுநாற்பேரோ)மயிலையேயிருவாட்சியுமீனு மீன்விராசியுமேவுமுப்பெயரோ.

※எ※

சயிந்தவங்குதிரையோடுதலையுமிந்துப்புமாகு - - - ங்
குயந்தனமிளமையோடுகூரரிவாளுமுப்பே - - - - - ர்
நயந்தோனேநண்பன்கொண்கனலம்விருச்சிகமேநன் - மை
பயம்பென்பதானைவிழும்படுகுழிபள்ளமா - - - மே.

இதன்பொருள்

(சயிந்தவமென்பது)குதிரை-தலை-இந்துப்புக்கும்பெயர்.(குயமென்பது) முலை-இளமை-அரிவாளுக்கும்பெயர். (நயந்தோனென்பது)தோழன்-கணவனுக்கும்பெயர்.(நலமென்பது)தேள்-நன்மைக்கும்பெயர்.(பயம்பென்பது)ஆனைவிழும்படுகுழி-பள்ளத்துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

சயிந்தவமென்பதுகுதிரையுந்தலையு மிந்துப்பெனவுமியம்புமுப்பெயரோ)குயமென்பதுவேயிளமையுமுலையு மரிவாளெனவுமாகுமுப்பெயரோ)நயந்தோன்கணவனுநண்பனுமாகும்) நலமுபகார

மூந்தேளுஞ்சுகமும்) பயம்பேபள்ளமும்யானைவீழ்குழியும்.

*அ*

இயனடைதமிழ்சாயற்பேரோல்லையேபொழுதுவா - - வி
குயவென்பகறிகரித்தல்குளிர்நறும்புகையிரண்டா - - - ஞ்
செயிரொன்பசினங்குற்றப்பேர்சேடிவிஞ்சையரூர்பாங் - கி
யுயவைகாக்கணமேமுல்லையுற்றகான்யாறுமா - - - மே.

இதன்பொருள்

(இயலென்பது)ஒழுக்கம் - இயற்றமிழ் - சாயலுக்கும்பெயர்.(எல்லையென்பது) காலம் - தடாகத்துக்கும்பெயர். (குயவென்பது) கறிகரிப்பு - நறும்புகைக்கும்பெயர். (செயிரென்பது ) கோபம் - குற்றத்துக்கும்பெயர்.(சேடியென்பது) வித்தியாதரருலகு - தோழிக்கும்பெயர். ( உயவையென்பது ) காக்கணஞ்செடி - முல்லைக்கொடி - காட்டாற்றுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

இயலேசாயலுநடையுந்தமிழு மியலுமெனவேயிசைக்குநாற்பெயரோ)எல்லையேபொழுதுகுளமிருபெயரோ) குயவுகறிகரித்தலுங்குளிர்மணப்புகையும் ) செயிரோகுற்றமுஞ்சினவலுமாகும் ) சேடியென்பதுவிஞ்சையரிடமும் பாங்கியெனவும்பகருமிருபெயர்) உயவையேகாக்கணமுமுல்லையுங் கான்யாறெனவுங்கருதுமுப்பெயரோ.

*கக*

செய்யலேயொழுக்கங்காவல்சேறுசெய்வினைநாற்பே - ரோ
நெய்தலேகடற்சார்பூமிநெய்தற்பூச்சாபறைப்பே - - - ர்
வெய்யோனுதவனேதீயோன்விருப்பினன்றனக்குமப் - பே
ரையையேயுமையாடுர்க்கைமகளருந்தவப்பெண்ணுசா - ள்.

இதன்பொருள்

( செய்யலென்பது ) ஒழுக்கம் - காவல் - சேறு - செய்தொழிலுக்கும்பெயர் . (நெய்தலென்பது ) நெய்தனிலம் - ஆம்பற்பூ - சாபறைக்கும்பெயர். (வெய்யோனென்பது)சூரியன் - கொடியோன் - விருப்புற்றோனுக்கும்பெயர். ( ஐயையென்பது ) பார்வதி - துர்க்கை - மகள் - தவப்பெண் - தலைவிக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

செய்யருனேசேறுமொழுக்கமுங் காவலுந்தொழிலுங்காட்டுநா
ற்பேரோ) நெய்தலேயோர்நிலமுமோர்பூவுஞ் சாபறையெனவுஞ்
சாற்றுமுப்பெயரோ) வெய்யோனேவிருப்பினனுமிரவியுந் தீ
யோனெனவுஞ்செப்புமுப்பெயரோ)ஐயையென்பதுவேதுர்க்கை
யுங்காளியு மருந்தவப்பெண்ணுமுமையுமிடைச்சியு மாசாளென
வுமாம்பெயராறே. *ம*

ஐயழகிடைச்சொல்கோழையரசனேடிருமல்சா - - - மி
மையென்பதஞ்சனங்கார்மலடிருளாடுமாசா - - - - ங்
கையிடம்படைவகுப்பொப்பனைசெங்கைசிறுமைசீல - - ம்
வையந்தேரோறுரோணிவசுந்தராசிவிகையூர் - - - - தி.

இதன்பொருள்

(ஐயென்பது) அழகு - இடைச்சொல் - கோழை - இராசன் - இரு மல் - கடவுளுக்கும்பெயர். (மையென்பது) மை - மேகம் - மல டு - இருள் - ஆடு - குற்றத்துக்கும்பெயர். (கையென்பது) இடம்- படைவகுப்பு - அலங்காரம் - கைத்தலம் - அற்பம் - ஒழுக்கத்து க்கும்பெயர். (வையமென்பது) தேர் - எருது - உரோகிணி நட் சத்திரம் - பூமி - தண்டிகை - வாகனத்துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

ஐயேயழகுமிடைச்சொலுங்கோழையு மிருமலும்பதியுநாதனுஞ்
சுவாமியு மந்தாரமுமெனவைக்குமெண்பெயரோ)மையெனலேய
ஞ்சனமுங்குற்றமு மேகமுமலடுங்கறுப்புமிளமையுந் தகருமென
வேசாற்றுமேழ்பெயரோ) கையேயொழுக்கமுமிடமுங்குற்றமு
ஞ் சிறுமையுஞ்சார்புடம்படையின்வகுப்புங் கையுமொப்பனையுங்
காட்டுமெண்பெயரோ)வையமேயானேறுமுரோணியும் பூமியுஞ்
சிவிகையுஞ்சகடமுந்தேரு மூர்தியும்விளக்கமுமோதுமெண்பெ
யரோ. *மக*

சேய்குகனிளமைதூரஞ்செம்மைசேண்சிறுவன்செவ்வா - யி
வாய்குழலிடம்வாயமைப்பேர்மாருதியனுமன்வீ - - - ம
ஞய்தலேநுணுக்கந்தேர்தலாறென்பவழிநரிப்பே - - - ர்
வேய்தல்சூடுதன்மூடற்பேர்விநாயகனருகன்முன்னே - ன்.

இதன்பொருள்

(சேயென்பது) முருகக்கடவுள் - இளையதன்மை - தூரம் - சிவப்பு - நீளம் - மகன் - செவ்வாய்க்கும்பெயர். (வாயென்பது) ஊதுகுழல் - இடம் - உண்மைக்கும்பெயர். (மாருதியென்பது) அனுமன் - வீமனுக்கும்பெயர். (ஆய்தலென்பது) நுண்மை - ஆராய்தலுக்கும்பெயர். (ஆறென்பது) வழி - நதிக்கும்பெயர். (வேய்தலென்பது) சூடுதல் - மூடுதலுக்கும்பெயர். (விநாயகனென்பது) அருகதேவன் - கணபதிக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

சேயென்பதுவேயிளமையுமுருகனு நீளமுந்தூரமுமகனுஞ்சிவப்புஞ் செவ்வாயெனவுஞ்செப்புமேழ்பெயரே) வாயிடமுமூதுங்குழலும்வாய்மையும் வாக்கும்வாயும்வருவாயுமறுபெயர்) மாருதிதானேயனுமனும்வீமனும்) ஆய்தலென்பதுநுணுக்கமுந்தேர்தலும்) ஆறேயொண்ணும்வழியுநதியுமாம்) வேய்தருனேமூடலுஞ்சூடலும்) விநாயகனென்பதுகணபதியருகன் புத்தனெனவும்போற்றுமுப்பெயரே. *௰உ*

அயிர்கரும்பின்றேங்கட்டியான்றநுண்மணலேநுண் - மை
செயலேழிலொழுக்கமென்பதெய்வமேகடவுளூ - - மா
நயமென்பமகிழ்ச்சியின்பநன்மைநற்பயனுற்பே - - ரோ
பெயரொன்பபெருமைகீர்த்திபேசுநாமப்பேரா - - மே.

இதன்பொருள்

(அயிரென்பது) கருப்பங்கட்டி - நுண்மணல் - நுண்மைக்கும்பெயர். (செயலென்பது) தொழில் - ஒழுக்கத்துக்கும்பெயர். (தெய்வமென்பது) கடவுள் - ஊழிற்கும்பெயர். (நயமென்பது) களிப்பு - இன்பம் - நன்மை - பயனுககும்பெயர். (பெயரென்பது) பெருமை - புகழ் - பேருக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

அயிரோநுண்மையுங்கரும்பின்கட்டியு நுண்மணலெனவுநுவலுமுப்பெயரே) செயலென்பதுவேசேறுமொழுக்கமுங் காவலுந்தொழிலுங்காட்டுநாற்பேரே) தெய்வமூழுங்கடவுளுமாகும்) நயமென்பதுவேமகிழ்ச்சியுமின்பமு நன்றியும்பயனுநாட்டுநாற்பேரோ) பெயரோபேரும்பெருமையும்புகழும். *௰ஙு*

யகரவெதுகைமுற்றிற்று.

சிரகமேகரகமாகுஞ்சென்னியிற்சோடுமப்பே - - - ர்
கரகமேயாலங்கட்டிகமண்டலந்துளிநீர்கங் - - - கை
மரபுதான்முறைமைதொன்மைமறலென்பபிணக்குங்கூற்று ஞ்
சரபமெண்காற்புள்ளென்பவரையாடுதானுமா - - மே.

இதன்பொருள்

(சிரகமென்பது) கரகம் - தலைச்சீராவுக்கும்பெயர். (கரகமென்பது)மழைக்கட்டி - கமண்டலம் - நீர்த்துளி - கங்கைக்கும்பெயர். (மரபென்பது) பாரம்பரியம் - பழமைக்கும்பெயர். (மறலென்பது) பிணக்கு - இயமனுக்கும்பெயர். ( சரபமென்பது ) எண்காற்பட்சி - வரையாட்டுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

சிரகமென்பதுசென்னியிற்சோடுங் கரகமுந்திவலையுங்காட்டுமுப்பெயரே ) கரகங்காண்டமுமாலங்கட்டியுந் துளிநீருங்கங்கையுஞ்சொல்லுவர்புலவர் ) மரபேமுறைமையுந்தொன்மையுமிருபெயர் ) மறலேபிணக்குங்கூற்றுமிருபெயர் ) சரபமேவரையாடுஞ்சிம்புளும். *க*

இரதமேபுணர்ச்சிசூதமின்சுவையரைஞாண்பொற் - - றே
ரரணமேகவசங்காடேயணிமதில்வேலிநாற்பே - - - ர்
கரணமெண்மனதிகூத்துக்கலவிகாரணமைம்பே - - ரோ
சரணந்தாண்மறைபுகற்பேர்தன்னமான்கன்றேயற்ப - ம்.

இதன்பொருள்

(இரதமென்பது) சய்யோகம் - இரசம் - இனியசுவை - அரைநாண் - தேருக்கும்பெயர்.(அரணமென்பது)மெய்ககவசம் - காடு - மதில் - வேலிக்கும்பெயர். (கரணமென்பது)எண்ணிகளை - மனமுதலியகரணம் - கூத்தின்விகற்பம் - சம்போகம் - உபகரணத்துக்கும்பெயர்.(சரணமென்பது)கால் - அடைக்கலம்புகுதலுக்கும்பெயர்.(தன்னமென்பது)பசுவின்கன்று - சிறுமைக்கும்பெயரொன்றவாறு.]

இதற்குமேற்கோள்

இரதம்புணர்ச்சியரைஞாண்சூதம் பொற்றேருடனின்சுவையுமைம்பேரே )அரணமேகொத்தளமுங்கவசமு மதிலும்வேலியுமஞ்சலுங்காடுஞ் செருப்புமெனவேதெரித்திடுமேழ்பெயர் )

சரணமேமனமாதியுங்கணிதமுங் கலவியுங்கூத்தின்விகற்பமுங்க
ரணமு மின்னார்கலவியிற்கொண்ணிலேவுமாறே)சரணமேதாண்
மறைபுகலிருபெயர்) தன்னமேயான்கன்றுமற்பமும். *உ*

உரமென்பவலியேஞானமூக்கமேமார்புநாற்பே - - - ர்
சிரமென்பநெடுங்காலப்பேர்சென்னியுமன்னதேயா - - ம்
புரமென்பபுரிமுன்மெய்ப்பேர்புரவலன்வள்ளல்வேந்த - ன்
கரமென்பகிரணஞ்செங்கைகழுதைநஞ்சிறுத்தலும்பே - ர்.

இதன்பொருள்

(உரமென்பது) வலிமை - ஞானம் - உள்ளக்கிளர்ச்சி - மார்புக்கு
ம்பெயர். (சிரமென்பது) நெடுங்காலம் - தலைக்கும்பெயர். (புர
மென்பது) மருதநிலத்தூர் - முன் - உடலுக்கும்பெயர். (புரவ
லனென்பது) கொடையாளன் - அரசனுக்கும்பெயர். (கரமென்
பது) ஒளி - கைத்தலம் - கழுதை - விடம் - குடியிறைக்கும்பெய
ரொன்றவாறு.]

இதற்குமேற்கோள்

உரமேவலியுஞானமுமார்பு மூக்கமுமென்றேயேர்து நாற்பே
ரோ ) சிரமேசென்னியுநெடுங்காலமுமாம் ) புரமேயுடலும்புரியு
முன்னுமாம்) புரவலனென்பதுவள்ளலும்வேந்தனும்) கரமேகி
ரணமுங்கழுதையுங்கையு மிறுத்தலுநஞ்சுமென்றிசைக்குமைம்
பெயரே. *ங*

அரவநூபுரம்பாம்போசையாய்வென்பவருத்தமாய்த - ல்
பரவைவாரிதிபரப்புப்பங்கயமாதின்கூத் - - - - தே
யிரலையேகலையூதுங்கொம்பிரண்டுடன்முதனுளென் - - ப
வரசுமன்னிராச்சியப்பேரம்பிநாவாயேதெப்ப - - - ம்.

இதன்பொருள்

(அரவமென்பது) காற்சிலம்பு - பாம்பு - ஒலிக்கும்பெயர். (ஆய்
வென்பது) வருத்தம் - ஆராய்தலுக்கும்பெயர். (பரவையென்ப
து) கடல் - பரப்பு - திருமகளாடலுக்கும்பெயர். (இரலையென்ப
து ) ஆண்மான் - ஊதுகொம்பு - அச்சுவினிநட்சத்திரத்துக்கும்
பெயர். ( அரசென்பது ) அரசன் - இராச்சியத்துக்கும்பெயர்.
(அம்பியென்பது) மரக்கலம் - தெப்பத்துக்கும்பெயரொன்றவா
[று.

இதற்குமேற்கோள்

அரவமேநூபுரமுமுரகமு மாயிலியத்தோடோசையுநாற்பேர்) ஆய்வேயாய்தலும்வருத்தமுமாகும் ) பரவையென்பதுதிருமக ளாடலும் பரப்புங்கடலும்பகருமுப்பெயரோ )இரலையேமுதனு ளுங்கலையு மூதிடுகொம்புமென்றோதுமுப்பெயரோ)அரசேமன் னனுமிராச்சியமுடனே யோர்மரமெனவுமுனாக்குமுப் பெய ரோ) அம்பிநீர்மேலோடுவனவுந் தெப்பமுந்தோணியுஞ்செப்பு முப்பெயரோ. *ச*

அரம்பைதெய்வப்பெண்வாழையாஹுவேயிரதநன் - மை
சரந்தனிமணிவடம்போர்சாயகநாணற்புற்பே - - - ர்
நரந்தமென்பதுநாரத்தைநாறுங்கத்தூரிக்கும்பே - - ர்
சுருங்கையேகரந்துபண்ணுங்கற்படைநுழைவாயிற்பே - ர்.

இதன்பொருள்

( அரம்பையென்பது ) தெய்வப்பெண் - வாழைக்கும்பெயர். ( ஆஹுவென்பது) இனிமை - நன்மைக்கும்பெயர். (சரமென்பது)மணிவடம் - யுத்தம் - அம்பு - நாணற்புல்லுக்கும்பெயர்.(நரந்தமென்பது) நாரத்தை - கஸ்தூரிக்கும்பெயர். (சுருங்கையென்பது ) கோட்டையிற்கள்ளவழி - நுழைவாயிலுக்கும்பெயரொன்றவாறு.]

இதற்குமேற்கோள்

அரம்பைவாழையுந்தெய்வப்பெண்ணும்) ஆஹுவென்பதிரதமு நன்மையும்)சரமேகணையுநாணற்புல்லுந் தனிமணிவடமும்போருநாற்பேரோ) நரந்தமேநறுநாற்றமுங்காக்கையு நாரத்தையுங் கத்தூரியுநாற்பேர்)சுருங்கையென்பதுகரந்தகற்படையு நுழைவாயிலுமெனநுவலுமிருபெயர். *ரு*

ஆரமேபதக்கமுத்தமாத்திசந்தனமேமா - - - - லை
வாரநீர்க்கரையேயன்புமலைச்சாரல்கிழமைபங்கா - - - ந்
தாரம்வல்லிசைநாவெள்ளிதலைவியாழிசைகண்ணெண் - - ப
கோரஞ்சோழன்மாவட்டில்கொடுமைபூமொட்டுவா - சி.

இதன்பொருள்

( ஆரமென்பது )பதக்கம் - முத்து - ஆத்திமரம் - சந்தனமரம் - பூமாலைக்கும்பெயர்.(வாரமென்பது)நீர்க்கரை - அன்பு - மலைச்சாரல் - ஏழுகிழமை - பங்குக்கும்பெயர்.(தாரமென்பது)வல்லி

சை - நா - வெள்ளி - மனைவி - வீணைநரம்பிலொன்று - கண்ணு க்கும்பெயர்.(கோரமென்பது)சோழன்குதிரை - வட்டில் - கொடுமை - பூவரும்பு - குதிரைக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

ஆரமென்பதுமுத்தும்பதக்கமு மாத்திரியுமாலையும்பித்தளையுட னே சந்தனமரமுஞ்சாற்றுமறுபெயர் ) வாரமேநீர்க்கரையுமன்பு மலைச்சாரலுஞ்செவ்வாரமுங்கடனு மேழ்கிழமையுமெனவிசைக்குமறுபெயர்)தாரமேயாழ்நரம்பினிலொன்று மம்பகமும் வெண்கலமுந்தலைவியும் வெள்ளியுநாவும்வல்லிசையுமேழ்பெயரே)கோரமேசோழன்மாவும்வட்டிலுங் கொடுமையுமொட்டுங் குதிரையுமைம்பேர். *௬*

இராசியமறைவேயோனியிறப்பென்பமிகுதிபோக்கா - ம்
பராகமேயிரோணுவாகும்பரிமளமலர்த்தூளும்பே - - ர்
துரோணமேசிம்புள்காக்கைதும்பைவில்லொடுபதக் - கா
மிராகமேகீதஞ்செம்மையிச்சையேநிறமுமேற்கு - - ம்.

இதன்பொருள்

( இராசியமென்பது ) மறைவு - பெண்குறிக்கும்பெயர். ( இறப்பென்பது) மிகுதி - போதலுக்கும்பெயர். ( பராகமென்பது ) இரோணு - பூந்துகளுக்கும்பெயர்.(துரோணமென்பது)எண்காற்பட்சி - காக்கை - தும்பைச்செடி - வில் - பதக்குக்கும்பெயர். (இராகமென்பது)இசைப்பாட்டு - சிவப்பு - ஆசை - நிறத்துக்கும்பெயரொன்றவாறு.] இதற்குமேற்கோள்

இராசியமென்பதுமறைவும்யோனியும் ) இறப்பேமிகுதிபோக்கெனவிருபெயர் ) பராகமென்பதுமலரின்றூளு மிரோணுவுமெனவேயியம்புமிருபெயர் ) துரோணமென்பதுதும்பையும்வில்லுங் காக்கையும்பதக்குஞ்சிம்புளுமைம்பேர் ) இராகமென்பது நிறமுமிச்சையுஞ் செம்மையுங்கீதமுஞ்செப்புநாற்பெயரே.

*எ*

பரிபரிசுமத்தல்வேகம்பாதுகாத்திடல்வருத்த - - - ம்
புரிவளைவிரும்பல்செய்தல்புரத்தொடுகயிறுகட்டா - - ம்
பரிதலேயறுத்தலன்புபகர்ந்திடிலிரங்கலும்பே - - - ர்

வரிசுணங்கெழுத் துப்பாட்டுவாரிதியிறையேநெல் - - ௬.

இதன்பொருள்

(பரியென்பது)குதிரை - சுமத்தல் - சீக்கிரம் - பாதுகாத்தல் - வருத்தத்துக்கும்பெயர்.(புரியென்பது)சங்கு - விரும்புதல் - செய்தல் - நகரம் - கயிறு - கட்டுக்கும்பெயர்.(பரிதலென்பது)அறுத்தல் - அன்பு - இரங்கலுக்கும்பெயர். ( வரியென்பது ) தேயல் - எழுத்து - இசைப்பாட்டு - கடல் - குடியிறை - நெல்லுக்கும்பெயரொன்றவாறு.]

இதற்குமேற்கோள்

பரியென்பதுவேசுமத்தலுங்காழ்த்தலும் வருத்தமும்பாதுகாத்தலுங்குதிரையு மிகுதியுஞ்செல்வமும்பெருமையுங்கறுப்பும் விரைவுமென்றேயொருபதுபெயரோ) புரியேவிரும்பலுஞ்செய்தலும்புரமுங் கயிறுஞ்சங்குங்கட்டுமறுபெயர் ) பரிதலென்பதுவேயறுத்தலுமிரங்கலு மன்புமெனவேயாகுமுப்பெயரோ ) வரியேசுணங்குமெழுத்துமொழுக்கமும் பாட்டுநீளமுமிறையுநெல்லும் வடிவுந்தியுங்கடலுமீரைம்பேர். *அ*

சரிகரவளைவழிப்பேர்சராவமேயகல்சலா - - - - கை
கரியவன்சனியின்பேராங்கண்ணனிந்திரனுமா - - - மே
பரிகமேகிடங்குமேடைபகர்மதில்கணையநாற்பே - - - ர்
கரில்குற்றங்காழ்த்தலும்பேர்காதைசொற்கதையுமா - மே.

இதன்பொருள்

(சரியென்பது)கைவளை - வழிக்கும்பெயர்.(சராவமென்பது)அகல் - சலாகைக்கும்பெயர்.(கரியவனென்பது)சனி - திருமால் - தேவேந்திரனுக்கும்பெயர். (பரிகமென்பது) அகழி - மதிலுண்மேடை - மதில் - வளைதடிக்கும்பெயர்.(கரிலென்பது)குற்றம் - உறைத்தலுக்கும்பெயர். (காதையென்பது)சொல் - கதைக்கும்பெயரொன்றவாறு.]

இதற்குமேற்கோள்

சரியேயொப்புங்கையிடுவளையும் வழியுமெனவேவைக்குமுப்பெயரோ) சராவமென்பதுசலாகையுந்தகழியும்) கரியவனேசனிமாயனிந்திரனும்)பரிகமென்பதுகணையமுமதிலுங் கிடங்குமேடையுங்கிளக்குநாற்பெயரோ ) கரிலேகுற்றமுங்காழ்த்தலுங்கொடுமையும்)காதையேகதைசொல்லிருபெயரோ. *கூ*

சூரியேஎருமையாற்றன்முறைபடுநெரிவுமா - - மே
வாரிநீர்கதவுவெள்ளமதில்கடல்வருவாய்வட் - - - டை
நாரிபன்னடைபெண்ணேநறவுவின்னாணிநாற்பே - - ர்
பாரியோர்வள்ளல்கட்டில்பாரிகட்டேசுமுந்நீ - - - - ர்.

இதன்பொருள்

(சூரியென்பது) எருது - எருமை - வலிமை - பழமை - பெருமை - நெரிவுக்கும்பெயர். (வாரியென்பது) நீர் - கதவு - வெள்ளம் - மதில் - கடல் - பொழிவு - வழிக்கும்பெயர். (நாரியென்பது) பன்னடை - பெண் - வாசனை - வின்னாணிக்கும்பெயர். (பாரியென்பது) கடையெழுவள்ளலிலொருவன் - கட்டில் - மனைவி - கள் - ஆடை - கடலுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

சூரியென்பதுவேயாற்றலுமெருமையும் பெருமையுடனேயே றுநெரிவுந் தொன்மையுமெனவேசொல்லுமறுபெயர் )வாரிதானேமடையுங்கதவும் வெள்ளமுநீருமதிலுங்கடலும் பகுதியும் வாய்தலும்வழியுநூலும் வருவாயுடனேயிடமுந்தகையுமெனப் பதின்மூன்றென்றிசைக்கப்படுமே ) நாரியேபன்னடையும்பெண்ணு நறவும்வில்லிடுநாணியுநாற்பேர் )பாரியென்பதுகட்டிலு மனைவியுங் கடலுங்கள்ளுநல்லபுடைவையு மோர்வள்ளலுமென் றோதுமறுபெயர். *ம*

அருகமேலேசுருங்கல்சார்தலமுதமேசுதைநீர்மோக்க - - ம்
பொருளேசொற்பொருள்பல்பண்டம்பொன்பண்புபிள்ளைவா
குருநிறமோர்நோய்தேயங்குரவன்பாரம்வியாழ - [ய்மை
மருணமென்பதுமான்செம்மையாடெலுமிச்சைநாற்பே - ர்.

இதன்பொருள்

(அருகமென்பது)குறைதல் - சார்தலுக்கும்பெயர். (அமுதமென்பது) அமிர்தம் - நீர் - மோட்சத்துக்கும்பெயர். (பொருளென்பது) சொற்பொருள் - பலபண்டம் - பொன் - குணம் - மகன் - உண்மைக்கும்பெயர்.(குருவென்பது) நிறம் - ஓர்வியாதி - ஓர்தேயம் - ஆசான் - பாரம் - பிரகற்பதிக்கும்பெயர். (அருணமென்பது) மான் - சிவப்பு - ஆடு - எலுமிச்சைக்கும்பெயரொன்

றவாறு.] இதற்குமேற்கோள்
அருகருனேசுருங்கலுஞ்சார்தலும்)அமுதம்பாலுமுத்தியுநீரு ம
வியுமேகமும்பெருமையுமாகும்)பொருளேதலைமையும்பொன்
னும்பண்பும் பலபண்டமுஞ்சொற்பொருளும்பிள்ளையும் வாய்
மையுமெனவேமதிக்குமேழ்பெயரோ )குருவேபெருமையும்வி
யாதியுநிறமு மிருமாத்திரையும்வியாழமும்பாரமு மாசானு நீ
தேயமுமாகுமெண்பெயரோ ) அருணமென்பதெலுமிச்சுட
னே மானுஞ்சிவப்பும்வருடையுநாற்பேர். *௰க*
முருகுகள்ளிளமைநாற்றமுருகவேள்விழாவனப் - - - பா
மருமானேமருமகன்பேர்வழித்தோன்றற்பெருமா - மே
யிருசுபண்டியுளிரும்புசெவ்வையென்றிருபேரொன் - - ப
கருமையேபெருமையாகுங்கறுப்பொடுவலியுமா - - மே.
இதன்பொருள்
(முருகென்பது)கள் - இளமை - வாசனே - முருகன் - திருவிழா -
அழகுக்கும்பெயர். ( மருமானென்பது ) மருமகன் - மகனுக்
கும்பெயர். ( இருசென்பது ) வண்டியுளிரும்பு - செவ்வைக்கும்
பெயர். (கருமையென்பது) பெருமை - கறுப்பு - வலிமைக்கும்
பெயரொன்றவாறு.] இதற்குமேற்கோள்
முருகென்பதுவேயிளமையுநாற்றமுங் குகனும்விழாவும்வனப்
புமகிலும் மெழுச்சியுநறையும்வெறியாட்டாளனு மெலுமிச்
செனவுமொருபதுபெயரோ ) மருமானேமருமகனுமகனும் ) இ
ருசென்பதுவேபண்டியுளிரும்புஞ் செவ்வையுமென்றேதெரிக்
குமிருபெயர். ) கருமையென்பதுவேபெருமையுங்கறுப்பும் வ
லியுநஞ்சுமருவுநாற்பெயரோ. *௰உ*
கிருத்திமந்தோலேபண்ணல்கெட்டபொய்விட்டபூத - - ம்
விருத்தியேதொழிலிலாபம்விரிபொருள்வளர்ச்சிக்கும்பே - ர்
துருத்தியாற்றிடைக்குறைப்பேர்தோலுமாந்துட்டைக்கும் பே
ராத்தமேயிரத்தஞ்செம்மையரக்கொடுற்பலங்கடம் - - பு.
இதன்பொருள்
(கிருத்திமமென்பது)தோல் - செய்தல் - பொய் - பூதகணத்துக்
கும்பெயர்.(விருத்தியென்பது)தொழிலிலாபம் - விரிபொருள் -

வளர்தலுக்கும்பெயர். (துருத்தியென்பது) ஆற்றிடைக்குறை - தோல் - வசவிக்கும்பெயர். (அரத்தமென்பது) உதிரம் - சிவப்பு - அரக்கு - செங்குவளை - கடப்பமரத்துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

கிருத்திமமென்பதுபொய்யும்பூதமும் பண்ணலுந்தோலும்பக ருநாற்பேரொ) விருத்தியொழுக்கமுந்தொழிலிலாபமு முரிய பொருளுமோருரையும்வளர்ச்சியு மடிமையுமெனவேயறைய லாகும்) துருத்தியாற்றிடைக்குறையுந்தோலுந் துட்டையுமிலங் கையுந்துருத்தியுமாகும்) அரத்தமேசெவ்வரத்தமும்பவளமு மரக்குஞ்சிவப்புமிரத்தமுங்கடம்பும் பொன்னுமுற்பலமும்போ ற்றுமெண்பேரோ. *௰௩*

சீர்செல்வந்தாளவொற்றுச்சீர்த்திகாத்தண்டேபார - - ந்
தார்கொடிப்படைபூத்தண்டுதாமங்கிண்கிணியின்கோ - வை
சூவொன்பநோயேயச்சமஞ்சாமையணங்குஞ்சொல்லு - - ங்
கார்நீர்வெள்ளாடுமேகங்கருப்பிருண்மாரிக்கால - - - ம்.

இதன்பொருள்

(சீயென்பது) செல்வம் - தாளவொற்று - மிகுபுகழ் - காவடித்தண்டு - கனத்துக்கும்பெயர். (தாவென்பது) படைமுன்னணி - மலர் - சேனை - பூமாலை - கிண்கிணிமாலைக்கும்பெயர். (சூவென்பது) வியாதி - அஞ்சுதல் - அஞ்சுதலின்மை - தெய்வப்பெண்ணுக்கும்பெயர். (காவென்பது) நீர் - வெள்ளாடு - மேகம் - கருமை - இருள் - கார்காலத்துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

சீயென்பதுவேபலவகையியங்கலுஞ் செம்பொருளுடன்காத்தண்டுஞ்செல்வமுந் தாளவொற்றுஞ்சீர்த்தியுமொல்கலும் பாரமும்புகழுமழகுமோசையு மோதியபெயரிவையாம்பதினொன்றே) தாரோகிண்கிணிக்கோவையுமொழுங்கு மாவினணியும்பூவுமாலையுங் கொடிப்படையுடனேகுடையுமேழ்பெயரோ) சூரோயச்சமுமணங்குமஞ்சாமையுந் தெய்வமுநோயும்வஞ்சமுமறுபெயர்) காரோகொச்சையுமிருளுங்கருமையு நீருமுகிலுமாரிக்காலமுங் கருங்குரங்குடனேர்நெல்லுமெண்பெயரோ. *௰௪*

ஆர்கூர்மையாத்திதேரினந்துருவாணிக்கும்பே - - - ர்
பிரொன்பமுலையிற்பாலும்பிரிக்கொடுபசலைக்கும்பே - - ர்
வாரொன்பநெடுமைகச்சுமன்னுநீர்நேர்மைநாற்பே - - ர்
நேர்சமமீதல்பாதிநெடிலுடன்பாடுநட்ப - - - - ம்.

இதன்பொருள்

(ஆரென்பது)கூர்மை - ஆத்திமரம் - தேரினகத்திற்செறிகதிருக்குப்பெயர். (பிரென்பது) முலைப்பால் - பிரிக்கு - துன்பத்தால் வேறுபட்டநிறத்துக்கும்பெயர். (வாரென்பது) நீளம் - முலைக்கச்சு - நீர் - நேர்மைக்கும்பெயர். (நேரென்பது)ஒப்பு - கொடுத்தல் - பாதி - நீளம் - உடன்பாடு - நட்பத்துக்கும்பெயரென்றவாறு.]

இதற்குமேற்கோள்

ஆரென்பதுவேயாத்தியுங்கூர்மையும் பாகும்பூமியுஞ்சோதியுநிறைவுந் தேராழியுட்செறியுறுப்புமேம்பேராம்) பிரொன்பதுவேபிரிக்கும்பசலையு முலைப்பாலெனவுமொழியுமுப்பெயரே) வாரோநெடுமையுங்கச்சும்புயலு நீருநேர்மையுமாகுமைம்பெயரே) நேர்தலைப்படலுஞ்சமமுமீதலும் பாதியுநெடிலுமொப்புநட்பமு முடன்பாடுநேருமஞ்சமுந்தனியு மிகுதியுமெனவேவிளம்பலாகும். *ருரு*

அருணன்சூரியன்றேர்ப்பாகனுதித்தன்புதன்முப்பே - ரோ
வருணமேருலநீராகுமகனென்பசிறந்தோன்மைந்த - - ன்
றரணிபாரிரவிவெற்பாந்தையல்பெண்ணழகுமாகு - - - ங்
கரிணிமேயமுழையும்வெற்புங்களிற்றெருடுபிடியுங்காட்டு - ம்.

இதன்பொருள்

(அருணனென்பது) சூரியன்றேர்ப்பாகன் - சூரியன் - புதனுக்கும்பெயர். (வருணமென்பது) சலம் - சலத்துக்கும்பெயர். (மகனென்பது) சிறப்புற்றோன் - புத்திரனுக்கும்பெயர். (தரணியென்பது) பூமி - சூரியன் - மலைக்கும்பெயர். (தையலென்பது) பெண் - அழகுக்குப்பெயர். (கரிணியென்பது) மலையினுட்குகை - மலை - யானை - பெண்யானைக்கும்பெயரென்றவாறு.

இதற்குமேற்கோள்

அருணனென்பதிரவியும்புதனு மருக்கன்றேர்ப்பாகனுமுப்பே

ரோ ) வருணமேநீர்குலமிருபெயரோ ) மகன்மைந் தனுஞ்சிறந் தோனுமாகும் )தரணியென்பதுமலையும்பூமியு மிரவியுமெனவே யிசைக்குமுப்பெயரோ ) தையல்பெண்ணுமழகுமாகும் ) கரிணி தானேமலையுமுழையும் பிடியுந்தந்தியும்பேசுநாற்பே ரோ.

*௰௬*

மாரியெவிளிவுகள்ளுவடுகிநோய்மேகமைம் - - - பே
ரோரியாண்மயிரோர்வள்ளன்முதுநரிமுசுவென்ருேது - ங்
காரியோர்வள்ளலையன்கடுச்சனிவடுகன்காக் - - - - கை
தூரியமிடபமாடைதுந்துமியெழுதுங்கோ - - - - லே.

இதன்பொருள்

(மாரியேன்பது) சாவு - கள் - காடுகாள் - வியாதி - மேகத்துக்கும்பெயர். ( ஓரியென்பது ) குடுமி - ஒருவள்ளல் - கிழநரி - ஆண்முசுவிற்கும்பெயர் . ( காரியென்பது ) கடையெழுவள்ளலிலொருவன் -ஐயனார் - விடம்-சனி - வயிரவன் - காக்கைக்கும்பெயர். (தூரியமென்பது) எருது - வஸ்திரம் - முரசம் - எழுதுகோலுக்கும்பெயரொன்றவாறு.] இதற்குமேற்கோள்

மாரிதானேமேகமும்வியாதியுங் கள்ளும்விளிவுமோடியுமைம் பேர்) ஓரியேமுதுநரியுபகாரிவள்ள லாண்மயிர்முசுவென்றறையுமைம்பெயரோ ) காரியோர்வள்ளலுங்கருமையுஞ்சனியும் விடமுங்காக்கையும்வடுகனுங்களருஞ் சாத்தனுடனேகருமஞ்செய்யிடனு முதுநிலமுங்கீழ்மக்களுங்கரிய குருவியுமெனப்பன்னிருபெயராகும் ) தூரியமேநல்லாடையுமீயமு மெழுதிடுகோலு முரசுமவிட்டமு மெருதும்வாச்சியமுமெறிபடையுமெண்பேர்.

*௰௭*

பிரமமேவேதம்வேள்விமந்திரம்பிரமன்மா - - - லோ
டிரவிதீமுனிவர்முத்தியீசனம்புலிபன்ஞென் - - - றே
யரசனேவியாழமன்னுமம்பணந்தோணியா - - - மை
குரல்கதிர்சிறகுமாதர்கூந்தல்யாழ்நரம்புநாற்பே - - - ர்.

இதன்பொருள்

(பிரமமென்பது)வெதம் - யாகம - மந்திரம் -பிரமதேவன் - திருமால் - சூரியன் - நெருப்பு - இருடிகள் - மோட்சம் - சிவன் -

சந்திரனுக்கும்பெயர். (அரசனென்பது) பிரகஸ்பதி - இராசனுக்கும்பெயர். (அம்பணமென்பது) தோணி - ஆமைக்கும்பெயர். (குரலென்பது) பயிர்க்கதிர் - இறகு - பெண்மயிர் - யாழினரம்புக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

பிரமமாயனும்பிரமனுஞ்சிவனு மிரவியுநிலவுந்தீயும்வேதமு ஞானமுமுத்திப்பதமும்வேள்விய மந்திரமும்வேதாந்தத்துடனே யிருடிகளெனவும்பதின்மூப்பேரோ) அரசனென்பது நிருப னும்வியாழமும்) அம்பணமேதுலாக்கோலும்வாயு மரக்கலமுடனே தூம்பும்வாழையு மாமையுமெனவேயறுபெயராகும்)குரலேமிடறுமெழுத்துங்கதிருஞ் சிறகும்பெண்பான்மயிருந்திணையும் யாழினரம்பும்பாதிரியுமெண்பேர். *௰அ*

தோரைநெல்விகற்பமூங்கிலரிசிகைவரைசொன்மூப் - பே
ராரையேமதில்புற்பாயாமகலுளேபரப்பூர்நா - - - டே
யோரையேமாதர்கூடிவிளையாடலுடனிரா - - - - சி
தாரைகண்மழைநேரோடருரகைவழியேகூர் - - - மை.

இதன்பொருள்

(தோரையென்பது) ஓர்வகைநெல் - மூங்கிலரிசி - கையிறைக்கும்பெயர். (ஆரையென்பது) மதில் - புற்பாய்க்கும்பெயர். (அகலுளென்பது) அகலம் - ஊர் - நாட்டுக்கும்பெயர். (ஓரையென்பது) மகளிர்விளையாட்டு - இராசிப்பொதுவிற்கும்பெயர்.(தாரையென்பது) கண் - மழை - நேரோடல் - நட்சத்திரம் - வழி - கூர்மைக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

தோரைகைவரையுநெல்லின்விகற்பமு மூங்கிலரிசியுமொழியுமுப்பெயரோ) ஆரையேபுற்பாயும்புரிசையு மாரையுமெனவேயாகுமுப்பெயரோ) அகலுளென்பதுபரப்புநாடு மூருமெனவேயுரைக்குமுப்பெயரோ) ஓரையென்பதுமாதராடலுங் கலன்களுங்கூட்டமுமிராசியுநாற்பேர்) தாரையேநேரோட்டமுமழையும் விழியும்வழியுங்காளமுங்கூர்மையு முடுவுமென்றேயோதுமேழ்பெயரோ. *௰கூ*

ஊர்திதேர்விமானம்பாண்டிலும்பலேசிவிகைபாய் - - மா
வார்வமேநரகமன்பாமகலமார்பொடுவிசா - - - - ல
மார்வலர்கொண்கரன்பரணுவென்பதுயிர்நுண்மைப் - பே
ரார்தலேநிறைதலுண்டலகளந்தான்மிடாநற்று - - - ழி.

இதன்பொருள்

(ஊர்தியென்பது) தேர் - விமானம் - பண்டி - யானை - தண்டிகை - குதிரைக்கும்பெயர். (ஆர்வமென்பது) நரகம் - அன்புக்கும்பெயர். (அகலமென்பது) மார்பு - விரிவுக்கும்பெயர். (ஆர்வலனென்பது) தலைவர் - அன்புடையோருக்கும்பெயர். (அணுவென்பது) சீவன் - நுட்பத்துக்கும்பெயர். (ஆர்தலென்பது) நிறைதல் - புசித்தலுக்கும்பெயர். (அகளமென்பது) மிடா - சாடிக்கும் பெயரொன்றவாறு.] இதற்குமேற்கோள்

ஊர்தியேபரிசிவிகைபண்டியோ டியானைவிமானந்தேரொனவாறே) ஆர்வந்தானேயன்பும்வில்லு நரகமுமெனவேநவிலுமுப்பெயரே) அகலமென்பதுவிசாலமுநிலமும் விரித்துரையுமார்பும்விளம்புநாற்பெயரே) ஆர்வலனென்பதன்பினருடனே கொண்கனெனவுங்கூறுமிருபெயர்) அணுவேயுயிருநுண்மையுமிருபெயர்) ஆர்தலென்பதுநிறைதலுமுண்டலுங் குடித்தலுமெனவேகூறுமுப்பெயரே) அகளமென்பதுமிடாவுந்தாழி யும்.

✻௨௰✻

பாரமேகவசந்தோணிபல்லணம்பொறையிருே - - டு
நீருறுகரைவன்பாரநிறைதரைநிகழ்த்துமெண்பே - - ர்
சூரனேயிரவிதீநாய்துகளென்பகுற்றந்தூளா - - - ஞ்
சாரங்கமானும்வண்டுஞ்சாதகப்புள்ளுமா - - - மே.

இதன்பொருள

(பாரமென்பது) கவசம் - தோணி - குதிரைச்சேணம் - பொறுமை - நீர்க்கரை - கனம் - ஓர்நிறை - பூமிக்கும்பெயர். (சூரனென்பது) சூரியன் - நெருப்பு - நாய்க்கும்பெயர். (துகளென்பது) குற்றம் - புழுதிக்கும்பெயர். (சாரங்கமென்பது) மான் - வண்டு - சாதகப்பட்சிக்கும்பெயரொன்றவா று.

இதற்குமேற்கோள்

பாரமென்பதுகலசமும்பொறையுங் கலணையும்புவியுநிறையும் பாரமு நீரின்கரையும்விளையாட்டுடனே மரக்கலமெனவுமருவு மொன்பான்பேர் ) சூரனென்பதுவேயிரவியுந்தீயு நாயம்வீர னுஞ்சூரனுமைம்பேர் ) ருகளேகுற்றமுந்தூளுமாகும் ) சாரங்க ஞ்சாதகப்புள்ளும்வண்டு மானுமெனவேவழங்கலாகும். ※உக※

ஆரல்கார்த்திகைநாள்செவ்வாயரணுமுப்பொருமீனுத்பே - ர்
சாரமேலமருதயாழினிசையொடுசைலப்பக் - - - - க
மூரமேலநகைபல்சோறுமுரம்பென்பமேடுபா - - - றை
கூரல்புட்சிறகுமாதரோதியுமிருபேர்கூறு - - - - ம்.

இதன்பொருள்

( ஆரலென்பது ) கார்த்திகைநட்சத்திரம் - அங்காரகன் - மதில் - ஆரான்மீனுக்கும்பெயர். ( சாரலென்பது ) மருதயாழினோரி சை - மலைப்பக்கத்துக்கும்பெயர். ( மூரலென்பது ) நகைப்பு - பல் - சோற்றுக்கும்பெயர். ( முரம்பென்பது ) மேடு - பாறைக் கும்பெயர். ( கூரலென்பது ) பறவையினிறகு - பெண்மயிருக் கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

ஆரல்செவ்வாய்மதிலுங்கார்த்திகை நாளுமோர்மீனுநாட்டுநாற் பேரோ)சாரலென்பதுமலையின்பக்கமு மருதயாழ்ஞோரிசையுமி ருபெயர்)மூரலென்பதெயிறுஞ்சோறு நகையுஞ்சொல்லுநாட் டுநாற்பேரோ)முரம்பேபரலடுத்துயர்ந்தநிலமு மேடும்பாறை யுமேமுப்பெயரோ)கூரலென்பதுமாதர்மயிரையும் புள்ளினி றகையும்போற்றுமிருபெயர். ※உஉ※

சாரிகைபூவைசுங்கஞ்சுழல்காற்றுத்தாளுமாகு - - - ந்
காரிகையழகுபெண்ணேகவித்துறையோர்நாற்பேபே - ர்
வாரணஞ்சவசங்கோழிதடைசங்குவாரிகைம் - - - மா
புருவமுதுமைமுன்புகழ்க்கென்றும்புகலலா - - - மே.

இதன்பொருள்

( சாரிகையென்பது ) நாகணவாய்ப்புள் - சுங்கம் - சுழல்காற்றுக் கும்பெயர். ( காரிகையென்பது ) அழகு - பெண் - கட்டளைக்க

லித்துறை - ஓர்யாப்பிலக்கணநூலுக்கும்பெயர். (வாரணமென்பது) கவசம் - கோழி - தடுத்தல் - சங்கு - கடல் - யானைக்கும் பெயர். (பூருவமென்பது) பழமை - முன்பு - கீழ்த்திசைக்கும் பெயரொன்றவாறு.] இதற்குமேற்கோள்

சாரிகையேசுழல்காற்றும்பூவையுஞ் சுங்கமுமென்றேசொல்லு முப்பெயரோ) காரிகைதான்கட்டளைக்கலித் துறையு மழகும் பெண்ணுமோர்நூலுநாற்பெயரோ) வாரணந்தானேயானையுங்கடலுங் கோழியுஞ்சங்குந்தடையுங்கவசமும் பன்றியுமென் மத்தமுமெண்பெயரோ) பூருவமென்பதுமுதுமையுங்கிழக்கு முன்பு மெனவேமுப்பெயர்சொல்லும். ※உ௩※

ஏரழகுமூழ்பெற்றப்பேரிராசிதானேனைகூட்ட - - - ம்
பாருலகந்தேர்ப்பாராம்பயல்பள்ளம்பாதிசிற்று - - - ள்
போரமர்சதயத்தோடுபுகலுநென்முதலாஞ்சும் - - மை
பிருவேயச்சமுற்றோன்பெயரொடுபுருவமா - - - மே.

இதன்பொருள்

(ஏரென்பது) அழகு - உழுமாட்டிற்கும்பெயர். (இராசியென்பது) இராசிப்பொது - கூட்டத்துக்கும்பெயர். (பாரென்பது) பூமி - தேரின்பரப்புக்கும்பெயர். (பயலென்பது) பள்ளம் - பாதி - சிறுபையனுக்கும்பெயர். (போரென்பது) யுத்தம் - சதயநட்சத்திரம் - நென்முதலியசுமைக்கும்பெயர். (பிருவென்பது) பயமுற்றோன் - புருவத்துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

ஏரேயழகுமுழுபெற்றமுமாம்) இராசியோனையுங்கூட்டமுமாகும்) பாரென்பதுவேபுத்தனும்பூமியுந் தேரின்பரப்புங்கல்லின் பரப்பு மறையோரெனவும்வைக்குமைம்பெயரோ) பயலென்பதுவேபாதியும்பள்ளமுஞ் சிற்றாளெனவுஞ்செப்புமுப்பெயரோ) (பி - ம்) சமரமுநென்முதற்சுமையுஞ்சதயமும் புகலுங்காலப் போரெனலாகும்) பிருவென்பதஞ்சினோன்பெயரும் புருவமுமெனவேபோற்றுமிருபெயர். ※உ௪※

அருப்பமாரிடநோய்காடாமரணுடனாருமப்பே - - ர்
மரக்காலாயிலியஞ்சோதிமாயவனுடன்முப்பே - - - ர்

நிரப்பென்பமிடிநிறைப்பேர்நிறையழியாமைநீர்ச் - - சா
லருக்கமேயரண்கத்தூரிகுங்குமமரமுஞ்சொல் - - லும்.

இதன்பொருள்

(அருப்பமென்பது) வழுக்குநிலம் - வியாதி - காடு - கோட்டை - மருதநிலத்தாருக்கும்பெயர். (மரக்காலென்பது) ஆயிலியநட்சத்திரம் - சோதிநட்சத்திரம் - திருமால்கூத்துக்கும்பெயர். (நிரப்பென்பது) தரித்திரம் - நிரப்புதலுக்கும்பெயர். (நிறையென்பது) அழிவின்மை - நீர்ச்சாலுக்கும்பெயர். (அருக்கமென்பது) மலைமேற்கோட்டை - கத்தூரிமிருகம் - குங்குமமரத்துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

அருப்பமாரிடமுமருநோயுங் காடுமரணுங்கருதுமைம்பெயரோ (மரக்காலேயாயிலியநாளுஞ் சோதிநாளுமாயவனுடலும் வள்ளமெனவும்வழங்குநார்மேடோ) நிரப்பென்பதுமிடிநிறைவெனவிருபெயர்) நிறையேயாசையுமழியாநிலைமையுந் துலாமுநீர்ச்சாலுமுணர்வுமைம்பெயரோ) அருக்கமேகுங்குமமுமரணுங் கலைகளுமங்காடுங்கத்தூரியுமைம்பெயர். *உரு*

குருதியேசிவப்பிரத்தங்குசனெனக்கூறுமுப்பே - - - ர்
பரிதியேயூர்கோள்வட்டம்பாற்கரனேமிநாற்பே - - - ர்
சுருதியேயொலிவேதப்பேர்சுரமருநெறிகான்மார்க் - க
மிரதிபித்தளைபெண்யானைமதன்றேவியிச்சைநாற்பே - ர்.

இதன்பொருள்

(குருதியென்பது) சிவப்பு - உதிரம் - செவ்வாய்க்கும்பெயர். (பரிதியென்பது) சூரியசந்திரரைச்சூழத்தோன்றும்வட்டம் - வட்டவடிவு - சூரியன் - சக்கராயதத்துக்கும்பெயர். (சுருதியென்பது) சத்தம் - வேதத்திற்கும்பெயர். (சுரமென்பது) அரியவழி - காடு - வழிக்கும்பெயர். (இரதியென்பது) பித்தளை - பெண்யானை - இரதிதேவி - ஆசைக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

குருதிதானேயுதிரமுஞ்சிவப்புஞ் செவ்வாயெனவுஞ்செப்புமுப்பெயரோ) பரிதியேபரிவேடமுமிரவியும் வட்டமுமொளியும்பக

ம்பொன்னுடனே நேமியுமெனவேநிகழ்த்துமறுபெயர்) சுருதி யேயொலிவேதமிருபெயர் )சுரமேவழியுங்காடுஞ்சுரமு) மருநெறியுடனுமாகுநாற்பேரோ ) இரதியென்பதுபித்தளைகாந்தன் மன்மதன்றேவிபெண்யானைநாற்பேரோ. *உசு*

புரைகுற்றமுவமையில்லம்புழையுயர்ச்சியுமைம்பே - ரோ
விரைமணஞ்சாந்து தூபம்வீரைதான்றுயரம்வா - - - ரி
நரைவெள்ளையிவுளிவெண்மைநந்திநற்சவரிநா - - - ரை
சுரைகள்ளான்முலைதுளைப்பேர் துரும்பலேதிமிறதுள்ள - ல்.

இதன்பொருள்

(புரையென்பது ) குற்றம் - ஒப்பு - வீடு - உட்டுளை - உயரத்துக்கும்பெயர். (விரையென்பது) வாசனை - கலவைச்சாந்து - நறும்புகைக்கும்பெயர். ( வீரையென்பது ) துன்பம் - கடலுக்கும்பெயர். ( நரையென்பது ) வெள்ளைக்குதிரை - வெண்மை - இடபம் - சாமரம் - நாரைப்பட்சிக்கும்பெயர். ( சுரையென்பது ) கள் - பசுவின்முலை - உட்டுளைக்கும்பெயர். (துரும்பலென்பது) திமிறல் - துள்ளலுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

புரையேயில்லமும்பழுதுங்குற்றமுந் துளையுமுயர்வுமுவமையுமாகும் ) விரையேமணமுஞ்சாந்துந்தூபமும் வித்துமெனவேவிரிக்குநாற்பெயரோ ) வீரையென்பதுகடலுந்துயரமு மோர்மரமெனவுமுரைக்குமுப்பெயரோ ) நரைவெண்பரியும் வெண்மையுங்கவரியு நாரையுமேறுநவிலலாகும் ) சுரையென்பதுவே பசுவின்முலையு மம்புத்தலையும்பசுவுங்கள்ளுந் துளையுஞ்சுரையுஞ்சொல்லுமறுபெயர் ) துரும்பறுள்ளலுந்திமிறலுமிருபெயர். *உஎ*

மருளென்பகுறிஞ்சியாழின்றிறத்தொடுமயக்கமும் - - பே
சிருளொருநரகமையலிருளொடுகருமையென் - - - - ப
பொருநர்போர்த்தலைவர்கூத்தர்புரவலர்பாணர்வீ - - - ர
ரிருபிறப்பெயிறும்பார்ப்புமித்துவும்புள்ளுமா - - மே.

இதன்பொருள்

(மருளென்பது ) குறிஞ்சியாழ்த்திறம் - மயக்கத்துக்கும்பெயர்.

(இருளென்பது) ஒருவகைநரகம் - மயக்கம் - இருட்டு - கறுப்புக்கும்பெயர். (பொருநரொன்பது) படைத்தலைவர் - நாடகர் - அரசர் - புகழ்ந்துபாடுவோர் - படைவீரருக்கும்பெயர். (இருபிறப்பென்பது) பல் - பிராமணர் - சந்திரன் - பறவைக்கும்பெயரொன்றவாறு.]

இதற்குமேற்கோள்

மருளேமயலுங்குறிஞ்சியாழ்த்திறனும் பேயுமெனவேபேசுமப்பெயரே)இருளேகறுப்புநிசியும்யானையு மையலுநரகமும்வழங்கலராகும்) பொருநரோகூத்தரும்போர்த்தலைவரும் பாணரும் வீரருமன்னருமைம்பேர்)இருபிறப்பெயிறுமம்புலியும்பறவையும் பார்ப்பும்புகரும்பகரலாமே. *உஅ*

மருதமேயொருமரஞ்செய்மருதநன்னிலப்பாடற் - - யே
ரொருவையேகொறுக்கைகோணகழுகுசெம்பிரத்தமென் - ப
தருமராசன்றான்புத்தன்சண்டனேடருகன்றனு - - - ங்
கரியென்பதிருந்தைசான்றுகறையடிசேகுநாற்பே - - ர்.

இதன்பொருள்

(மருதமென்பது) ஓர்மரம் - வயல் - மருநிலத்திராகத்துக்கும்பெயர். (எருவையென்பது) கொறுக்கை - கோரை - கழுகு - செம்பு - இரத்தத்துக்கும்பெயர். (தருமராசனென்பது) புத்தன் - இயமன் - அருகனுக்கும்பெயர். (கரியென்பது) கரி - சாட்சி - யானை - மரவயிரத்துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

மருதமோர்நிலமுமத்நிலப்பாடலு மருதமரமும்வயலுநாற்பெயரோ)எருவைசெம்புங்கழுகுங்கழுதையுங் கோரையுமுதிரமுங் கொறுக்கையுடனே குஞ்சரமெனவுங்கூறுமேழ்பெயரோ) தருமராசன்றானருகனுந்தருமனும் புத்தனுமெனவேபோற்றுமுப்பெயரோ) கரியேயானையுஞ்சாட்சியுங்கரியுஞ் சேகுமெனவே செப்புநாற்பெயரோ. *உகூ*

கருவிபல்லியந்துணைக்காரணங்கள்யாழ்கவசமீட்ட - - - ம்
பொருபடைக்கலந்தொடர்ச்சிபுயல்பலவினைப்பேர்கூட்ட ம்
பரியின்பல்லணமேயாடைகசைபதின்மூப்பேர்பன்னு - ஞ்
சுரிகையேகவசம்வாளாந்துவைபின்னுக்கிறைச்சியோ - சை.

இதன்பொருள்
(கருவியென்பது) வாச்சியம் - உபகரணங்கள் - வீணை - கவசம் - ஈட்டம் - ஆயுதம் - தொடர்பு - மேகம் - பலவினைப்பேர் - கூட்டம் - குதிரைச்சேணம் - வஸ்திரம் - குதிரைச்சம்மட்டிக்கும்பெயர். (சுரிகையென்பது) கவசம் - உடைவாளுக்கும்பெயர். (துவையென்பது) பிண்ணாக்கு - தசை - சத்தத்திற்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்
கருவியென்பதுபலவினைப்பெயரு மீட்டமுந்தொடர்புந்துணைக்காரணமு முகிலுமாயுதமும்யாழுங்கலணையுங் கசையும்பல்லியமுங்கவசமுந்தொகுதியு மாவரணமுமெனவரம்பதின்மூன்றே) சுரிகைதானேகவசமுஞ்சுரிகையும்) துவைபருகுவனவுமிறைச்சியுமோசையும் பிண்ணாக்குடனேபுளிங்கறியுமைம்பேர்.

*௩௰*

குருகுபுள்ளிளமைநாரைகொல்லுலைமூக்குக்கோ - - - ழி
சரிவெள்ளைமூலநாள்வாசந்தியொன்பான்பேர்சாற் - - று
மூரசேயுத்திரட்டாதிப்பேர்பறையென்றுமொழியலா - மே
தரளமேயுருட்சிமுத்தாஞ்சார்வென்பதிடமும்பற்று - - ம்.

இதன்பொருள்
(குருகென்பது) பறவைப்பொது - இளமை - நாரைப்பட்சி - கொல்லனுலைமூக்கு - கோழி - கைவளை - வெண்மை - மூலநட்சத்திரம் - குருக்கத்திக்கொடிக்கும்பெயர். (மூரசென்பது) உத்திரட்டாதிநட்சத்திரம் - வாச்சியப்பொதுவிற்கும்பெயர். (தரளமென்பது) உருண்டவடிவு - முத்துக்கும்பெயர். (சார்வென்பது) இடம் - பற்றுதலுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்
குருகேநாரையுங்கோழியும்புள்ளு மூலநாளும்வெண்மையுமிளமையுங் கொல்லனுலைமூக்கொடுகுருக்கத்தியுங் கைவளையெனவுங்கருதுமொன்பான்பேர்) மூரசேயுத்திரட்டாதியும்பறையும் பேரிகையெனவும்பேசுமுப்பெயரே ) தரளந்தானேயுருட்சியுமுத்தும்) சார்வேயிடமும்பற்றுஞ்சார்வும்.

*௩௧*

மூரண்வலிபகையாமென்பமொய்ம்புதோள்வலியுமா - கு

முனையென்பகிளவிதேய்வாமுவர்த்தந்தியிளையோன்பௌ - வ்
ஞெரலொலிவிளைவுமாகுநிதியிருநிதிபொன்னென் - - ய
வுருநிறம்வடிவட்டைப்பேரோதனஞ்சோறேயுண் - - - டி.

இதன்பொருள்

(முரணென்பது) வலிமை - பகைக்கும்பெயர். (மொய்ம்பென்பது) புயம் - வலிமைக்கும்பெயர். (உனையென்பது) சொல் - தேய்தலுக்கும்பெயர். (உவாவென்பது) யானை - இளையோன் - பூரணைக்கும்பெயர். (ஞெரலென்பது) சத்தம் - சீக்கிரத்துக்கும்பெயர். (நிதியென்பது) இருவகைநிதி - பொன்னுக்கும்பெயர். (உருவென்பது) நிறம் - வடிவு - அட்டைக்கும்பெயர். (ஓதனமென்பது) சோறு - உணவுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

முரணேவலியும்பகையுமிருபெயர்) மொய்ம்பேதோளும்வலியுமிருபெயர்) உனையேகிளவிதேய்வெனவிருபெயர்) உவாவென்பதுவேயானையுங்கடலும் பூரணையுடனிளையோனுநாற்பேரே) ஞெரலேயொலியும்விளைவுமிருபெயர்) நிதியிருநிதியும்பொன்னும்வைப்புங் கதையுமெனவேகழறலாகும்) உருவேயட்டையும் வடிவுநிறமு நோயுடனுள்ளுநுவலுமைம்பெயரே) ஓதனந்தானேயுண்டியுஞ்சோறும் பெருமையுமென்றேபேசுமுப்பெயரே.

*௫௨*

அரிகிளிபுணரிமாறேனைம்மையிந்திரன்கால்காந் - - - தி
பரிபுகர்பன்றிசிங்கம்பகைபுகைபாயல்சோ - - - - லை
வரிமதிசேருதேனைவானரமியமன்மூங் - - - - - கி
லெரிபுனைநிறம்பொன்பாந்தளிரவிகண்வரிதார்பச் - - சை.

அரிசிநெற்கதிர்கள்கூர்மையளிபடைக்கலமேயரி - - வா
ளரிதலேசயனநேமியடல்விசிபறையரித்த - - - - ல்
பரிபுரமதனுட்பெய்தபரலோடிவ்வாறேழைந் - - - தா
மரிதமேபசுமைதிக்காமார்ப்பொலிசிரித்தற்பே - - ரே.

இவற்றின்பொருள்

(அரியென்பது) கிளி - கடல் - திருமால் - இரதம் - அச்சவடிவு -

தேவேந்திரன் - காற்று - ஒளி - குதிரை - குற்றம் - பன்றி - சிங்க
ம் - பகை - புகை - பாயல் - சோலை - வரி - சந்திரன் - மரவயிர
ம் - தவளை - குரங்கு - இயமன் - மூங்கில் - நெருப்பு - உட்டுளை -
நிறம் - பொன் - பாம்பு - சூரியன் - கண்வரி - பூமாலை - பச்சை-
அரிசி - நெற்கதிர் - கள் - கூர்மை - வண்டு - ஆயுதம் - இரம்பம்-
அரிதல் - சயனம் - சக்கராயுதம் - வலிமை - விசிப்பலகை - வாச்சி
யம் - அரித்தல் - சிலம்பினுட்பருக்கைக்கல்லுக்கும்பெயர்.(அரி
தமென்பது ) பசியநிறம் - திசைக்கும்பெயர். ( ஆர்ப்பென்பது )
சத்தம் - நகைப்புக்கும்பெயரொன்றவாறு.

இவற்றிற்குமேற்கோள்

அரியேயரித்தலுமருக்கனுமுராரியும் பரியுஞ்சிங்கமும்பகையுந்
தேரையும் பொன்னுங்காற்றும்பொன்னகர்க்கிறைவனுஞ் செந்
நெற்கதிருங்கிள்ளையுங்காந்தியுந் தேருமைமையுஞ்சேகும்வ
ளையுங் கூர்மையுநிறமுங்கூற்றும்வண்டும் வேயும்பன்றியும்விசி
யும்புகையும் பாயலுஞ்சிலம்பின்பரலுஞ்சோலையுங் கண்ணின்வ
ரியுங்கடலுமுரகமு மெண்ணியதிகிரியுமதியுமீர்வாளுந் தகரும்
வலியுமரிசியுங்குரங்கும் புகருநெருப்பும்புளையுஞ்சயனமு மெ
றிதருபறையுமெண்படைக்கலமுங் குறிதருபச்சையுங்கோதையு
மதுவு மரிதலும்வரியுமென்றுரேழேழே ) அரிதமென்பதுபசு
மையுந்திசையும் ) ஆர்ப்பென்பதுவேபொருதலுஞ்சிரித்தலுந்
தூளியுமோசையுஞ்சொல்லுநாற்பெயரே. *௩௪*

அருவியேமலைச்சார்வாறுமரிதினைத்தாளுமா - - - - கு
மரலையேகனிவித்தாழிமரல்கழலையுமாமென் - - - - ப
கரடமேமதம்பாய்கின்றசுவட்டொடுகாக்கையாகு - - ஞ்
சுரியருன்பெண்மயிர்க்கேசொல்லுமாண்மயிர்க்கும்பேரா ம்.

இதன்பொருள்

( அருவியென்பது ) மலைச்சாரலாறு - தினைத்தாளுக்கும்பெயர்.
(அரலையென்பது)பாலைக்கிழத்தி - விதை - கடல் - மரல் - கழலை
க்கட்டிக்கும்பெயர். (கரடமென்பது)மதம்பாய்கவுள் - காக்
கைக்கும்பெயர்.(சுரியலென்பது)பெண்மயிர் - ஆண்மயிருக்கு
ம்பெயரொன்றவாறு.] இதற்குமேற்கோள்

அருவியென்பதுமலைச்சார்வாறு மரிதிணைத்தாளுமாகுமிருபெயர்) அரலையென்பதுகாழுங்கழலையுங் கன்னியுங்கடலுமரனுமைம்பேரோ)கரடமென்பதுமதம்பொழிகவுளுங் காக்கையுமெனவேகருதுமிருபெயர்)சுரியலென்பதுவேயாண்பான்மயிரும்பெண்பான்மயிரும்பேசுமிருபெயர். *௰௫*

திருவென்பகமலைசெல்வஞ்சிறப்பொடுமுப்பேர்செப்பு - ம்
பரிவென்பதின்பமின்பம்பகருமன்பிற்குமப்பே - - - ர்
கணையேநீர்க்கணைசேர்வாகுங்கைத்துநீணிறிவெறுப்பா - ஞ்
சுரகுருமகவான்றேவமந்திரியிருபேர்சொல்லு - - - ம்.

இதன்பொருள்

(திருவென்பது)திருமகள் - செல்வம் - சிறப்புக்கும்பெயர். (பரிவென்பது) துன்பம் - சுகம் - அன்பிற்கும்பெயர்.(கணையென்பது ) நீர்க்கணை - சேர்வுக்கும்பெயர். (கைத்தென்பது) பொன்-வெறுப்புக்கும்பெயர். (சுரகுருவென்பது ) இந்திரன் - பிரகற்பதிக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

திருவென்பதுவேசெல்வமுஞ்சிறப்பு மிலக்குமியுடனேயிசைக்குமுப்பெயரோ ) பரிவென்பதுவேயின்பமுந்துன்பமு மன்புமெனவேயறையுமுப்பெயரோ) கணையேயெல்லையுஞ் சேர்வுங்கணையு முடிவுஞ்சொல்லுமொழியுமைம்பெயரோ )கைத்துவெறுப்புங்கனகமுமாகும்)சுரகுருவேயிந்திரனும்வியாழமும் *௰௬*

அரற்றலேயழுகையோசையைதென்பவிரைவுநொய் - தா
மிரத்தஞ்செந்நீர்சிவப்பாமிலாங்கலியலந்தென்காந் - - த
ளரக்கென்பமெழுகுகள்ளின்விகற்பமுஞ்சிவப்புமா - - கு
மருச்சுனமருதுவெண்மையறிக்கைதானறிவுபற்று - - ம்.

இதன்பொருள்

(அரற்றலென்பது) அழுதல் - சத்தத்திற்கும்பெயர். (ஐதென்பது ) சீக்கிரம் - நுண்மைக்கும்பெயர். ( இரத்தமென்பது ) உதிரம் - சிவப்புக்கும்பெயர். (இலாங்கலியென்பது) கலப்பை - தென்னமரம் - செங்காந்தளுக்கும்பெயர்.(அரக்கென்பது) மெழு

ரு - கள்ளின்விகற்பம் - சிவப்புக்கும்பெயர்.(அருச்சுனமென்ப து) மருதமரம் - வெளுப்புக்கும்பெயர். (அறிக்கையென்பது) அறிவு - பற்றுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

அரற்றலழுகையுமோசையுமாகும்) ஐதென்பதுவேவிளைவுநொய்துமாம்) இரத்தமென்பதுசெம்மையுமுதிரமும் பவளமுமெனவேபகருமுப்பெயரோ) இலாங்கலிகலப்பையுந்தெங்குஞ்செங்காந்தளும்) அரக்கென்பதுவேகள்ளின்விகற்பமுஞ் சிவப்புமெழுகுஞ்செப்புமுப்பெயரோ) அருச்சுனமென்பதுவெண்மையுமருதம்) அறிக்கையேபற்றுவித்தலுமறிவும். ※௩௭※

அரந்தையென்பதுகுறிஞ்சியாழிசைதுன்பமா - - - கு
மருந்தலேயருமையுண்டலளித்தருன்கொடுத்தல்காத் - த
லரங்கமாற்றிடைக்குறைப்போராடிடஞ்சவையுமப் - பே
ரரங்குபோரிடம்வட்டாடுமிடஞ்சவைமனைவிகற்பா - - ம்.

இதன்பொருள்

(அரந்தையென்பது) குறிஞ்சியாழிசை - வருத்தத்துக்கும்பெயர்.(அருந்தலென்பது)அருமை - உண்டலுக்கும்பெயர். (அளித்தலென்பது) கொடுத்தல் - காத்தலுக்கும்பெயர்.( அரங்கமென்பது ) ஆற்றிடைக்குறை - நாடகசாலை - சவைக்கும்பெயர். (அரங்கென்பது ) போர்க்களம் - சூதாடற்குவகுத்தவறை - சபை - மனைவிகற்பத்துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

அரந்தையென்பதுகுறிஞ்சியாழிசையுங் கிலேசமெனவுங்கிளக்குமிருபெயர்) அருந்தருனேதுய்த்தலுமருமையும்) அளித்தலேகொடுத்தலுங்காத்தலுமாகும்) அரங்கமேசவையாடிடம் போர்க்கள மாற்றிடைக்குறையெனவாகுநாற்பெயரோ) அரங்கு போரிடமும்வட்டாடிடமு மனையின்விகற்பமுஞ்சவையுமாகும் ※௩௮※

முருந்தென்பமயிலின்றேகைமுதன்முள்ளூத்தவளமாகு - ம்
விருந்தமேகிளையின்கூட்டம்விலங்கின்கூட்டமுமென்றுரகு - ங்
குரங்குவானரம்விலங்கின்பொதுமிகுகோணலா - - - கு

மெருந் துரல்கிளிஞ்சிலென்பரிடஞ்செல்வம்விசாலம்வாம ம்.

இதன்பொருள்

(முருந்தென்பது) மயிலிறகினடியிற்குருத்து - வெண்மைக்கும் பெயர். (விருந்தமென்பது) சுற்றத்தின்கூட்டம் - மிருகத்தின்கூட்டத்திற்கும்பெயர். (குரங்கென்பது) குரங்கு - மிருகத்தின் பொது - வளைவிற்கும்பெயர். (எருந்தென்பது) உரல் - கிளிஞ்சிலுக்கும்பெயர். (இடமென்பது) ஐச்சுவரியம் - அகலம் - இடப்பக்கத்துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

முருந்தேயிறகினடியிற்குருத்துந் தவளமுமெனவேசாற்றுமிருபெயர்) விருந்தமென்பதுவேவிலங்கின்கூட்டமுங் கிளையின்கூட்டமுங்கிளககுமிருபெயர்) குரங்கேகோணலும்விலங்கின்பொதுவும் வானரமெனவும்வைக்குமுப்பெயரோ) எருந்தேயுரலுங் கிளிஞ்சிலுமாகும்) இடமேசெல்வம்விசாலமிடப்புற மிடமுமெனவேயிசைக்குநாற்பெயரோ. ✻௩௯✻

ஆரியர்மிலேச்சர்நல்லோரானென்பதிடைச்சொலா - வா
மாரியேகதவுசோழனழகொடுமேன்மைக்கும்பே - - ர்
காருகர்தந்துவாயர்கடுங்கொலையாளர்வண்ணா - - - ர்
தாருகாரியென்பகாளிசண்முகன்றனுமா - - மே.

இதன்பொருள்

(ஆரியரென்பது) மிலேச்சர் - நல்லோருக்கும்பெயர். (ஆனென்பது) இடைச்சொல் - பசுவுக்கும்பெயர். (ஆரியென்பது) கதவு - சோழன் - அழகு - மேன்மைக்கும்பெயர். (காருகரென்பது) நெய்வோர் - கொலையாளர். வண்ணாருக்கும்பெயர். (தாருகாரியென்பது) காளி - முருகக்கடவுளுககும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

ஆரியரோநல்லோருமிலேச்சரும்) ஆனேயிடைச்சொலும்பசுவுமிருபெயர்) ஆரியென்பதழகுங்கதவுஞ் சோழனுமேன்மையுஞ் சொல்லுநாற்பெயரோ) காருகரென்பதுகடுங்கொலையாளருமோவியருடனேதந்துவாயரும் வண்ணானொனவும்வழங்குநாற்பெயரோ) தாருகாரிசண்முகனுங்காளியும். ✻௪௰✻

சார்கூடலொருதாருப்பேர்சான்ஞேன்மான்றலைநாள்பா னு
வேரொன்பமரவேர்வேர்வாம்விழைச்சுநல்லிளமைபோக ம்
பாராவாரந்தான்வாரிகடற்கரையிருபேர்பன்னு ஞ்
சாரணமொன்பவொற்றர்சமண்முனிவர்க்கும்பேரா ம்.

இதன்பொருள்

(சாரென்பது) கூடுதல் - ஓர்மரத்திற்கும்பெயர். (சான்ஞேனெ ன்பது)மிருகசீரிடநட்சத்திரம் -சூரியனுக்கும்பெயர்.(வேரொன் பது) மரவேர் - வேர்வைக்கும்பெயர். (விழைச்சென்பது) கட் டிளமை - புணர்ச்சிக்கும்பெயர்.(பாராவாரமென்பது) கடல் - கடற்கரைக்கும்பெயர். (சாரணமொன்பது) வேவுகாரர் - சமண விருடிகட்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

சாரோயிடமும்பற்றுமோர்தருவுமாம்) சான்ஞேனென்பதுமா ன்றலைநாளுஞ் சூரியனெனவுஞ்சொல்லுமிருபெயர்) வேரோவே ர்வும்வேருமிருபெயர்) விழைச்சென்பதுவேயிளமையும்புணர் ச்சியும்)பாராவாரமேகடலின்கரையுங் கடலுமெனவேகருதுமி ருபெயர்) சாரணமொன்பதுசமண்முனிவோரு மொற்றரெனவு மோதுமிருபெயர். ＊௪௧＊

அராகஞ்செந்திறமேபாலையாழ்முடுகியற்பாட்டா சை
கரேணுவேபிடியானைக்குங்கடுங்கொலையானைக்கும்பே ர்
கிராணமேகிராணமூக்காங்கிளர்சிறுவட்டிலும்பே ர்
கீரமேமிடாவகத்திகரியின்பல்லடிமுளைப்பே ர்.

இதன்பொருள்

(அராகமென்பது) சிவந்தநிறம் - பாலையாழ் - முடுகியல் - இசைப்பாட்டு - ஆசைக்கும்பெயர். (கரேணுவென்பது) பெ ண்யானை - யானைக்கும்பெயர். (கிராணமென்பது)கிரகணம் - மூ க்கு - சிறுவட்டிலுக்கும்பெயர். (கீரமென்பது) மிடா - அகத் திமரம் - யானைப்பல்லடி - முளைக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

அராகம்பாலைப்பண்ணுஞ்சிவப்பு மாசையும்பாட்டுமுடுகியலு மாகும்) கரேணுவேயானையும்பிடியானையுமாம்) கிராணமென்ப

துகிராணமுமூக்குஞ் சிறுவட்டிலுமெனச்செப்புமுப்பெயரோ) கீரமென்பதுமிடாவுமகத்தியும் யானைப்பல்லடியுமுளையுநாற் பெயரோ. ✻சஉ✻ ரகரவெதுகைமுற்றிற்று.

லகரவெதுகை

புலவர்பாடுநரோகூத்தர்புதனும்பர்கவிகண்ணுள - - ர்
வலவனேவெற்றியாளன்மருவுந்தேர்ப்பாகன்மா - - யோ
னலகுநெற்கதிரோயாதிபலகறைநுளம்பெண்ணே - இ
யலரிகண்வரியருக்கனழகொருமரம்பூவா - - - - மே.

இதன்பொருள்

(புலவனென்பது)பாடுவோர் - கூத்தர் - புதன் - தேவர் - கவிஞ ன் - கம்மாளருக்கும்பெயர்.(வலவனென்பது)வெற்றியாளன் - தேர்ப்பாகன் - திருமாலுக்கும்பெயர். (அலகென்பது) நெற்க திர்முதலிய - பலகறை - நிலப்பூச்சி - இலக்கம் - ஆயுதத்திற்கும் பெயர்.(அலரியென்பது) கண்வரி - சூரியன் - அழகு - ஓர்மரம் - பூப்பொதுவிற்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

புலவரோபாடுநருந்தேவரும் பொருநருங்கூத்தரும்புதனும்புல வரு மறிஞருமெனவேயாகுமேழ்பெயரோ ) வலவன்மாயோனு ம்வெற்றியாளனுந் தேரிற்பாகனுஞ்செப்புமுப்பெயரோ ) அல கேநுட்பமுநெற்கதிராதிய மகிழின்பரலுமெண்ணுமாயுதமும் பலகறையும்புள்வாயுநுளம்புமாம் ) அலரியேகண்வரியுநீராவியு ம் பூவுமிரவியுமழகுமோர்மரமுந் தேனீயுடனேசெப்புமேழ் பேரோ. ✻க✻

ஆலமேவடவிருக்கமடுநஞ்சோடலர்பூநீ - - - - - ரா
மூலம்வேர்முதலேயேதுமூதிர்வுறுகிழங்கோர்நாளா - - ஞ்
சீலமேகுணந்தண்டித்தறிகஞ்சரித்திரமுப்பே - - - ோ
சாலமேவலைசாலேகமராமரஞ்சவைமதிற்பே - - - - ர்.

இதன்பொருள்

( ஆலமென்பது ) ஆலமரம் - விடம்-மலர்ந்தபூ - நீருக்கும்பெ யர்.( மூலமென்பது ) வேர் - முதல் - காரணம் - கிழங்கு - ஓர்ந ட்சத்திரத்துக்கும்பெயர். ( சீலமென்பது ) குணம் - தண்டித்த

ரிணபுயலிளமைவேலிதலைக்காவலிவைநாற்பே - - ரே.

இதன்பொருள்

(அணையென்பது) தயிர் - மலைக்குகை - புற்றுக்கும்பெயர். (அசனியென்பது) இடி - வச்சிராயுதத்திற்கும்பெயர். (உணையென்பது) குதிரையிற்கட்டுமயிர் - பிறமயிருக்கும்பெயர். (கிளையென்பது) ஏழிசையிலொன்று - மூங்கில் - உறவு - கிளைத்தலுக்கும் பெயர். (இணையென்பது) மேகம் - இளமை - வேலி - தலைக்காவலுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

அளையேதயிரும்புற்றும்பாழிலு முழையுமெனவேமொழியுநாற்பெயரே) அசனியேயிடிவச்சிரமிருபெயர்) உணையேகுதிரையிற்கட்டியமயிரும் பிறமயிரெனவும்பேசுமிருபெயர்) கிளையேமூங்கிலுங்கேளுங்கிணைத்தலு மோர்பண்ணெனவுமுரைக்குநாற்பெயரே) இளையேபூமியும்புயலும்பசுவு மிளமையும்வேலியுங்கிடங்குமங்காடியுங் காவற்காடுந்தலைக்காவலுமாம். *௬*

உள்ளலேநினைவுள்ளான்பேருழப்பென்பவலியுற்சா - - க

ளுள்ளலேபள்ளமேன்மைநீண்டவீதியுமுப்பே - - - ரே

யெள்ளலேநகையிழிப்பாம்யாமந்தெற்கிரவுசா - - - ம

ஞொள்கல்சோம்பிணைத்தலச்சக்குறிப்பென்றுநுவலற்பாலா ம்

இதன்பொருள்

(உள்ளலென்பது) நினைத்தல் - உள்ளான்குருவிக்கும் பெயர். (உழப்பென்பது) வலிமை - உற்சாகத்திற்கும்பெயர். (ளுள்ளலென்பது) பள்ளம் - மேன்மை - தெருவிற்கும்பெயர். (எள்ளலென்பது) நகைப்பு - இழிவுக்கும்பெயர். (யாமமென்பது) தென்றிசை - இராத்திரி - சாமத்திற்கும்பெயர். (ஞொள்கலென்பது) சோம்பல் - இணைத்தல் - அச்சக்குறிப்புக்கும்பெயரொன்றவாறு.]

இதற்குமேற்கோள்

உள்ளமேலநினைவுமுள்ளான்பெயருமாம்) உழப்பேவலியுற்சாகமிருபெயர் (ளுள்ளலென்பதுவேபள்ளமுமேன்மையும் வீதியுஞ்சேர்வுமிகுதியும்பூசலு முடன்படலுடனேயொலியுமெண்பெயரே) எள்ளலேநகையிழிவெனவிருபெயர்) யாமமென்பதுவே

யிரவுஞ்சாமமும் பொழுதுந்தெற்கும்போற்றுநாற்பெயரே) ஞொள்கலென்பதுவேயச்சக்குறிப்பு மிளைத்தலுஞ்சோம்புமெனுமுப்பெயரே.

*௭*

வள்ளென்பகாதுகூர்மைவலிவளம்வாளேவாரா - - - ம்
வெள்ளையேமுசலிசங்குவெளிறுவெள்ளாடுவெண் - - பா
கள்வனேமுசுஞெண்டியானைகருநிறத்தவனேசோர - - ன்
பள்ளியூர்சிற்றூர்கோயில்பாயல்கண்படைநீத்தோரு - ர்.

இதன்பொருள்

(வள்ளென்பது) காது - கூர்மை - வலிமை - வளமை - வாளாயுதம் - வாருக்கும்பெயர். (வெள்ளையென்பது) பலபத்திரன் - சங்கு - வெண்மை - வெள்ளாடு - வெண்பாவிற்கும்பெயர். (கள்வனென்பது) முசு - நண்டு - யானை - கரியன் - திருடனுக்கும்பெயர். (பள்ளியென்பது) மருதநிலத்தூர் - சிற்றூர் - கோயில் - மக்கட்படுக்கை - நித்திரை - முனிவரிருப்பிடத்துக்கும்பெயரொன்றவாறு.]

இதற்குமேற்கோள்

வள்ளென்பதுவேகாதுங்கூர்மையும் வலியும்வாளும்வாருஞ்செறிவும் வளமுமென்றேவழங்குமேழ்பெயரே) வெள்ளைவெளிறுமோர்பாவுமனந்தனும் வெள்ளாடும்வெள்ளியுஞ்சங்குமறுபெயர்) கள்வனேமுசுநண்டிபஞ்சோரன் கருநிறத்தவனெனக்காட்டுமைம்பெயரே) பள்ளியென்பதுவேகோயிலும்பாயலு நீத்தோருருமடமுந்துயிலு மூருஞ்சிற்றூரெனவுமேழ்பெயரே.

*௮*

விளக்கொளிசோதிநாளாம்வேள்வியேமகநாளீ - - - த
ளக்கரோபுடவிசேறுப்பளங்கடல்கார்த்திகைப்பே - - ர்
திளைத்தலேயனுபவித்தல்செறிதலேநிறைதன்முப் - - பே
ரிவாத்தலேயிணாப்பிரங்கலென்றூழேயிரவிவெய்யி - ல்.

இதன்பொருள்

(விளக்கென்பது) தீபம் - சோதிநாளுக்கும்பெயர். (வேள்வியென்பது) மகம் - கொடுத்தலுக்கும்பெயர். (அளக்கரென்பது) பூமி - சேறு - உப்பளம் - கடல் - கார்த்திகைக்கும்பெயர். (திளைத்தலென்பது) அனுபவித்தல் - நெருங்கல் - நிறைதலுக்கும்பெ

யர். (இளைத்தலென்பது)மெலிதல் - இரங்கலுக்கும்பெயர்.(என்
றாழென்பது)சூரியன்-வெயிலுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

விளக்கென்பதுவேசோதிநாளு மொளியுமெனவேயுரைக்குமிரு
பெயர்)வேள்வியேமகமும்வேள்விக்குண்டமுந் தேவபூசையுங்
கொடையுநாற்பெயரோ)அளக்கரோகார்த்திகையமுப்பளமும் பு
டவியுங்கடலுஞ்சேறுமைம்பெயரோ)திளைத்தலேயனுபவித்தலு
நிறைதலு நெருங்கலுமெனவேநிகழ்த்துமுப்பெயரோ) இளைத்
தலெய்த்தலுமிரங்கலுமாகும்) என்றாழென்பதுவெயிலுங்காற்
று மிரவியுங்கோடையுமெனும்பெயர்நான்கே. *௧*

பிள்ளையேவடுகன்காக்கைபெட்டலூன்விரும்பல்வேண்ட - ன்
மள்ளரோமள்ளர்வீரர்மறவர்க்குங்குறவர்க்கும் - - - பே
ருள்ளமேமுயற்சிநெஞ்சாமுஞற்றிழுக்கொடுதாளாண் - மை
வள்ளியேவல்லிசெங்கைவளைபுனையிழைமுப்பே - - ரோ.

இதன்பொருள்

(பிள்ளையென்பது) வயிரவன் - காக்கைக்கும்பெயர். ( பெட்ட
லென்பது) ஆசை - ஆசைப்பெருக்கத்திற்கும்பெயர். ( மள்ளரெ
ன்பது ) உழவர் - படைவீரர் - திண்ணியோர் - குறிஞ்சிநிலமாக்
களுக்கும்பெயர். (உள்ளமென்பது) முயற்சி - நெஞ்சுக்கும்பெ
யர். (உஞற்றென்பது ) இழுக்கம் - முயற்சிக்கும்பெயர். ( வள்ளி
யென்பது ) படர்கொடி - கைவளை - ஆபரணத்திற்கும்பெயரொ
ன்றவாறு.]

இதற்குமேற்கோள்

பிள்ளையென்பதுகாரிப்புள்ளு மகவும்வயிரவனுமுப்பேரோ)
பெட்டலேவேண்டல்விரும்பலிருபெயர் )மள்ளர்மறவருமுழவ
ருங்குறவரும் .வீரருமெனவேவிரிக்குநாற்பெயரோ) உள்ளமென்
பதுமுயற்சியின்பேரு நெஞ்சுமெனவேநிகழ்த்துமிருபெயர் )
உஞற்றேயிழுக்கும்வழக்குமுயற்சியு மனவெழுச்சியுமெனவை
க்குநாற்பெயரோ) வள்ளியேகைவளையுங்கூத்தும் வல்லியுங்கலனு
ம்வகுக்குநாற்பேரோ. *௨*

காளமேயூதுகொம்புகழுநஞ்சுகருமைநாற்பே - - - ர்.
வேளாறுமுகன்காமன்பேர்விபூதியூன்கொடுமைசெல்வ - - ங்

கோளிடையூறென்பான்கோள்கொலைகுணம்வலிபொய் கொள்
ஞாளியேசுணங்கன்கள்ளா நான்முகனருகன்வேதா. [கை

இதன்பொருள்

(காளமென்பது) ஊதுகொம்பு - கழுமரம் - விடம் - கறுப்புக்கும்பெயர். (வேளென்பது) குமரன் - மன்மதனுக்கும்பெயர். (விபூதியென்பது) தசை - பொல்லாங்கு - செல்வத்திற்கும்பெயர். (கோளென்பது) இடையூறு - நவக்கிரகம் - கொலை - குணம் - வலிமை - பொய் - கொள்ளலுக்கும்பெயர். (ஞாளியென்பது) நாய் - கள்ளுக்கும்பெயர். (நான்முகனென்பது) அருகதேவன் - பிரமதேவனுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

காளமென்பதுநஞ்சுங்கருமையு மூதிடுகொம்புங்கழுவுநாற்பெயரோ ) வேளேமதனுமுருகனுமிருபெயர் ) விபூதி தானேநீறுங்கொடுமையுந் தசையுங்குற்றமுஞ்செல்வமுமைம்பேர் ) கோளேவலியுநாளுங்கோடலுங் கோளுங்குணமும்பொய்யுங்கொலையுங் கோட்பாடேனேநவக்கிரகங்களு மிடையூறெனவுமிசைக்குமீரைம்பேர் ) ஞாளியேகள்ளுநாயுமிருபெயர் ) நான்முகனேயயனருகனிருபெயர். *௰௧*

களரொன்பமிடறுகோட்டிகளர்நிலங்கருமைநாற்பே - - ர்
தளமிலைபடையெசாந்துதாழிபூவிதழேமே - - - டை
யளகமேமாதரோதியறன்மயிர்க்குழற்சிமுப்பே - - - ர்
தளைவிலங்கொடுதொடர்ச்சிதாட்சிலம்பாண்மயிர்ப்பே - ர்.

இதன்பொருள்

(களரொன்பது) கழுத்து - கூட்டம் - களர்நிலம் - கறுப்புக்கும்பெயர். (தளமென்பது) இலை - சேனை - சாந்து - சாடி - பூவிதழ் - உப்பரிகைக்கும்பெயர். (அளகமென்பது) பெண்மயிர் - நீர் - மயிர்க்குழற்சிக்கும்பெயர். (தளையென்பது) விலங்கு - தொடர்பு - காற்சிலம்பு - ஆண்மயிர்க்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

களரோமிடறுங்கருமையுங்கோட்டியுங் களர்நிலமென்வுங்கருதுநாற்பெயரோ ) தளமேதாழியுஞ்சாந்துமுப்பரிகையும் படையு

மிலையுமடலுமறுபெயர் ) அளகமென்பதுபெண்ணின்மயிரு ம
ம்புமயிர்க்குழற்சியுமாகுமுப்பெயரே ) தலையேவிலங்குஞ்சிலம்
பும்பிணைத்தலு மாண்மயிரெனவுமறையுநாற்பெயரே. *௰௨*

புள்ளுவண்டவிட்டம்புட்பேர்புளகந்தர்ப்பணங்குமிழ்ப்பா ங்
கள்ளென்பதளவுகள்ளாங்கனலிதீயிரவியன் - - - - றி
யள்ளுரஞ்செறிவுகாதோடயில்வலியபற்றிரும்பா - - - ம்
வெள்ளமெண்மிகுதிமுந்நீர்வேணுவேமூங்கில்வில்வா - ள்.

இதன்பொருள்

( புள்ளென்பது ) வண்டு - அவிட்டநட்சத்திரம் - பறவைக்கும் பெயர். (புளகமென்பது) கண்ணாடி - மயிர்சிலிர்த்தலுக்கும்பெயர். ( கள்ளென்பது ) களவு - கள்ளுக்கும்பெயர். ( கனலியென்பது)நெருப்பு - சூரியன் - பன்றிக்கும்பெயர்.(அள்ளென்பது) வலிமை - நெருக்கம் - காது - கூர்மை - அள்ளுக்கும்பெயர். (வெள்ளமென்பது ) ஒொண் - மிகுதி - கடலுக்கும்பெயர். (வேணுவென்பது ) மூங்கில் - வில் - வாளாயுதத்திற்கும்பெயரொன்றவாறு.]

இதற்குமேற்கோள்

புள்ளேயவிட்டம்வண்டுபுண் முப்பேர் ) புளகமேகண்ணாடியுஞ்
சோறு மயிர்பொடித்தலுமெனவழங்குமுப்பெயரே ) கள்ளென்
பதுவேமதுவுஞ்சோர்வு மருதநில த்தின்றொடர்பும்பொய்கை
யு நறவுமென்றேநாட்டுமைம்பெயரே )கனலிதானேதீயும்பன்றி
யு மிரவியுமெனவேயிசைக்குமுப்பெயரே ) அள்ளேகாதுஞ்செ
றிவுங்கூர்மையும் வலிபற்றிரும்புவன்மையுமைந்தே ) வெள்ள
மேயோரொண்ணுமிகுதியுங் கடலுமெனவேகருதுமுப்பெயரே)
வேணுவென்பதுவேயும்வாளும் வில்லுமெனவேமேவுமுப்பெ
யரே. *௰௩*

வாளென்பதொளிகட்கப்பேர்வல்லரிதளிர்பைங்காயா - ங்
கூளிபேய்தமரோருசுகுறமர்படைத்தலைவன்கூட்ட - - - ந்
தோளென்பபுயங்கையாகுஞ்சுந்தரியுமையேசுண்ட - - ன்
றேளென்பதனுடராளேவிருச்சிகந்தெறுக்காலும்பே - ர்.

இதன்பொருள்

(வாளென்பது) பிரகாசம் - வாளாயுதத்திற்கும்பெயர். (வல்லரியென்பது) தளிர் - பசுங் காய்க்கும்பெயர். (கூளியென்பது) பேய் - உறவு - எருது - குற்றம் - பூதம் - படைத்தலைவன் - கூட்டத்திற்கும்பெயர். (தோளென்பது) தோள் - கைக்கும்பெயர். (சுந்தரியென்பது) துர்க்கை - மூஞ்சூறுக்கும்பெயர். (தேளென்பது) அனுடநட்சத்திரம் - விருச்சிகவிராசி - தேளுக்கும்பெயரொன்றவாறு.]

இதற்குமேற்கோள்

வாளேயொளியுங்கச்சுங்கயிறும் வாளுநீருமருவுமைம்பெயரோ) வல்லரியேதளிரும்பூங்கொத்தும் பசுங்காயெனவும்பகருமுப்பெயரோ) கூளியேபடைத்தலைவனுஞ்சுற்றமும் பேயுமிடபமுந்தொகுதியுங்குற்றமுங் குறளுமெனவேகூறுமேழ்பெயரோ)தோளென்பதுவேபுயமுந்துணையுங் கையுமெனவேகாட்டுமுப்பெயரோ) சுந்தரிசுண்டனுமிந்திரன்றேவியுந் துர்க்கையுமுமையுஞ்சொல்லலாகும்) தேளென்பதுவேயனுடநாளுந் தேளும்விருச்சிகமுஞ்செப்புமுப்பெயரோ. *௰௪*

அளியென்பநறவும்வண்டுமன்பொடுகொடையுநாற் - பே
ளவையேயெல்லைநாளாமாசாரந்துகிறுமா - - - - ரி
விளரியேயிளமையாழிலோர்நரம்பியாழ்நீள்வேட் - - கை
வளமென்பபதவியும்பல்பண்டமும்வனப்புமாகு - - ம்.

இதன்பொருள்

(அளியென்பது) கள் - வண்டு - அன்பு - கொடுத்தலுக்கும்பெயர். (அளவையென்பது) எல்லை - நாளுக்கும்பெயர். (ஆசாரமென்பது) சீலை - தூய்மை - பெருமழைக்கும்பெயர். (விளரியென்பது) இளமை - யாழிலோர்நரம்பு - நெய்தனிலத்தியாழ் - ஆசைப்பெருக்கத்திற்கும்பெயர். (வளமென்பது) பதவி - பலபண்டம் - அழகுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

அளியேயன்புங்கொடையுமதுவும் வண்டுமெனவேமருவுநாற்பெயரோ) அளவையேதினமுமெல்லையுமாகும்) ஆசாரமேசீலமும்பெருமழையுந் தூசுமெனவேசொல்லுமுப்பெயரோ) விளரியேயிளமையும்வேட்கைமிகுதியும் யாழிலோர்நரம்பும்யாழுநா

ந்பெயரோ) வளமென்பதுபல்பண்டமும்வனப்பும் பதவியும்வ
ளமும்பகருநாற்பெயரோ. *௰௫*
வள்ளமேமரக்கால்வட்டில்கடிகைவட்டிற்குமப்பே - - ர்
வள்ளூரம்பசுவிறைச்சிவரைந்தலூன்பொதுவுமா - - - கு
மள்ளலேநரகஞ்சேறுமம்புநீர்புயல்வேயேவா - - - ம்
வெள்ளிலேவிளாப்பாடைப்பேர்வேலன்வேள்வெறியாட்டாளன்

இதன்பொருள்

(வள்ளமென்பது) மரக்கால் - வட்டில் - நாழிகைவட்டிலுக்கும்
பெயர். (வள்ளூரமென்பது) பசுவினிறைச்சி - தசைப்பொதுவி
ற்கும்பெயர். (அள்ளலென்பது) நரகம் - சேற்றிற்கும்பெயர்.
(அம்பென்பது) நீர் - மேகம் - மூங்கில் - கணைக்கும்பெயர். (வெ
ள்ளிலென்பது) விளாமரம் - ஆசந்திக்கும்பெயர். (வேலனென்
பது) முருகக்கடவுள் - வெறியாட்டாளனுக்கும்பெயரொன்றவா
று.

இதற்குமேற்கோள்

வள்ளமேமரக்காலும்வட்டிலு நாழிகைவட்டிலுநாட்டுமுப்பெ
யரோ) வள்ளூரமென்பதூனின்வகையும் பசுவின்றசையும்பகரு
மிருபெயர்) அள்ளலென் பதுவேசேறுநிரயமு மள்ளலுமென
வேயமையுமுப்பெயரோ) அம்புவேயுநீரும்விண்ணு மேகமுங்
கணையும்விளம்பலாகும்) வெள்ளிலேபாடையும்விளவுமாகும்)
வேலனென்பதுவெறியாட்டாளனு முருகனுமெனவேமொழியு
மிருபெயர். *௰௬*
காளையேயெருதுபாலைக்கதிபனல்லிளமையோன்பே - - ர்
கூளியர்நண்பர்பூதகணவீரர்கொலைத்திறத்தோ - - - ர்
கோளகைவட்டமோடுமண்டலிப்பாம்புங்கூறு - - - ங்
கேள்வியேசெவிகல்விப்பேர்கிடங்ககழ்வாவியா - - மே.

இதன்பொருள்

(காளையென்பது) எருது - பாலைத்தலைவன் - கட்டிளமையோனு
க்கும்பெயர். (கூளியரென்பது) சினேகிதர் - பூதகணவீரர் - கொ
லையாளிகட்கும்பெயர். (கோளகையென்பது) வட்டவடிவு - மண்
டலிப்பாம்புக்கும் பெயர். (கேள்வியென்பது) காது - கல்விக்கும்
பெயர். (கிடங்கென்பது) அகழி - வாவிக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

காவணமேயிவணமேயோனுமீளியும் புங்கவமுமேறும்புகலலாகும்) கூளியமொன்பதுநண்பருமவீருங் கொலைத்திறத்தோருங்குறவருமபூத கணவீரருமெனக்கழறலாகும்) கோளகைதானேமண்டலிப்பாம்பும் வட்டமுமெனவேமருவுமிருபெயர்)கேள்வியே செவிகல்வியாழ்மூன்றே.) கிடங்கேயகழும்வாவியுமாகும்.* ௰௭

இளமையேதண்மைகாமமிளமையின்பருவமுப் - - பே
ரளறென்பநரகஞ்சேறுமக்காரம்புடைவைவெல்ல - - - ங்
கிளரொன்பகிரணத்தோடுகிளர்கோட்டுமலர்ப்பூந்தாதா - ங்
களரிபோர்க்களங்காடென்பகருமஞ்செய்யிடமுமா - மே.

இதன்பொருள்

(இளமையென்பது) தாழ்மை - காமம் - இளமைப்பருவத்திற்கும்பெயர். (அளறென்பது) நரகம் - சேற்றிற்கும்பெயர். (அக்காரமென்பது) புடைவை - வெல்லத்துக்கும்பெயர். (கிளரொன்பது) ஒளி - பூந்தாதுக்கும்பெயர். (களரியென்பது) போர்செய்யிடம் - காடு - தொழில்செய்யிடத்திற்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

இளமையேகோமளமுந்தண்மையுங் காமமுமெனவேகாட்டுமுப்பெயரோ) அளறுநரகமுஞ்சேறுமாகும்) அக்காரம்வெல்லமும்புடைவையுமாகும்) கிளர்பூந்தாதுமொளியுமிருபெயர்) களரிபோரிடமுங்கானுங்கருமையுங் கருமஞ்செய்யிடமுஞ்சவையுமிட்டுங் கோட்டியுங்களர்நிலமுங்கூறலாகும். *௰௮*

ளகரவெதுகைமுற்றிற்று. றகரவெதுகை.

இறவையேபுட்டிலேணியென்பகூர்மிகுதிகூர் - - - மை
குறடென்பபலகைதிண்ணைகொண்மூவென்பதுவிண்மேக - ம்
புறவமோர்புள்ளுங்காடுமுல்லைநன்னிலனும்போற்று - - ம்
புறணியேகுறிஞ்சிமுல்லைநிலத்தொடுபுறமுந்தோலு - - ம்.

இதன்பொருள்

(இறவையென்பது) கூடை - ஏணிக்கும்பெயர். (கூரென்பது) மிகுதி - நுனிக்கும்பெயர். (குறடென்பது) பலகை - திண்ணைக்கும்பெயர். (கொண்மூவென்பது) ஆகாயம் - மேகத்திற்கும்

பெயர். (புறவமென்பது) ஓர்பறவை - காடு - முல்லைநிலத்திற்கு ம்பெயர். (புறணியென்பது) குறிஞ்சிநிலம் - முல்லைநிலம் - புறம் - தோலுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

இறவைபுட்டிலுமேணியுமாகும்) கூரோமிகுதியுங்கூர்மையுமாகும்) குறடேபலகையுந்திண்ணையுமிருபெயர்) கொண்மூவேவிண்மேகமிருபெயர்) புறவமென்பதுபுறாவுங்காடு முல்லைநிலமுமொழியுமுப்பெயரே) புறணியேகுறிஞ்சிநிலமும்புறமு முல்லைநிலமுந்தோலுநாற்பெயரே. ＊௧＊

மறஞ்சினம்பிணக்குக்கூற்றுமலைந்தசேவகமுமாகு - - ங்
குறிஞ்சியோரிசையோர்பண்ணேகுறிஞ்சிசெம்முள்ளிக்கும் பே
பிறங்கலேமிகுதிவெற்புநிறைவொலிபெருமையைம்பேர் [ர்
குறும்பொறைகுன்றுகாடுகுறிஞ்சிநன்னிலத்தூர்முப்பே - ர்.

இதன்பொருள்

(மறமென்பது) கோபம் - பிணக்கு - நமன் - வீரத்திற்கும்பெயர். (குறிஞ்சியென்பது) ஓரிசை - ஓர்பண் - குறிஞ்சிநிலம் - செம்முள்ளிக்கும்பெயர். (பிறங்கலென்பது) மிகுதி - மலை - நிறைதல் - ஒலி - பெருமைக்கும்பெயர். (குறும்பொறையென்பது) மலை - காடு - குறிஞ்சிநிலத்தூருக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

மறஞ்சேவகமும்பிணக்குங்கூற்றுஞ் சினமுங்கொலையுஞ்செப்புமைம்பெயரே) குறிஞ்சியேயோரிசையுமோர்பண்ணு மலைச்சார்நிலனுஞ்செம்முள்ளியுமாம்) பிறங்கலொலியுமிறையுமுயரமு மிகுதியும்வெற்புநிறைவும்பெருமையு மொழுக்கமுமெனவேயோதுமெண்பெயரே) குறும்பொறைதானேமலையுங்காடுங் குறிஞ்சிநிலத்தூரொனவுமுப்பெயரே. ＊௨＊

நாறுவிற்குதைதையேயெல்லைதாழ்மரக்குலைமுட்கோலா - ஞ்
சேறென்பகும்பிசாரந்தித்திப்புவிழவுகள் - - - - ளே
நூறென்பதிமைதீண்டலுயிர்க்கொலையிடைநூறென் - - ப
வேறிடிமுதனுளாகுமிடபமோடெருதுமப்பே - - - ர்.

இதன்பொருள்

(தாறென்பது)விற்குதை - அளவு - மரக்குலை - முட்கோலுக்கு ம்பெயர்.(சேறென்பது) சேறு - சாரம் - தித்திப்பு - திருவிழா - கள்ளுக்கும்பெயர். (ஊறென்பது)தீமை - தொடுதல் - கொலை - துன்பத்திற்கும்பெயர். ( எறென்பது ) இடி - அச்சுவினிநாள் - இடபம் - எருதுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

தாறேமரக்குலைவிற்குதைமுட்கோ லெல்லையுமென் றேயிசைக் குநாற்பெயரோ ) சேறேகும்பியும்விழவுங்கள்ளுஞ் சாரமுமினி மையுஞ்சாற்றுமைம்பெயரோ)ஊறேதீமையுந்தீண்டலுங்கொலை யு மிடையூறெனவுமிசைக்குநாற்பெயரோ) எறேயிடியுமச்சுவினி நாளு மிடபமுமெருதுமிசைக்குநாற்பெயரோ. *௩*

சிறையேவேறிடமாம்புள்ளின்சிறகொடுகாவலும்பே - - ர் கறையிறுத்திடலிரத்தங்கறுப்புரல்விடம்பேனாந் - - தே முறையென்பகோசமேயூழ்முறைமையிம்முப்பேரொன் - ப பிறழ்தலேநடுக்கம்வேறுபெயர்தலோடொளிவிடற்பே - ர்.

இதன்பொருள்

( சிறையென்பது ) வேறிடம் - பறவையின்சிறகு - காவலுக்கும் பெயர். (கறையென்பது) குடியிறை - உதிரம் - கறுப்பு - உரல் - நஞ்சுக்கும்பெயர். (முறையென்பது ) புத்தகம் - பழமை - மு றைமைக்கும்பெயர். ( பிறழ்தலென்பது ) நடுக்கம் - வேறாகப் போதல் - ஒளிசெய்தலுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

சிறையேகாவலும்புள்ளின்சிறகும் வேறிடமெனவும்விதிக்குமு ப்பெயரோ) கறையேயிறையுமுரலுங்கறுப்பு மிரத்தமும்விடமு மியம்பலாகும் ) முறையேயூழுமுறைமையுங்குணமும் புத்தக மெனவும்புகலுநாற்பெயரோ)பிறழ்தருனேபெயர்தலுநடுக்கமு மொளிவிடலெனவுமோதுமுப்பெயரோ. *௪*

எற்றலேகோடலென்பவெதிர்ந்துபோர்செய்தலும் - பே ராற்றலேபொறைமுயற்சியதிகமேவலியேஞான - - - ந் தோற்றலேவலிபிறப்புத்தோன்றுதல்புகழேநாற்பே - - ர் போற்றலேபுகழ்தலோம்பல்புறமென்பமுதுகுவீர - - ம்.

இதன்பொருள்

(எற்றலென்பது) கொள்ளல் - எதிர்ந்துபோர்செய்தலுக்கும் பெயர். (ஆற்றலென்பது) பொறுத்தல் - முயற்சி - மிகுதி - வலிமை - ஞானத்திற்கும்பெயர். (தோற்றலென்பது) வலிமை - பிறத்தல் - தோன்றுதல் - புகழ்ச்சிக்கும்பெயர். (போற்றலென்பது) புகழ்தல் - பாதுகாத்தலுக்கும்பெயர். (புறமென்பது) முதுகு - வீரத்துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

எற்றலென்பதெதிர்ந்துபோர்செய்தலுங் கோடலுமேற்றலுங் கூறும்பெயரே) ஆற்றலென்பதுபொறையுமுயற்சியு மதிகமும்வலியுஞானமும்பரித்தலு நிலையுடைமையுமெனநிகழ்த்து மேம்பெயரே) தோற்றல்வலியும்பிறப்புந்தோன்றலுந் தோல்வியும்புகழுஞ்சொல்லலாகும்) போற்றலோம்பலும்புகழ்தலுமாகும்) புறமேமுதுகுவீரமிருபெயர். *௫*

அற்றமேமறைவுஞ்சோர்வுமவகாசந்தானுமாகு - - - ங்
குற்றலேகுறல்பறித்தல்குரையென்பதிடைச்சொலோ - சை
யெற்றென்பதிரக்கமொத்தலெறிதலெத்தன்மைத்தென்ற ல்
கொற்றியேதுர்க்கைநாமங்கோவிளங்கன்றுங்கூறு - - டம்.

இதன்பொருள்

(அற்றமென்பது) மறைவு - சோர்வு - சமயத்திற்கும்பெயர். (குற்றலென்பது) குற்றல் - பறித்தலுக்கும்பெயர். (குரையென்பது) இடைச்சொல் - ஒலிக்கும்பெயர். (எற்றென்பது) இரக்கச்சொல் - ஒத்தல் - எறிதல் - எத்தன்மைத்தென்றலுக்கும்பெயர். (கொற்றியென்பது) துர்க்கை - பசுவினிளங்கன்றுக்கும்பெயரொன்றவாறு.]

இதற்குமேற்கோள்

அற்றமேயவகாசமுமறைவு மற்றதுஞ்சோர்வுமுண்மையுந்துடியந் சற்றுநாயுஞ்சாற்றுமெண்பெயரே) குற்றலேபறித்தலுங்குற்றலுமாகும்) குரையேயோசையுமிடைச்சொலுமாகும்) எற்றேயிரக்கமுமொத்தலுமெறிதலு மெத்தன்மைத்தென்றலுமியம்புநாற்பெயரே)கொற்றிகோவிளங்கன்றந்துர்க்கையுங் கொற்றியுமெனவேகூறலாகும். *௬*

உறழ்வென்பபுணர்வுகாலஞ்செறிவிடையீடொப்பைம் - பே
ருறவியேயெறும்புநீருற்றுலைக்களமுறவுயிர்ப் - - - பே
ருறுகணென்பதுவேதுன்பமுறுபயமிடிநோய்நாற் - பே
ருறுவனேமுனிபுத்தன்பேருலக்கையேயுமோங்கலோண - ம்.

இதன்பொருள்

(உறழ்வென்பது) புணர்ச்சி - காலம் - நெருக்கம் - இடையீடு - உவமைக்கும்பெயர். (உறவியென்பது) எறும்பு - ஊற்று - உலைக்களம் - சுற்றம் - உயிருக்கும்பெயர். (உறுகணென்பது) துன்பம் - அச்சம் - தரித்திரம் - வியாதிக்கும்பெயர். (உறுவனென்பது) முனிவன் - அருகனுக்கும்பெயர். (உலக்கையென்பது) உலக்கை - திருவோணநட்சத்திரத்துக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

உறழ்வேயொப்புஞ்செறிவுங்காலமும் புணர்வுமிடையீடுமனைம்பெயரே) உறவியேயுலைக்களமுமெறும்பு முயிருமுறவுநீருற்றுமென்றைந்தே) உறுகண்டானேதுன்பமுநோயும் பயமுமிடியுமபகருநாற்பெயரே) உறுவனேமுனியருகனென்றிருபெயர்) உலக்கையேதிருவோணநாளு முலக்கையுமெனவேயோதுமிரு பெயர். *எ*

விறப்பென்பசெறிவுவெற்றிவெருவுதல்பொருதனாற்பே - ர்
பொறுத்தலேபொறைதாங்கற்பேர்புந்திதான்புதனேபுத் - தி
யிறுத்தலேயொடித்தறங்கலியம்புதன்முப்பேரொன் - ப
கறுப்பிருள்சினக்குறிப்பாங்கன்றுகைவளைகன்று - - மே.

இதன்பொருள்

(விறப்பென்பது) நெருக்கம் - வெற்றி - அஞ்சுதல் - யுத்தத்திற்கும்பெயர். (பொறுத்தலென்பது) பொறுமை - சுமத்தலுக்கும்பெயர். (புந்தியென்பது) புதன் - புத்திக்கும்பெயர். (இறுத்தலென்பது) ஒடித்தல் - தங்கல் - சொல்லுதலுக்கும்பெயர். (கறுப்பென்பது) கருமை - கோபக்குறிப்புக்கும்பெயர். (கன்றென்பது) கைவளை - கன்றுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

விறப்பேபொருதலும்வெருவலும்வெற்றியும் பெருக்கமுஞ்செ

றிவும் பேருமைப்பெயரே) பொறுத்தருந்தலும்பொறையுமாகு
ம்புந்தியேபுதனறிவெனவிருபெயர்) இறுத்தலென்பதுதங்கலு
ஞ்சப்பலு மிறுத்தலுமெனவேயிசைக்குமுப்பெயரே) கறுப்
பென்பதுவேகருமையுஞ்சினமுஞ் சினக்குறிப்பெனவுஞ்செப்பு
முப்பெயரே) கன்றேயிலைதாகியமுதலியாவுங் கைவளையெனவு
ங்காட்டுமிருபெயர். *௮*

பொறிமரக்கலமேசெல்வம்பூமகளெந்திரங் - - - - க
ளறிவிலாஞ்சனையெழுத்தோடைம்பொறிவரியொன்பான்பே ர்
வெறிவெருவுதல்கலக்கம்வெறியாட்டுவட்டநாற்ற - - ங்
குறியபேய்துருவைகள்ளுகூறுநோயொன்பதா - - மே.

இதன்பொருள்

(பொறியென்பது)தோணி - ஐசுவரியம் - இலக்குமி - சூத்திரம் - அறிவு - அடையாளம் - எழுத்து - ஐம்பொறி - தேமலுக்கும்பெயர். (வெறியென்பது) அஞ்சுதல் - கலக்கம் - தேவர்களாடுங்கூத்து - வட்டவடிவு - வாசனை - பிசாசம் - ஆடு - கள் - வியாதிக்கும்பெயரொன்றவாறு ] இதற்குமேற்கோள்

பொறியென்பதுவேவரியும்புள்ளியும் பொருளுந்தியுமெழுத்துஞ்செல்வமு மிருவினையுஞ்செந்திருவுமைம்பொறியு மரக்கலமுமியந்திரமுமறிவு மிலாஞ்சனையெனவும்பதின்முப்பேரே) வெறியென்பதுவேயாடும்வட்டமும் பேயும்விரைவுநாற்றமுங்கலக்கமும் வெருவுதலுடனே நோயுங்கள்ளும் வெறியாடலுமெனவிளம்புமீரைம்பேர். *௯*

உறைபொருண்மருந்துவாழ்நாளுணவுவெண்கலமேகா - ர
மெறிபடைக்கலத்தின்கூடேயெண்குறித்திறுதிபெய் - - த
ணறியபாற்பிரையிடைச்சொன்னகரநீர்த்துளியிரா - - ரு
மறைமுழைமோதல்பாறைதிரைசிற்றின்மொழியாறு மே.

இதன்பொருள்

(உறையென்பது) பொருள் - மருந்து - வாழ்நாள் - உணவு - வெண்கலம் - உறைப்பு - ஆயுதவுறை - ஓரிலக்கக்குறிப்பு - பாலிடுபிரை - இடைச்சொல் - நகரம் - நீர்த்துளிக்கும்பெயர். (அறையென்பது)மலையினுட்குகை - அறைதல் - பாறை - அலை - சிறு

வீடு - சொல்லுக்கும்பெயரொன்ற வாறு.

இதற்குமேற்கோள்

உறையேயொழுகலுமுணவுமிடைச்சொலும் படைபெய்கூடும்
பாலிடுபிணையும் பொருளுமருந்துமோரிலக்கக்குறிப்பு மாடை
யழுக்கினையகற்றுவானீரும் வாழ்நாளொடுகாரமுநீர்த்துளியு ந
காரமும்வெண்கலமும்பதினென்கே) அறையேகிளவியுமுழைஞ்சு
மோதலுந் திணையும்பாறையுஞ்சிற்றிலுமறுபெயர். *௰*

இறைசிவன்கடன்வேந்தன்கையிறையிறுட்பிறைசிறந்தோ - ன்
சிறுமைபுள்ளிறகுதங்கல்சென்னிகூனிறப்பிரா - - றே
யுறையுளென்பதுநாடூராமுறுதியேநன்மைகல் - - வி
பொறைமலைதுறுகல்பாரம்பொறைசுமைகருப்பம்பூ - மி.

இதன்பொருள்

(இறையென்பது) சிவன் - கடன் - அரசன் - கையிறை - குடியி
றை - உயர்ந்தோன் - அற்பம் - பறவையினிறகு - தங்கல் - தலை -
கூன் - வீட்டிறப்புக்கும்பெயர். (உறையுளென்பது) நாடு - ஊர்
ப்பொதுவுக்கும்பெயர். (உறுதியென்பது) நன்மை - வித்தைக்
கும்பெயர். (பொறையென்பது) மலை - துறுகல் - பாரம் - பொ
றுமை - சுமை - கருப்பம் - பூமிக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

இறையென்பதுவேகடனுஞ்சிறுமையுந் தங்கலும்வீட்டினிறப்
புஞ்சிவனுஞ் சென்னியுமிறுமிறுட்புடன்புட்சிறகு மன்னனுமு
யர்ந்தோருங்கையிறையுங் கூனுமெனவேகூறுமீராறே) உறை
யுளேயூர்ப்பொதுவுஞ்சயனமு மனையுநாடும்வைக்குநாற்பெய
ரே) உறுதியென்பதுகல்வியுநன்மையும் வலியுமெனவேமதிக்கு
மூப்பெயரே)பொறையென்பதுவேமலையும்பொறையுந் துறுக
லும்பூமியும்பாரமுஞ்சுமத்தலுங் கருப்பமுமெனவேகருதுமே
ழ்பெயரே.

*௰௧*

இறும்புதாமரையின்பூவேமலைகுறுங்காடுமேற் - - - கு
மிறும்பூதுதகைமைவெற்போடதிசயங்குறைதூறென்று - ந்
கறங்கலேசுழலலோசைகதிரொன்பதிரவிசோ - - - - தி
பறம்புயர்மலைமுலைப்பேர்பாய்மாவேகுதிரைவேங் - கை.

இதன்பொருள்

(இறும்பென்பது)தாமரைப்பூ - மலை - குறுங்காட்டுக்கும்பெயர். ( இறும்பூதென்பது ) பெருமை - மலை - அதிசயம் - தளிர் - சிறுதூறுகளுக்கும்பெயர். ( கறங்கலென்பது ) சுழலல் - ஒலிக்கும்பெயர். (கதிரென்பது) சூரியன் - பிரகாசத்திற்கும்பெயர். (பறம்பென்பது) மலை - முலைக்கும்பெயர். ( பாய்மாவென்பது ) குதிரை - புலிக்கும்பெயரென்றவாறு.

இதற்குமேற்கோள்

இறும்பென்பதுவேவிளப்புந்தகைமையு மலையுங்குறுங் காடுடனேதாமும் வனசத்தலருமதிக்குமறுபெயர்)இறும்பூதென்பது மலையுந்தகைமையும் வண்டுங்குழையுந்தாமரைப்பூவு மதிசயமுடனேகாந்தட்பூவுஞ் சிறுதூறெனவுஞ்செப்புமெண்பெயரே ) கறங்கலேவளைதடியும்பேயு மொலியுஞ்சுழற்சியுமோதுநாற்பெயரே) கதிரென்பதுவேயிரவியுமதியுங் கதிருமெனவேகழறுமுப்பெயரே )பறம்பேமலையுமுலையுமிருபெயர் ) பாய்மாப்புலியுங்குதிரையுமாகும். ※௰௨※

கூற்றென்பதியமன்சொல்லாங்கோமானேமூத்தோன்பன் - றி
நாற்றநாறுதறோன்றற்பேர்நனவென்பதகலந்தேற் - - ற
மூற்றென்பதூன்றுகோலுமுறவியுமிருபேரோ - - - து
நோற்றலேபொறைதவப்பேர்நுணங்கென்பநுண்மைதேமல்.

இதன்பொருள்

(கூற்றென்பது ) நமன் - சொல்லுக்கும்பெயர். ( கோமானென்பது)மூத்தோன் - பன்றிக்கும்பெயர்.(நாற்றமென்பது)மணத்தல் - தோன்றுதலுக்கும்பெயர். ( நனவென்பது ) அகலம் - தெளிவுக்கும்பெயர். (ஊற்றென்பது) ஊன்றுகோல் - ஊற்றுக்கும்பெயர்.(நோற்றலென்பது)பொறுத்தல் - தவத்துக்கும்பெயர். ( நுணங்கென்பது ) நுண்மை - தேமலுக்கும்பெயரென்றவாறு.]

இதற்குமேற்கோள்

கூற்றேகாலனுங்கிளவியுமிருபெயர்) கோமான்பன்றிமூத்தோனிருபெயர் ) நாற்றந்தோன்றலுநாற்றமுமாகும் ) நனவேயகலமுங்களனுநவிலலுந் தெளிவுமெனவேசெப்புநாற்பெயரே ) ஊற்றென்பதுவேயூன்றுகோலு மூற்றுமெனவேயோதுமிருபெயர் )

நோற்றலென்பதுபொறைதவமிருபெயர்) நுணங்கேநுண்மை தேமலிருபெயர். *௰௩*

கற்பமேபிராமன்வாழ்நாள்கற்பகத்தருசுவர்க்க - - - ம்
பொற்பென்பதழகிஞேடுபொலிவுமொப்பனையுமாகு - ம்
பற்பமேபதுமந்தூளாம்பழங்கணேதுன்பமோ - - சை
யுற்கைதாரகைதீக்கொள்ளியுண்டிதான்புசித்தல்சோ - றே.

இதன்பொருள்

(கற்பமென்பது) பிரமதேவனுயுள் - கற்பகவிருட்சம் - தேவலோகத்திற்கும்பெயர். (பொற்பென்பது) அழகு - பொலிவு - அலங்காரத்திற்கும்பெயர். (பற்பமென்பது) தாமரை - துகளுக்கும்பெயர். (பழங்கணென்பது) துன்பம் - ஒலிக்கும்பெயர். (உற்கையென்பது) வான்மீன் - கடைக்கொள்ளிக்கும்பெயர். (உண்டியென்பது) உண்டல் - சோற்றுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

கற்பம்பிரமனுயுளுஞ்சுவர்க்கமுங் கற்பகத்தருவுங்கழறலாகும்) பொற்பென்பதுவேபொலிவுமொப்பனையும் வனப்புமென்றேமருவுமுப்பெயரோ) பற்பமென்பதோர்புராணமுநீறும் பதுமமுமென்றேபகருமுப்பெயரோ) பழங்கணொலியும்புன்கணும்பழுதும் பயனின்மையுமெனப்பகரலாகும்) உற்கைகடைக்கொள்ளியும்விண்வீழ்கொள்ளியும் வான்மீனெனவுமதிக்குமுப்பெயரோ) உண்டிசோறும்பறவையுணவு முண்டலுமெனவேயோதுமுப்பெயரோ. *௰௪*

முற்றல்காழ்க்கோடன்மூப்புமுடிவுடன்வளைத்தனுற்பே - ர்
நெற்றியேநுதலின்பேருநெடும்படைவகுப்புமாகு - ங்
கொற்றமேவன்மைவெற்றிகோவரசியன்முப்பே - ரோ
யெற்றுதல்புடைத்தலோடேயெறிதலுமிருபேரா - மே.

இதன்பொருள்

(முற்றலென்பது) வயிரங்கொள்ளல் - முதுமை - முற்றுதல் - வளைத்தலுக்கும்பெயர். (நெற்றியென்பது) நெற்றி - படைவகுப்புக்கும்பெயர். (கொற்றமென்பது) வலிமை - விசயம் - அரசியலுக்கும்பெயர். (எற்றுதலென்பது) அடித்தல் - எறிதலுக்கும்

பெயரொன்றவாறு.] இதற்குமேற்கோள்

முற்றலேகாழ்க்கோடலும்வெறுத்தலு முடிவுமுதுமையும்வளை
த்தலுமைம்பேர் ) நெற்றியேநுதல்படைவகுப்பிருபெயர் ) கொ
ற்றமேவலியுமரசினியலும் வெற்றியுமெனவேவிளக்குமுப்பெய
ரோ , எற்றுதலுடைத்தலுமெறிதலுமாகும். *௰ரு*

அறுகென்பசிங்கமோர்புல்யாளியுமாகுமுப்பே - - - ர்
வறிதென்பதருகலேசற்றறியாமையயனில்வார்த் - - தை
மறலியேமயக்கங்கூற்றுமறவிகண்மறதியின - - - - ங்
குறளென்பகுறளும்பேயுங்குறுமையுங்கூறுமுப்பே - - ர்.

இதன்பொருள்

( அறுகென்பது ) சிங்கம் - ஓர்வகைப்புல் - யாளிக்குமபெயர். (வறிதென்பது)குறைதல் - சிறுமை - அறியாமை - பயனிலாமொ
ழிக்கும்பெயர். (மறலியென்பது) மயக்கம் - இயமனுக்கும்பெ
யர். (மறவியென்பது) கள் - மறதி - இழிவுக்கும்பெயர். (குறளெ
ன்பது) குள்ளம் - பிசாசம் - சிறுமைக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

அறுகேயானையுஞ்சிங்கமும்யாளியும் புலியுமோர்புல்லும்பெ
ருந்துமைம்பெயரே ) வறிதேயருகலுஞ்சிறிதுமறியாமையும் ப
யனில்சொல்லும்பகருநாற்பெயரே ) மறலியேமயக்கமுங்கூற்று
மிருபெயர் ) மறவியென்பதுகள்ளுமீனமு மறதியுமென்றேவழ
ங்குமுப்பெயரே ) குறளென்பதும்வபூதமுங்குறளுங் குறுமை
யுமெனவேகூறுமுப்பெயரே. *௰௬*

விறலென்பவலிவென்றிப்பேர்விழைந்தோனேநண்பன்வே ட்
டெறிலென்டவிரைவிரேடுநடக்கமுமிருபேராமே [டோ
நெறிவழிநீதியென்பநிருமித்தல்படைப்பாராய்த - - ல்
பறைபறைவசனத்தோடுபறக்கும்புள்ளிறகுமுப்பே - - ர்.

இதன்பொருள்

(விறலென்பது) வல்லமை - வெற்றிக்கும்பெயர். (விழைந்தோ
னென்பது ) சிநேகிதன் - கணவனுக்கும்பெயர். ( நொறிலென்
பது) சீக்கிரம் - நடக்கத்திற்கும்பெயர்.(நெறியென்பது) வழி -
நியாயத்திற்கும்பெயர். ( நிருமித்தலென்பது ) சிருட்டித்தல் -

ஆராய்தலுக்கும்பெயர். (பறையென்பது) வாச்சியம் - சொல் - பறவையினிறகுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

விறலென்பதுவேபெருமையும்வலியும் வெற்றியுமெனவேவிளம்புமுப்பெயரோ) விறைந்தோனேநண்பனும்வேட்டோனும்) நொறிலேவிரைவுநுடக்கமுமிருபெயர்) நெறியென்பதுதான் செவ்வையும்வழியு நீதியுமெனவேநிகழ்த்துமுப்பெயரோ)நிருமித்தலேபடைத்தலுமாராய்தலும்)பறையென்பதுவார்த்தையும் வாச்சியமும் புள்ளினிறகும்போற்றுமுப்பெயரோ. ✻௰௭✻

றகரவெதுகைமுற்றிற்று. ணகரவெதுகை

மனவுநன்மணிசங்கக்காம்வரைமலையிறைவேய்மட்டா - ந்
தனிதமியொப்பின்மைப்பேர்சாந்தமேகமையுஞ்சாந் - து
முனைபகைநுனிவெறுப்பாமுளைவேயங்குரமேபிள் - - ளை
யினமிருங்கிளையமைச்சாமெழில்வண்ணமிளமைக்கும்பே - ர்.

இதன்பொருள்

(மனவென்பது) மணிப்பொது - சங்கு - அக்குமணிக்கும்பெயர். (வரையென்பது) மலை - கையிறை - மூங்கில் - அளவுக்கும்பெயர். (தனியென்பது) தனி - ஒப்பின்மைக்கும்பெயர். (சாந்தமென்பது) பொறுமை - சந்தனத்திற்கும்பெயர். (முனையென்பது) பகை - நுனி - வெறுப்புக்கும்பெயர். (முளையென்பது) மூங்கில் - முளை - மகனுக்கும்பெயர். (இனமென்பது) சுற்றம் - மந்திரிக்கும்பெயர். (எழிலென்பது) அழகு - இளமைக்கும்பெயரொன்றவாறு.] இதற்குமேற்கோள்

மனவேயாடையுநீலமணியு மணியின்பொதுவுமக்குமணியுஞ் சங்குமெனவேசாற்றுமைம்பெயரோ) வரையேமட்டும்வரையுமூங்கிலுங் கையினில்வரையுநீர்க்கரையுமைம்பெயரோ) தனியேதனியொப்பின்மையிருபெயர்)சாந்தமேசந்தனமுஞ்சமையும்)முனையேயிறைமையும்பகையும்வெறுப்பு முனையுமெனவேமொழியுநாற்பெயரோ) முளையென்பதுவேபிள்ளையுமூங்கிலு மங்குரமெனவுமாகுமுப்பெயரோ) இனமேகிளையுமமைச்சுமிருபெயர்) எழிலேவண்ணமுமிளமையுமாகும். ✻௧✻

ஆனகம்படகத்தின்பேராகுந்துந்துமியுமப்பே - - - ர்
மானமேயளவிலச்சைவிமானமேபெருமைகுற்ற - - - ம்
பானலேபழனநெய்தல்பாங்கரோயிடம்பக்கப்பே - - ர்
மானலேமயக்கமொப்பாம்வருடமேமழையுமாண்டு - ம்.

இதன்பொருள்

(ஆனகமென்பது) தம்பட்டம் - பேரிகைக்கும்பெயர். (மானமென்பது) அளவு - வெட்கம் - விமானம் - பெருமை - குற்றத்திற்கும்பெயர். (பான லென்பது) வயல் - நெய்தலுக்கும்பெயர். (பாங்கரென்பது) இடம் - பக்கத்திற்கும்பெயர். (மானலென்பது) மயக்கம் - ஒப்புக்கும்பெயர். (வருடமென்பது) மழை- வருடத்திற்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

ஆனகமேகற்பகமும்படகமுந் துந்துமியெனவுஞ்சொல்லுமுப் பெயரோ) மானமென்பதும்வவிமானமும்பெருமையு மளவுமில ச்சையுங்குற்றமுமாகும்)பானலேகடல்குதிரைவெற்றிலை பழன நெய்தல்கள்ளெனவறுபெயர்) பாங்கரோயிடம்பக்கமிருபெயர்) மானலென்பதுமயக்கமுமொப்பு மிலச்சையுமெனவேயிசைக் குமுப்பெயரோ) வருடமேமழையாண்டெனவிருபெயர். *உ*

தானமேமதநீராட்டுத்தருகொடைசுவர்க்கநாற்பே - - ர்
மீனமேபருமைபாசிபேடென்பபேடியூ - - - - ரோ
நானமேபூசும்பூச்சுநானமுங்குளிக்குநீரு - - - - ம்
வானமாகாயமென்பமழையுலர்மரமுமா - - - - மே.

இதன்பொருள்

(தானமென்பது) யானைமதம் - நீராடல் - கொடுத்தல் - தேவலோகத்திற்கும்பெயர். (மீனமென்பது) பருமை - பாசிக்கும் பெயர். (பேடென்பது) அலி - ஊருக்கும்பெயர். (நானமென் பது) பூசும்பூச்சு - கஸ்தூரி - குளிக்குநீருக்கும்பெயர். (வானமென்பது) ஆகாயம் - மழை - உலர்ந்தமரத்திற்கும்பெயரொன் றவாறு.]

இதற்குமேற்கோள்

தானமென்பதுகொடுத்தலுஞ்சுவர்க்கமுஞ் மதமுஞ்சாரிடமு

நீராட்டுமைம்பேர்) ஏனம்பருமையும்பாசியுமாகும்) பேடேபூ
ரும்பேடியுமிருபெயர்) நானமென்பதுமணமுங்கவரியும் பூசிய
பூச்சுங்குளித்திடுநீரு நானமுமெனவேநாட்டுமைம்பெயரோ)
வானமேயாகாயமுமழையு முலர்ந்தமரமுமோதுமுப்பெயரோ
*௩*

வானிமேற்கட்டிசேனைவண்டுகிற்கொடிமூப்பே - - ரோ
யானியேமூலநாளுஞ்சேதமுமாகுமென் - - - - - ப
வேனையேயொழிபுமற்றையெனுமிடைச்சொற்குமப் - பே
ராணியம்பொழுதுநாளாமனந்தையோர்சத்திபூ - - - மி.

இதன்பொருள்

(வானியென்பது) மேற்கட்டி - சேனை - துகிற்கொடிக்கும்பெய
ர். (ஆனியென்பது) மூலநட்சத்திரம் - கேட்டிற்கும்பெயர். (ஏ
னையென்பது) ஒழிவு - மற்றையெனுமிடைச்சொல்லுக்கும்பெய
ர். (ஆனியமென்பது) காலம் - நாளுக்கும்பெயர். (அனந்தையெ
ன்பது) ஓர்சத்தி - பூமிக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

வானியேமேற்கட்டியுஞ்சேனையுந் துகிற்கொடியெனவுஞ்சொல்
லுமுப்பெயரோ) ஆனியென்பதுகேடுமோர்மாதமு மூலநாளு
மொழியுமுப்பெயரோ) ஏனையென்பதிடைச்சொலுமொழிபும்)
ஆனியம்பொழுதுநாளுமாகும்) அனந்தையோர்சத்தியும் பூமியு
மிருபேர். *௪*

முன்னலேநினைவுநெஞ்சாமுன்னஞ்சீக்கிரியோடெண்ண - ங்
கன்னல்சர்க்கரைகரும்புகரகநாழிகைவட்டிற்பே - - - ர்
மன்னனுத்திரட்டாதிப்பேர்மன்னவன்றனுமாகு - - - ங்
கின்னரநீர்ப்புள்யாழாங்கிடக்கைபூதலம்பாயற்பே - - ர்.

இதன்பொருள்

(முன்னலென்பது) நினைப்பு - நெஞ்சுக்கும்பெயர். (முன்னமெ
ன்பது) சீக்கிரிமரம் - கருத்துக்கும்பெயர். (கன்னலென்பது) ச
ருக்கரை - கரும்பு - கரகம் - நாழிகைவட்டிலுக்கும்பெயர். (மன்
னனென்பது) உத்திரட்டாதிநட்சத்திரம் - அரசனுக்கும்பெயர்.
(கின்னரமென்பது) நீர்வாழ்பறவை - வீணைக்கும்பெயர். (கிடக்

கையென்பது ) பூமி - மக்கட்படுக்கைக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

முன்னமேலறினைவுநெஞ்சமுமாகும் ) முன்னமேசீக்கிரியுமெண்ணமும் ) கன்னலென்பதுகரகமுங்குடமுங் கரும்புநாழிகையுநாழிகைவட்டிலுஞ் சருக்கரையுடனேசாற்றுமறுபெயர் ) மன்னனென்பதுவேயுத்திரட்டாதியு மன்னனுமென்றேமருவுமிருபெயர் ) கின்னரமேயாழ்நீர்ப்புள்ளிருபெயர் ) கிடக்கைபூதலமும்பாயலுமாகும். *௫*

பின்னையேபின்றைதங்கைபெரியமாற்குரியதே - - - வி
கொன்பயனிலாமைகாலங்கூறியபெருமையச்ச - - - ம்
பொன்னென்பவனப்பிரும்புபூமகள்வியாழநாற்பே - - ர்
மன்னிலைமிகுதிவேந்தேவாழிவாழ்கெனலிடைச்சொ - - ல்.

இதன்பொருள்

( பின்னையென்பது ) பின்பு - இளையவள் - திருமகளுக்கும்பெயர். ( கொன்னென்பது ) பயனின்மை - பொழுது - பெருமை - பயத்திற்கும்பெயர். ( பொன்னென்பது ) அழகு - இரும்பு - இலக்குமி - பிரகற்பதிக்கும்பெயர். ( மன்னென்பது ) நிலை - மிகுதி - அரசனுக்கும்பெயர். ( வாழியென்பது ) வாழ்கெனல் - இடைச்சொல்லுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

பின்னைபின்றோன்றலும்பிற்றைப்போழ்துந் தங்கையுந்திருவுஞ் சாற்றலாகும் ) கொன்னேயச்சமும்பெருமையும்பொழுதும் பயனில்லாமையும்பகருநாற்பெயரே ) பொன்னேமாடையும்பஞ்சலோகமும் வனப்புமிரும்பும்பொலிவும்வியாழமு மிரவியும்பூமகளெனவுமெண் பெயரே ) மன்னேவேந்தனுமசைச்சொலுமிகுதியு நிலையுமெனவேறிகழ்த்துநாற்பேரே ) வாழியேயிடைச்சொல்வாழ்கெனலாகும். *௬*

வன்னியேபிரமசாரிவளர்கிளிசமிசெந்தியா - - - - ஞ்
சென்னிகம்பாணன்சோழன்சிருளியஞ்செம்பாகு - - ங்
கன்னிபெண்ணழிவிலாமைகட்டிளமைக்கும்பே - - ரோ
தென்னிசைவனப்புத்தாழைதெற்கொடுகற்புமா - - மே.

இதன்பொருள்

(வன்னியென்பது) பிரமசாரி - கிளி - வன்னிமரம் - நெருப்புக்கு ம்பெயர். (சென்னியென்பது) தலை - இசைபாடுவோன் - சோழ னுக்கும்பெயர். (சீருளென்பது) ஈயம் - செம்புக்கும்பெயர். (கன்னியென்பது) பெண் - அழிவின்மை - கட்டிளமைக்கும்பெ யர். (தென்னெனென்பது) இசை - அழகு - தென்னமரம் - தெற்கு - கற்புக்கும்பெயரொன்றவாறு.]

இதற்குமேற்கோள்

வன்னியென்பதோர்மரமுங்கிளியும் பிரம சாரியுந் தீயுநா ற்பே ரோ) சென்னியென்பதுவேபாணனுஞ்சிரமுஞ் சோழனுமென் றேசொல்லுமுப்பெயரோ ) சீருளென்பதுசெம்புமீயமும் ) கன் னியேயோராறுமிராசியுங் கற்றாழையுங்கட்டிளமையு ம் பெண் ணு மழிவில்லாமையுந்துர்க்கையுமேழ்பெயர்) தென்னிலாங்கவி யுமிசையும்வனப்புங் கற்பொடுதெற்குங்கருதுமைம்பெய ரோ.

※௭※

குன்றுவேதண்டமாகுங்குறைவொடுசதயமும் - - - பே
ரன்றிலோர்புள்ளுமூலநாளெனவாமிரண் - - - - டே
மன்றமேவெளியினுமம்வாசமம்பலமுமப்பே - - - - ர்
மன்றலேபரிமளப்பேர்மருவுகல்யாணமும்பே - - - ர்.

இதன்பொருள்

(குன்றென்பது) மலை - குறைதல் - சதயநட்சத்திரத்துக்கும்பெ யர். (அன்றிலென்பது) ஓர்பறவை - மூலநட்சத்திரத்திற்கும்பெ யர். (மன்றமென்பது) வெளி - வாசனை - சபைக்கும்பெயர். (மன் றலென்பது) வாசனை - விவாகத்திற்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

குன்றென்பதுவேகுறைவுமலையுஞ் சதயநாளுஞ்சாற்றுமுப்பெ யரோ) அன்றிலென்பதுமூலநாளு மோர்புள்ளெனவுமோதுமிரு பெயர்) மன்றமென்பதுவெளியும்வாசமு மம்பலமெனவுமாகு முப்பெயரோ) மன்றலேபரிமளமும்வதுவையும். ※அ※

தனமுலைபொன்னுங்கன்றுசந்தமுத்தனமைம்போரா - - ங்
கனவுநித்திரைமையற்பேர்கலிங்கஞ்சாதகப்புள்ளா - - டை
கனைசெறிவொலியாமென்பகவரியேசவரிமே - - - - ந்தி
பனுவலேகிளவிநூலாம்படப்பையூர்ப்புறமேதோட்ட - ம்.

இதன்பொருள்

(தனமென்பது) முலை - பொன் - பசுவின்கன்று - சந்தனம் - பசுமுதலியமுப்பொருட்கும்பெயர். (கனவென்பது) நித்திரை - மயக்கத்திற்கும்பெயர். (கலிங்கமென்பது) வானம்பாடி - சீலைக்கும்பெயர். (கனையென்பது) நெருக்கம் - ஓசைக்கும்பெயர். (கவரியென்பது) சாமரம் - எருமைக்கும்பெயர். (பனுவலென்பது) சொல் - நூலுக்கும்பெயர் (படப்பையென்பது) நாட்டிற்புறம் - தோட்டத்திற்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

தனமேயாவின்கன்றுஞ்சந்தமு முலையும்பொன்னு முத்திறமு மைம்பெயரே) கனவேமை௴ லுந்துயிலுமாகும்) கலிங்கமூர்க்குருவியும்வானம்பாடியுங் கலிங்கதேசமுஞ்சீலையுமாகும்) கனையேயொலியுஞ்செறிவுமிருபெயர்) கவரியேதெருமைசாமரங் கவரிமாவெனக்காட்டுநாற்பெயரே) பனுவலேநூல்கிளவி யிருபெயர்) படப்பையென்பதுநாட்டிற்புறமுந் தோட்டமுமெனவேசொல்லுமிருபெயர். *௬*

அனந்தனேசிவன்மால்சேடனலாயுதனருகனே நீ - - தே
யனந்தமேமுடிவிலாமையாடகம்விண்முப்பே - - - ரோ
யனங்கமேயிருவாட்சிப்பேராகுமல்லிகைக்குமப்பே - - ர்
தனஞ்சயன்பார்த்தனேசெந்தழலொருகாற்றுமா - - மே.

இதன்பொருள்

(அனந்தனென்பது) சிவன் - திருமால் - பூமிதாங்கும்பாம்பு - பலபத்திரன் - அருகனுக்கும்பெயர். (அனந்தமென்பது) அளவின்மை - பொன் - ஆகாயத்திற்கும்பெயர். (அனங்கமென்பது) இருவாட்சி - மல்லிகைக்கும்பெயர். (தனஞ்சயனென்பது) அருச்சுனன் - நெருப்பு - தசவாயுவிலொன்றுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

அனந்தனேசிவன்மாயனருக னனந்தனொடுபல தேவனைம்பெயரே) அனந்தமென்பதுமுடிவிலாமையும் விண்ணொடுபொன்னு மிவ்விதிகழுமுப்பெயரே) அனங்கமல்லிகையுமிருவாட்சியுமாம்) தனஞ்சயனென்பதோர்காற்றுந்தீயு மருச்சுனனெனவுமறையு முப்பெயரே. *௭*

சானகிசீதைமூங்கிறனுவென்பதுடல்வில்லற்ப - - - ஞ்
சானுவேமலேமுழந்தாண்மலேப்பக்கந்தானுமாகு - - ஞ்
சோவணயேயோணநாளும்விடாமழைசொரிதலும்பே - ர்
கானலேமலேச்சார்சோலேகடற்கரைச்சோலேபேய்த்தே - ர்.

இதன்பொருள்

(சானகியென்பது) சீதை - மூங்கிலுக்கும்பெயர். (தனுவென்பது)உடம்பு - வில் - சிறுமைக்கும்பெயர்.(சானுவென்பது)மலே - முழங்கால் - மலேச்சாரலுக்கும்பெயர். (சோணேயென்பது) திருவோணநாள் - விடாதுபெய்மழைக்கும்பெயர். (கானலென்பது) மலேச்சார்சோலே - கடற்கரைச்சோலே - கானலுக்கும்பெயரொன்றவாறு.]

இதற்குமேற்கோள்

சானகிசீதையுமூங்கிலுமாகும்) தனுவேவில்லுமுடலுமோசையுநுட்பமுமெனவேநுவலுநாற்பெயரோ) சானுமலேயுமலேயின்சாரலு முழந்தாளெனவுமொழியுமுப்பெயரோ)சோணேயென்பதுவிடாதுபெய்மழையுந் திருவோணமுமெனச்செப்புமிருபெயர்) கானலேயாதித்தகிரணமு மலேச்சாரலிற்கடற்கரையிற்சோலேயும்பேய்த்தேருடனுப்பளமுமைம்பெயரோ. *ருக*

வானென்பவிசும்புமேகமழையொடுபெருமைநாற்பே - ர்
தானேயேசேனேயாடைபடைக்கலந்தானுமாகு - - - ங்
கானந்தேரிசையேபேதைகாடுதற்பாடியைம் - - - பே
ரோனலேசெந்திணேப்பேர்திணேப்புனமென்றுமா - - மே.

இதன்பொருள்

(வானென்பது) ஆகாயம்-மேகம் - மழை - பெருமைக்கும்பெயர்.(தானேயென்பது) சேனே - வஸ்திரம் - ஆயுதப்பொதுவிற்கும்பெயர். (கானமென்பது) தேர் - இராகம் - அறிவிலி - காடு - வாணம்பாடிக்கும்பெயர். (எனலென்பது) செந்திணே - திணேப்புனத்திற்கும்பெயரொன்றவாறு.]இதற்குமேற்கோள்

வானேபெருமையுமழையும்புயலும் விண்ணுமமுத்துமேவுமைம்பெயரோ)தானேயேபொருபடையுந்தூசு மாயுதமெனவுமறையுமுப்பெயரோ) கானமென்பதுவேயிசையும்வனமும் பாடியும்பேதையுந்தேருமென்றைம்பேர்) எனல்செந்திணேயும்பைந்திணேயுந்திணேப் புனமுமென்றேபோற்றுமுப்பெயரோ. *ருஉ*

முனியென்பதியாவணக்கன்றுமுனிவன்வில்லகத்திநாற்பே - ர்
துனியென்பபுலவிநீட்டந்துன்பநோயாறுகோப - - ம்
பனியென்பநடுக்கந்துன்பம்பயங்குளிரிமைம்பே - ரோ
சினையென்பமுட்டைபிளாமரக்கொம்புஞ்செப்புமப்பே - ர்.

இதன்பொருள்

(முனியென்பது) யானைக்கன்று - தவத்தோன் - வில் - அகத்திக்கும்பெயர். (துனியென்பது)புலவிநீட்டம் - துன்பம் - வியாதி - நதி - கோபத்திற்கும்பெயர். (பனியென்பது) நடுக்கம் - துன்பம் - அச்சம் - குளிர்ச்சி - பனிக்கும்பெயர். (சினையென்பது )முட்டை - கருப்பம் - மரக்கொம்புக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

முனியேயிருடியும்யானைக்கன்றும் வில்லுமகத்தியுமேவுநாற்பெயரோ) துனியே துன்பமும்புலவிநீட்டமுங் கோபமுநோயுங்குடிநையுமைம்பேர் ) பனியேயிமமுங்குளிருமச்சமுந் துன்பமுநடுக்கமுஞ்சொல்லலாகும் ) சினையேமுட்டையும்பிளுமுறுப்புமரக்கோடெனவும்வைக்குநாற்பெயரோ. *௰௩*

மானேசாரங்கமாவின்பொதுவொடுமகரரா - - - - சி
கானேநன்மணங்காடென்பகல்லியூர்க்குருவியா - - மை
யேனுதிமஞ்சிகன்மந்திரியுந்தந்திரியுமென் - - - - ப
மீனேசித்திரைநாள்வான்மீன்மயிலையுமேவுமப்பே - - ர்.

இதன்பொருள்

(மானென்பது)மான் - விலங்கின்பொது - மகரராசிக்கும்பெயர். (கானென்பது ) வாசவண - காட்டிற்கும்பெயர். ( கல்லியென்பது)ஊர்க்குருவி - ஆமைக்கும்பெயர்.(ஏனுதியென்பது) நாவிதன் - மந்திரி - படைத்தலைவனுக்கும்பெயர். (மீனென்பது)சித்திரைநட்சத்திரம் - விண்மீன் - மீனுக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

மானேயுழையுமகரராசியும் விலங்கின்பொதுவும்விளம்பலாகும்) கானேகாடுமணமுமிருபெயர் ) கல்லியூர்க்குருவியுங்கமடமுமாகும்) ஏனுதிசேனைத்தலைவனுமறவனு மந்திரியொடுநாவிதனுமாகும் ) மீனேவிண்மீன்சித்திரைநாளொடு மீனுமெனவேவிளம்புமுப்பேரோ. *௰௪*

ஞானமேயறிவுகல்விநல்லதத்துவநூன்மூப்பே - - - ர்
யானமேமரக்கலத்தோடெழிலூர்திவிகற்பிரண் - - - டா
மேனமோலைக்குடைப்பேரொறுழியுமறமுமப்பே - - ர்
மேனியேவடிவமென்பநிறத்தையும்விளம்பலா - - மே.

இதன்பொருள்

(ஞானமென்பது) அறிவு - வித்தை - ஞானநூலுக்கும்பெயர். (யானமென்பது) நாவாய் - வாகனவிகற்பத்துக்கும்பெயர். (ஏனமென்பது) ஓலைக்குடை - பன்றி - பாவத்திற்கும்பெயர். (மேனியென்பது) உருவம் - காந்திக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

ஞானந்தானேயறிவுங்கல்வியுந் தத்துவநூலுஞ்சாற்றுமுப்பெயரோ) யானமறைவீடுமூர்தியுந்தோணியும்) ஏனந்தானேபன்றியும் பாவமு மோலைக்குடையுமென்றேருதுமுப்பெயரோ) மேனியுடம்புநிறமுமாகும். *௰௫*

அன்னையேமூன்பிறந்தாடோழிதாயாகுமென் - - - ப
வன்னமோதிமமேசோறுமாகாரமுடனெய்யுண் - - - டி
தன்மையேரியல்பிறேடுதன்மையினிடமுஞ்சாற்று - - ம்
பன்னலேநெருக்கம்வார்த்தைபருத்தியின்பேருமா - மே.

இதன்பொருள்

(அன்னையென்பது) அக்காள் - தோழி - தாய்க்கும்பெயர். (அன்னமென்பது) அன்னப்புள் - சோற்றுக்கும்பெயர். (ஆகாரமென்பது) உடம்பு - நெய் - உணவுக்கும்பெயர், (தன்மையென்பது) அழகு - குணம் - தன்மையிடத்திற்கும்பெயர். (பன்னலென்பது) நெருக்கம் - சொல் - பருத்திக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

அன்னைதானேதாயுந்தோழியு மூன்பிறந்தாளுமொழியுமுப்பெயரோ) அன்னமோர்புள்ளுஞ்சோறுமிருபெயர் ) ஆகாரமென்பதானும்வடிவு நெய்யுமெனவேநிகழ்த்துமுப்பெயரோ)தன்மையென்பதோரிடமுமழகு மியல்புமெனவேயியம்பலாகும்)பன்னருனேநெருக்கலுந்தேர்தலும் பருத்தியுஞ்சொல்லும்ப கருநாற்பெயரோ. *௰௬*

வனமேநீர்மிகுதிகாடுவளர்சோலைதுளசியோ - - - - - ம
மனுவேமந்திரமோர்நூலாமண்ணேயிளமைமூட - - ன்

புவணயென்பதழகினோடுபொலிவுமொப்பவணயுமா - - கு
மனையென்பமனைவிவீடாம்வதுவையேமணங்கல்யாண - ம்.

இதன்பொருள்

(வணமென்பது) நீர் - மிகுதி - காடு - சோலை - துளசி - சுடுகாட்டுக்கும்பெயர். (மனுவென்பது)மந்திரம் - ஓர்தருமநூலுக்கும்பெயர். (மண்ணையென்பது) பிசாசம் - இளமை - அறிவிலானுக்கும்பெயர். (புனையென்பது) அழகு - பொலிவு - அலங்காரத்திற்கும்பெயர். (மனையென்பது) இல்லாள் - வீட்டிற்கும்பெயர். (வதுவையென்பது) வாசவண - விவாகத்திற்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

வணமேநீரும்வனப்புமீமமுந் துழாயுமிகுதியுங்காடுஞ்சோலையும் புற்றுமெனவேபுகலுமெண்பேரோ ) மனுவோர்தருமநூலுமந்திரமும்) மண்ணைதானேயிளமையும்பேயு மறிவிலானுமாகுமப்பெயரோ) புனைவுவனைதலுமெழிலும்பொலிவு மொப்பனையெனவுமுரைக்கலாகும் ) மனையேயில்லுமனைவியுமாகும் ) வதுவையேகலியாணமுநாற்றமும். ＊௰எ＊

அன்வினையொடுபெயர்க்கும்விகுதிசாரியையுமா - - கு
மன்னிடுங்கனைத்தலென்பதிருளோசையிருபேர்வைக் - கு
மின்னனவொருசொற்பல்பேர்க்கியற்கவிமுந்நூற்றோன்பா ன்
சொன்னவன்குணபத்திரன்றாள்சூடுமண்டலவன்று - னே.

இதன்பொருள்

(அன்னென்பது) வினைவிகுதி - பெயர்விகுதி - சாரியைக்கும்பெயர். (கனைத்தலென்பது) இருள் - ஒலிக்கும்பெயரொன்றவாறு.

இதற்குமேற்கோள்

அன்னேவிகுதியுஞ்சாரியையுமாகும் ) கனைத்தலிருளுமோசையுங்காட்டும். ＊௰அ＊ ணகரவெதுகைமுற்றிற்று.

ஆ எதுகை - ௰அஇ - விருத்தம் - ௩௱௬௰ - காப்பு - க - ஆ ௩௱௰
முற்றிற்றுமுற்றும்.



# பெயரகராதி.

இப்பெயர்களைப்பாட்டின்பொருளிற்காண்க.

இத்தொகுதிக்கண்ணமைந்தபலபொருள்
குறித்தவொருசொல்லாகியதிரிசொல் - ௩௫௭௫

அகராதிமுற்றிற்று.

## அரும்பொருள்.

பக்கம். வரி.

௫௧ - ௨௯ - பற்று - அன்பு
௱௪௩ - ௨௰ - வச்சிராங்கி - காலமூர்த்தியகுறி
௱௬௫ - ௬ - இ[illegible]யிடு - இடையிடுதல் - அல்லது - தடை
இன்னுமரும்பொருள்களுள்ளனவாயின்சான்றோரிலக்கியங்கண்டுநன்குணர்க.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தல். | தள்ளல். |
|---|---|---|---|---|
| ௭ - | ௰ | பேயரோ - | பெயரோ | |
| ௭ - | ௧௧ | வெராஞ் - | வேராஞ் | |
| ௧௨ - | ௧௪ | பஞ்சிநால் - | பஞ்சினூல் | |
| ௨௯ - | ௧௯ | உறிதி - | உறுதி | |
| ௩௰ - | ௧௩ | ரோண்ணு - | ரொண்ணு | |
| ௩௨ - | ௨௧ | ஒடைட - | ஒடை | |
| ௪௮ - | ௧௬ | பகைஞ்ர் - | பகைஞர் | |
| ௬௮ - | ௯ | சன்னம் - | சனனம் | |
| ௭௭ - | ௨௬ | மூச்சீர் - | முச்சீர் | |
| ௯௬ - | ௨௮ | வாயமை - | வாய்மை | |
| ௱௨ - | ௨௪ | மேடைட் - | மேடை | |
| ௱௪ - | ௨௰ | மகிலும் - | மகிலு | |
| ௱௫ - | ௬ | பேரொ - | பேரோ | |
| ௱௭ - | ௰ | மாரியேன் பது | மாரியென் பது | |
| ௱௯ - | ௨௩ | மாமெ - | மாமே | |
| ௱௧௧ - | ௨ | யாணே - | யானே | |
| ௱௧௭ - | ௨௮ | - - - | புழமு - | பாலைக்கிழத் |
| ௱௧௮ - | ௨ | - - - | கனி - - | கன்னி [தி |
| ௱௨௮ - | ௧௨ | வேட்கையுப | வேட்கையும் | |
| ௱௩௪ - | ௭ | யென்நு - | யென்பது | |
| ௱௭௨ - | ௩௰ | சுவர்க்கமு ஞ் | சுவர்க்கமு | |
| ௱௭௯ - | ௨௰ | அன்னைபெ ன்பது | அன்னையெ ன்பது | |

